உங்கள் குழந்தையை

# பேதி மருந்துக்கு அடிமையாக விடாதீர்





கடுமையான பேதி மருந்துகள் வயது வந்தோரின் குடலைக்கூட பலவீனப்படுத்திவிடும்... குழந்தைகளுக்கு அவை எவ்வளவு தீங்குசெய்யும் என்பதை சற்று நினைத்துப்பாருங்கள்! கடுமையான பேதி மருந்துகளை உட்கொண்டால் குழந்தைகளின் குடல்கள் இயற்கையாக இயங்கும் தன்மையை இழக்கின்றன; உங்கள் குழந்தை பேதி மருந்துகளுக்கு அடிமையாக நேரிடும். இதற்கு இடம் தராதீர்! உண்மையான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியாவைக் கொடுங்கள்

பிலிப்ஸ் மிகவும் இதமானதால் குழந்தைகளுக்கும் சிபார்சு செய்யப்படுகிறது.....ஆயினும், வயது வந்தோரும் முதல் தடவை உபயோகத்திலேயே மலச்சிக்கலிலிருந்து பூரண நிவாரணம் பெறும் வகையில் அது பலன் தரத் தக்கது.

**மீண்டும் இந்தியாவில் கிடைக்கிறது.**

பிரசித்தமான பிலிப்ஸ் சுவைக்கும், தரத்திற்கும் உத்தரவாதமளிக்கும் புதிய, திறக்கப்படாத சீலிட்ட மூடியுள்ள புட்டிகளில் 2 அவுன்ஸ், 4 அவுன்ஸ், 12 அவுன்ஸ் அளவுகளில் கிடைக்கிறது.





பிலிப்ஸ் குணமளிப்பது இவ்வாறே... 1. கடுமையான பேதி மருந்துகளைப் போலன்றி பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியா காய்ந்து போய் அடைத்துக் கிடக்கும் கழிவுப் பொருள்களை ஈரப்படுத்தி, அவற்றை உங்கள் உடலிலிருந்து வெளிப்படுத்த, வலி அல்லது தளர்ச்சி ஏற்படாமல் தசை நார்களை இதமாக ஊக்குகிறது.

2. பேதிப்பது மட்டுமே செய்யும் பேதி மருந்துகளைப் போலன்றி பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஸியா உங்கள் வயிற்றைச் சில விநாடிகளிலேயே சமனப்படுத்தி நிவாரணத்தைப் பரிபூரணமாக்குகிறது. ஜீரண உறுப்புகளைச் சரியான சம நிலைக்குக்கொண்டு வருகிறது. வாயு உபாதைகளையும், வயிற்றில் எரிச்சலையும், அதிகரித்த அமிலத்தால் ஏற்படும் அஜீரணத்தையும் நிவர்த்திக்கிறது.




# பி லி ப் ஸ்

உண்மையான மில்க் ஆப் மக்னீஸியா

பூரண விநியோகஸ்தர்கள்:

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்

கல்கத்தா-பம்பாய்-டெல்லி-சென்னை-பாட்னா-கௌஹாத்தி-கட்டாக்

பிப்ரவரி
வெளியீடு

புத்தா
பிக்சர்ஸ்

# பாவ மன்னிப்பு

டைரக்ஷன்
A. பீம்சிங்




ஸ்டுடியோ
ஏவிஎம்

BAKTHA

### திட்டமிட்ட இலக்கை அடைவதே

# கடும் சோதனையின் லட்சிய வெற்றி

பந்தயத்திலே வெற்றி. ராயல் என்பீல்ட் மோட்டார் சைக்கிள் முழுதுமே தற்போது இந்தியாவில் தயாராகிறது. நமது தேசத்திலே இப்பொழுது தயாரிக்கப்படாத ஒரு சில பாகங்களேதான் வருங்காலத்திலே இறக்குமதி செய்யப்படும்.

இறக்குமதிகளையே நம்பியிருக்க வேண்டிய அவசியமில்லாது வெகு துரிதமான முன்னேற்றத்தைக் கண்டு நாம் பெருமைப் படுகிறோம்.

**திட்டத்தின் குறிக்கோள்**

நடப்பு ஆண்டின் மத்தியில் ஸ்கூட்டர்களின் உற்பத்தியை துவக்குவோம். அதே சமயத்தில், ஸ்கூட்டர்கள், இலகு - கன மோட்டார் சைக்கிள்களுக்கு பொருத்தக் கூடிய புகழ்பெற்ற வில்லியர்ஸ் என்ஜின்களையும் தயாரிக்க உத்தேசித்துள்ளோம். நாட்டில் நாளுக்கு நாள் அதிகரித்து வரும் கைத்தொழில் மற்றும் விவசாய சாதனங்களின் பெரும்பாலான தேவைகளைத் திருப்திகரமாகப் பூர்த்தி செய்யக்கூடியது வில்லியர்ஸ் என்ஜின்கள்.



# ராயல் என்பீல்ட்

தயாரிப்பவர்கள்:
என்பீல்ட் இந்தியா லிமிடெட்
சென்னை - 19

பூரண விற்பனை ஏஜெண்டுகள்:
மதராஸ் மோட்டார்ஸ் பிரைவேட் லிட்.
சென்னை - பெங்களூர் - டெல்லி

பொங்கலுக்கு
நீங்கள் விரும்பும்

கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி
ஆடைகள்

ஆடைக்கும்
இதர பல
அலங்கார
வகைக்கும்

பொங்கல் தள்ளுபடி
(சென்னை ராஜ்யத்தில்
மட்டும்)
ரூபாய்க்கு 5 ந. பை.
(வழக்கமான 5 ந. பை.
தள்ளுபடியுடன்)
7-1-61 முதல்
14-1-61 வரை

எங்கள் எல்லா எம்போரி
யங்களிலும் டிப்போக்
களிலும் கிடைக்கும்.

சென்னை ராஜ்ய
கைத்தறி நெசவாளர்
கூட்டுறவு சங்கம்
லிமிடெட்
எழும்பூர், சென்னை-8




சிகரெட் உற்பத்திக்கான ஆள்பலம், நிதி, பொருள் நிறைவு ஆகிய எவ்வளவோ வசதிகள் நம் நாட்டுக்கு உள்ளன. எனினும் பாரதத்திலே, சிகரெட்டுத் தொழில் தனக்குரிய உயர் நிலையை இன்னும் எய்த முடியவில்லையென்றால், அது இந்திய மூலதனம் சுணங்கிப்போயிருக்கிறது என்பதனாலோ, அல்லது தேர்ச்சிவாய்ந்த தொழிலினம் இல்லாமையாலோ அல்ல. ஆனால் இந்தியாவில் வாணிபக் கூட்டுறவு அமைந்த அந்நியர்களின் ஏகபோக உரிமையாட்சியினால்தான்.

## புகையிலையின் வரலாறு ... 9

Panama

20

CIGARETTES

# பனாமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசீய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 709 TM

Greens' Advtg.

# கல்கி



## பொருளடக்கம்






"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.




குளிர்ச்சியையும் சுக க்ஷவரத்தின் வழு வழுப்பையும் அளிப்பது

ஜலி-கூல்

க்ஷவரத்திற்குப் பின் உபயோகிக்கும் லோஷன்

முகக்ஷவரம் செய்துகொண்ட பின், ஜலி-கூல் லோஷனை உபயோகியுங்கள். நீங்கள் குளிர்ச்சியையும் புத்துணர்ச்சியையும் பெறுவீர்கள். ஜலி-கூல் லோஷன்—சிறு கத்தி காயங்களை ஆற்றுகிறது. மேலும், இது புருஷர்களுக்கான வாஸனையுடன் மணமுள்ளது. எல்லா இடங்களிலும் கிடைக்கும்.

PEARLINE PARIS PRIVATE LTD.,
P. O. Box 493, Bombay-1.






மலர் 20

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

இதழ் 24

# பொங்கல் திருநாள்

பிராணிகளின் வாழ்க்கை வளர்ச்சிக்கும் போஷணைக்கும் தாவர வாழ்க்கை அவசியம். மழை மூலமும், தட்சிணாயன காலத்தில் விழும் பனி மூலமும் தாவர உலகம் முழுவதுமே தங்களுக்கு வேண்டிய போஷணைகளைப் பெற்று சூரியனின் வெப்பத்தினால் உத்தராயண காலத்தில் பலன் அடைகின்றன.

கருணாமூர்த்தியான நாராயணன்தான் சூரியனில் அந்தர்யாமியாக இருக்கிறார். இந்தப் போஷணைக்கும் பலனுக்கும் மூலாதாரமாக இருப்பவர் அவரே. எனவே மனித வாழ்க்கையைப் போஷித்து வளர்க்கும் பயிர்களையும் காய்கறிகளையும் நாம் பொங்கல் புதுநாள் அன்று ஆண்டவனுக்குப் பக்தி சிரத்தையுடன் அளிக்கிறோம். ஆண்டவனுக்கு இவைகளைப் படைக்காமல் வயிற்றுக்காக மட்டும் தேவைப்படும் இந்தப் பொருள்களை உண்டால் நாம் உயர்வதற்குப் பதிலாகத் தாழ்ந்து போவதற்கு இவை வழி ஏற்படுத்தி விடும்.

மகர சங்க்ராந்தி தினத்தன்று சூரியனை நாம் பூஜிக்கிறோம். சூரியன் மூலம் ஈசுவரன் நமக்கு வாழ்க்கையின் தேவைகளை வழங்குகிறான். பூஜையில் வைக்கும் பசுமஞ்சள் மங்களத்தின் சின்னமாகும். வாழ்க்கையின் இனிப்பான அம்சங்களையெல்லாம் கரும்பு பிரதிபலிக்கிறது. தான்யங்கள், வாழைப்பழம், தேங்காய் முதலியவை யெல்லாம் இப் பருவகால சுபிட்சத்தின் அறிகுறி. சர்க்கரைப் பொங்கலுடன் இந்தப் பொருள்களையும் சேர்த்து நாம் சூரியனுக்குப் படைக்கிறோம். யாதவர்கள் ஆண்டவனின் இந்தப் பிரசாதங்களைக் காளை மாடுகளுக்கும் பசு மாடுகளுக்கும் சமர்ப்பிக்கிறார்கள்.

சுபிட்சத்தையும் செழுமையையும் மங்களத்தையும் பிரதிபலிக்கும் இப்பொங்கல் கொண்டாட்டம், நமது வாழ்க்கையை ஆதரிக்கும் நல்ல பொருள்கள் எல்லாம் ஏராளமாகப் பெருக்கெடுத்து ஓடுவதை நம்மெல்லோருக்கும் ஞாபக மூட்டுகிறது. இவைகள் எல்லாம் கருணாமூர்த்தியான பகவானின் பிரசாதங்கள் என்பதையும் எழுத்து வாசனையில்லாத மக்கள் உள்பட நம்மெல்லோருக்கும் ஞாபகமூட்டுகிறது. சங்க்ராந்தியன்று சூரியன் உத்தராயணத்தில் பிரவேசிக்கிறான். பரமாத்மாவைப் பக்தன் அடையும் மார்க்கமாக உத்தராயணத்தை பகவத்கீதையும் உபநிஷத்துகளும் போற்றுகின்றன. இறைவனின் திருவருளால் சுபிட்சமும் ஆத்மீக உயர்வும் பொங்கிப் பெருகட்டும். இன்றைய உலகுக்கு சுபிட்சமும் ஆத்மீக உயர்வும் தான் மிகமிகத் தேவையாக இருக்கின்றன.

— ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகள், காஞ்சி காமகோடிபீடம்



# பசப்பலுக்கு மயங்காதீர்!

பொங்கல் புதுநாள் என்றாலே விவசாயிகளின் திருநாள். இத் ஒருநாளின் போது விவசாயிகளின் நிலையைப் பற்றிச் சற்று பார்ப்போம்.

விவசாயிகள் என்றால் நிலச் சொந்தக்காரர்கள், நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துச் சாகுபடி செய்வோர், நிலத்தில் எந்தவித உரிமையுமின்றிக் கூலிக்கு வேலை செய்வோர் என்று மூன்று வகையினர் உண்டு.

காங்கிரஸ் கட்சி குத்தகைதாரர்களின் நலனில்தான் அக்கறை கொண்டிருப்பதாகச் சொல்லிக் கொள்கிறது. இவர்கள் வாழ்வு வளம் பெறத்தான் விவசாயச் சட்டங்கள், நில உச்சவரம்புச் சட்டங்கள் எல்லாம் கொண்டு வருவதாகச் சொல்லுகிறது. இவர்கள் வாழ்வு சிறக்கவே, சொந்தக்காரருக்கும், சாகுபடியாளருக்கும் மகசூலில் அறுபது நாற்பது சதவிகிதம் பங்கு என்றிருந்ததை நாற்பது அறுபது என்று மாற்றியிருப்பதாகச் சொல்லிக் கொள்கிறது. ஏனெனில் இவர்களிடம்தான் தேர்தல் பெட்டியை நிரப்பக்கூடிய சக்தியிருக்கிறது.

நிலச் சீர்திருத்தம் என்ற பெயரில் காங்கிரஸ் இடைவிடாமல் செய்து வந்த இந்தக் காரியங்கள், குத்தகைதாரர்களை, நிலச் சொந்தக்காரர்களை விட மிக முக்கியமும் சக்தியும் வாய்ந்தவர்களாகச் செய்து விட்டது. நிலச் சொந்தக்காரரை அப்புறப்படுத்துவது எளிதாகப் போய்விட்டது. ஆனால் குத்தகைக்காரர்களை அப்புறப் படுத்துவது என்பது முடியாது!

பாடுபடுபவனுக்கும் பயனை அனுபவிப்பவனுக்கும் இடையே, நிலச் சொந்தக்காரனை அப்புறப்படுத்தி விட்டு, காங்கிரஸ் சர்க்கார் ஓர் உரிமையுமில்லாத குத்தகைதாரனை சர்வ வல்லமை பொருந்தியவனாக்கி விட்டது. இவர்களின் அலட்சியப் போக்கின் காரணமாக உண்மையாகப் பாடுபடும் விவசாயக் கூலிகளின் நிலைமை படு மோசமாகி விட்டது! அவர்களது உண்மையான நிலை என்னவென்பதைச் சர்க்கார் நியமித்த கமிட்டியின் அறிக்கை வெகு தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.

விவசாயிகளில் பெருந் தொகையினரான விவசாயக் கூலிகளின் வருமானம் பெருமளவு குறைந்திருக்கிறது. இவர்களிடையே வேலையில்லாக் கொடுமை அதிகரித்திருக்கிறது. 1951-ல் ஆண்டுக்கு 90 நாட்கள் வேலையில்லாமல் இருந்தார்கள் என்றால், 1957-ம் ஆண்டு 128 நாட்கள் வேலையில்லாமல் இருந்திருக்கிறார்கள். முன்பு 108 ந. பையாக இருந்த கூலி இப்போது 96 ந. பையாகக் குறைந்து விட்டது. இந்த மக்களின் கடன் சுமை 1950ல் 80 கோடி ரூபாயாக இருந்தது 1956ல் 143 கோடியாக

## கிரிக்கட் சீசனில் அப்பளம் இட்டால்...?



# சேதி தெரியுமா?

சாமா



சோஷலிஸ தீபம்
மக்கள்
பவநகர் காங்கிரஸ்




பழைய நிலைமை
ஐ.நா
இன்றைய நிலைமை
ஐ.நா




பிராமணர்கள் ஒழிக!
காங்கிரஸ்




ஜெயப் பிரகாஷ்




எங்கும் பஞ்சாயத்து
ராஜ்யம் என்பதே பேச்சு!

உயர்ந்து விட்டது. முன்பு நூற்றுக்கு 45 குடும்பங்கள் கடன் தொல்லையினால் அவதிப்பட்டன என்றால் 1957 ல் 64 குடும்பங்கள் அவதிப்படுகின்றன. ஒவ்வொரு வருஷமும் இந்த ஏழை மக்கள், தங்கள் ஒவ்வொருவருடைய குடும்ப சம்ரக்ஷணைக்காகவும் ரூ. 180 வரை கடன்படுகிறார்கள் என்று புள்ளிக்கணக்கு கூறுகிறது. அதாவது நிலத்தில் வேலை செய்து பிழைக்கும் ஏழை ஹரிஜன மக்கள் படும் கஷ்டம் சொல்லி முடியாது என்பதுதான் அதன் பொருள்!

இந்தப் படுமோசமான நிலைக்குக் காரணம் யார்? காங்கிரஸின் கொள்கைகளும் ஆட்சி முறையுமே இதற்குக் காரணம் என்று சொல்லித்தான் ஆக வேண்டியிருக்கிறது. ஏழைகளை உயர்த்துவதற்காக சோஷலிஸம் கொண்டு வருவதாகக் காங்கிரஸ் கூறியது. உண்மையில் ஏழைகள் இன்னும் படுமோசமான ஏழைகளாகி யிருக்கிறார்கள்.

தமது நிலத்தில் வேலை செய்யும் ஹரிஜன உழவனின் வீட்டில் கல்யாணம் என்றால் நிலச் சொந்தக்காரர் மகிழ்ச்சியுடன் நிதி உதவுவார். அவன் வயலுக்கு உரமிடப் பணம் தேவையென்றால் கொடுப்பார். மொத்தத்தில், இவர்கள் இருவரிடை யிருந்த நேசத்தை வளர்த்து, ஏழையின் வாழ்வைச் சிறக்கச் செய்வதற்குப் பதில், காங்கிரஸ் சர்க்கார் வெற்றிகரமாகத் துவேஷ விதையை விதைத்ததின் பயனாக, நிலம் படைத்தவர் அக்கறை யிழந்து சோம்பிக் கிடக்கிறார்; ஏழை விவசாயியின் ஏழைமையும் அதிகமாகியுள்ளது!

காங்கிரஸ் தனது சோஷலிஸக் கொள்கையைக் கடைப்பிடிக்க நிலத்துக்கு உச்ச வரம்பு கட்டப் போவதாகக் கூறியதும், நிலச் சொந்தக்காரர்களுக்கு நிலத்தில் அக்கறை அற்றுப் போய்விட்டது. நிலத்தில் பாடுபட்டு வேலை செய்யும் பாட்டாளிக்கும் நிலம் படைத்தவருக்குமிடையே இருந்த அன்பும் நேசமும் அற்றுப் போய் விட்டன.

'நாம் ஏழைகளுக்கு உதவிக் கொண்டிருக்கிறோம் என்பது பொய் என்பதை இந்த அறிக்கை பகிரங்கப்படுத்தி விட்டதே' என்று இந்த அறிக்கையைப் பார்த்து விட்டு, இன்றையக் காங்கிரஸ் சர்க்கார் கையைப் பிசைந்து கொண்டிருக்கிறார்கள்.

இதற்குப் பரிகாரம் காண, காங்கிரஸ் சர்க்கார், இந்த ஏழை உழவர்களுக்குக் கட்டாயமாக இவ்வளவு கூலி தரவேண்டும் என்று சட்டம் செய்வோம் என்று சொல்ல ஆரம்பிப்பார்கள். கூலியை அதிகமாக்கி விட்டு, அதனால் உணவுப் பொருள்களின் விலையை உயரச் செய்து விட்டால், இந்தக் கூலி உயர்வால் அவர்களுக்கும்தான் என்ன லாபம்?

காங்கிரஸ் ஆட்சியில், கஷ்டங்களும், துயரங்களும் இன்னும் அதிகமாக ஏற்படத்தான் வழியிருக்கிறது என்பதைப் பவநகரில் கூடிய காங்கிரஸ் தெளிவாக்கி விட்டது. ஆகவே, காங்கிரஸின் இந்தப் பசப்பு வார்த்தைகளுக்கு மயங்க முடியாது என்று இந்தப் பொங்கல் திருநாளில் தமிழ் நாட்டு மக்கள் உறுதி பூண வேண்டும்.

# என்ன சேதி?

## ஈழத்துச் சிறுகதைப் போட்டி முடிவு

தமிழர் திருநாளான இந்தப் பொன்னாளிலே, 'கல்கி' ஈழத்துச் சிறுகதைப் போட்டியை வெற்றிகரமாக நடத்தித் தந்த எழுத்தாள நண்பர்களனைவருக்கும் எங்கள் பொங்கல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். ஏராளமான ஈழத்து எழுத்தாளர்கள் உற்சாகத்துடன் கலந்துகொண்டிருக்கிறார்கள். மொத்தம் 542 கதைகள் இப்போட்டிக்கு வந்தன. போட்டியில் வெற்றி பெற்ற எழுத்தாளர்கள் அனைவரும் ஈழத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை இரட்டிப்பு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். இந்தப் போட்டியில் பரிசு பெற்றவர்கள் விவரம் வருமாறு:

முதற் பரிசு ரூ. 200

**நந்தாவதி:** திரு சி. ஆறுமுகம் (நவம்), அரசினர் தமிழ்ப்பாடசாலை, கிரான் முறக்கட்டான் சேனை.

இரண்டாவது பரிசு ரூ. 100

**அனுலா:** திரு அ. முத்துலிங்கம், 15, செயிண்ட் வாரென்ஸ் ரோடு, கொழும்பு - 6.

**தேடிவந்த கண்கள்:** திரு ஆர். சிவலிங்கம் (உதயணன்) 19, கிரீன்லேன், கொழும்பு - 13.

**உரிமைஎங்கே?:** திரு திருச்செந்தூரான், 86, மெயின் ஸ்டிரீட், கலாஹா.

பரிசு பெற்ற இக் கதைகளைத் தவிர இன்னும் பல கதைகள் 'கல்கி'யில் பிர

பொங்கல் வேண்டுகோள்

இடும்பையும் ஊழல்களும் நீங்கி நாட்டில் நல்லாட்சி தோன்றி நிலைபெற்று மக்கள் சுகமாகவும் யோக்கியமாகவும் வாழ வேண்டுமானால் காங்கிரஸ் கட்சி பதவியிலிருந்து அகற்றப்படவேண்டும். சுதந்திரக் கட்சியை பலப்படுத்தியே தீரவேண்டும். பணக்காரர்களின் பண உதவியைக் கொண்டும், அதிகாரச் செல்வாக்கைக் கொண்டும் வெற்றியடையலாம் என்று காங்கிரஸ்காரர்கள் எண்ணுகிறார்கள். அதைப் பொய்யாக்குவது யோக்கியர்களின் கடமை.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

கரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன. அவை அவ்வப்போது 'கல்கி'யில் இடம் பெறும். இந்தப் பொங்கல் புது நாளில் ஈழத்து எழுத்தாளர்கள் மட்டுமென்ன, தமிழ் கூறும் நல்லுலகத்து எழுத்தாளர்கள் அனைவரையுமே தங்கள் சிறந்த சிறுகதைகளைக் 'கல்கி'க்கு அனுப்பி வருமாறு கேட்டுக் கொள்கிறோம்.

## தியாகராஜர் ஆராதனை

இவ்வருஷ தியாகராஜ சுவாமிகளின் ஆராதனைக்குத் தனிச் சிறப்பு உண்டு. தபால் இலாக்கா, தியாகராஜ சுவாமிகளின் திரு 'உருவத்தைப் பொறித்த தபால் பில்லையைத் திருவையாற்றிலே ஆராதனை நடக்குமிடத்திலேயே வெளியிட்டது. முதல் தபால் பில்லையை ஸ்ரீ அரியக்குடி ராமானுஜய்யங்கார் வாங்கினார். திருவையாறு உத்சவத்தின் போது நடைபெற்ற கச்சேரிகளை இந்தியாவிலுள்ள 26 ரேடியோ நிலையங்களிலும் ஒலிபரப்ப ஏற்பாடு செய்திருந்தது, ரஸிகர்களுக்குப் பேருவகை அளித்தது. இப்படிக் குதூகலம் பொங்க 114-வது ஆராதனை உத்சவத்தை இந்திய சர்க்கார் செய்ததற்கு ரஸிகர்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவிப்பார்கள்.

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்ய விரும்புகிறவர்கள் தங்களின் நன்கொடையை என் பெயருக்கு C/o 'கல்கி' காரியாலயம், கில்ப்பாக்கம், சென்னை - 10 என்ற விலாசத்துக்கு அனுப்பக் கோருகிறேன். பெயரிட்டோ, பெயர் சொல்லாமலோ அனுதாபிகள் விருப்பத்தின்படி கல்கியில் நன்கொடைகளின் வரவு பிரசுரிக்கப்படும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

# தையும் பிறந்தாச்சு!

தையும் பிறந்தாச்சு வெய்யில் எழுந்தாச்சு
தாமரை மொட்டும் மலர்ந்தாச்சு ! - முல்லை
தாளை மடலும் விரிந்தாச்சு ! - வள்ளி

கையை விரித்ததும் காகம் பறந்தாச்சு
காளைகள் நான்கும் நடந்தாச்சு - அவள்
கையில் குடமு மெடுத்தாச்சு !

மஞ்சள் வெய்யிலினைக் கொஞ்சும் வயல்களில்
வாணன் கதிர்களும் கொய்தாச்சு - தோட்ட
வாழை கரும்புகள் வந்தாச்சு ! - கையில்

இஞ்சும் இளநீரும் மஞ்சளும் சேர்ந்தாச்சு
இன்பப் பசும்பால் கறந்தாச்சு - முற்றம்
எங்கணும் கோலம் எழிலாச்சு !

தித்திக்கும் முக்கனி சர்க்கரைத் தேன்துளி
தேக்கி அடுப்பினில் வைத்தாச்சு - பானை
சீக்கிரம் பொங்கி வழிந்தாச்சு - முத்துச்

செந்நெல் அரிசியைக் கொட்டித் துளாவிடச்
செங்கை அகப்பை பிடித்தாச்சு - அவள்
முன்கை வளைகள் சிரித்தாச்சு !

குய்ப்புகை மொய்த்த குவளை விழிகளின்
கூம்பலில் முத்தும் உருண்டாச்சு - கன்னக்
கொய்யாக் கனிகள் சிவந்தாச்சு ! - அவள்

கைப்பட வைத்த கருணைப் படையலில்
காதலின் நெஞ்சம் புரிந்தாச்சு - அவள்
கண்கள் இரண்டும் குனிந்தாச்சு !

பொங்கற் களிப்பினில் தங்கக் கதிரவன்
புன்னகை இன்பம் புரிந்தாச்சு - மாட்டுப்
பொங்கல் தினமும் முடிந்தாச்சு - அவன்

திங்கள் முகத்தினில் பொங்கும் மகிழ்ச்சியில்
சேதிகள் எல்லாம் தெரிந்தாச்சு - மச்சான்
சிந்தையில் வள்ளி நிறைந்தாச்சு !

திமிலைத் துமிலன்

# கன்னி மகளே!

தங்க வளைமலர்ந்த செங்கரக் கொடி - அசைந்
தாடித் துவள ஒளி கூடித் தவழும்
திங்க ளிளமுகத்தில் மூரலரும்ப - சுடர்ச்
சோதி தெறிக்கும் கண்கள் பாதி மலர.

துங்க வளமை மிஞ்சும் அங்க அசைவில் - விண்ணில்
துள்ளித் திமிர்ந் தொசியும் மின்னல் ஒளிர,
மங்கைப் பருவமெங்கும் பொங்கி வழிய - வரும்
வாலைக் குமரியே! நீ, சொல்லுவதைக் கேள்!

சில்லுக் குரலையுன்றன் சிந்து நகையை - எம்
சிந்தை கவருமுன்றன் சந்த மொழியைச்
சொல்லைக் குழைத்துணர்வை விள்ளும் இசையால் - மனம்
சொக்கும் கவிதையினில் உன்னை இசைத்தோம்!

வல்லிக் கொடியிடையை, பிஞ்சு விரலை - உயிர்
வாஞ்சை கொளத் துடிக்கும் அங்க ஒயிலைக்
கல்லைப் பிசைந்துகலை யுள்ள விரிவால் - உளம்
கவ்வும் சிலையினிலே உன்னை வடித்தோம்!

கற்றை நிலவெறிக்கும் முத்து மணியும் - உன்
கண்டம் அணைந்து மனம் விம்மி நெகிழும்;
முற்றிச் சிவந்தாறும் வெற்றிலைமது - உன்
மோகனப் புன்னகைக்கோர் வேகம் அருளும்;

சுற்றிப் பவனிவரும் தென்றல் அலையில் - விரி
சோலை மலர்களுன்றன் கூந்தல் அமரும்;
பற்றிப் படரும்பட்டுப் பூச்சிகளெல்லாம் - உன்
பச்சை உடம்பினுக்கோர் கச்சை வழங்கும்!

முன்னைப் பழம்பொருளின் சொன்ன மனசில் - அலை
மோதி யமர்ந்தபரஞ் சோதிவெளியில்
உன்னி யெழுந்துன்றன் கன்னியுருவம் - எழில்
ஊட்டமுறப் பெற்றதெங்கள் தேட்ட மனத்தில்!

மின்னிச் சுழலும்எழிற் கன்னி மகளே! - காதல்
மிஞ்சிச் சுழலவுனை நெஞ்சம் அணைந்தோம்!
பின்னிப் பிணைக்கும்கலை வண்ண மதனை - உண்ட
பித்து வெறியினிலே சித்தம் மறந்தோம்!

மணியம்

திருச்சிற்றம்பலக் கவிராயர்

# இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்க்

## லிமிடெட்

★

எல்லா மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்ய

**※ ஒரு ரெக்கரிங் டெபாஸிட் திட்டத்தை ※**

ஆரம்பித்திருக்கிறார்கள்

★

குறைந்த பட்சம் ரூ. 5/– லிருந்து அதிக பட்சமாக, அதன் பெருக்குத் தொகை ரூ. 500/– வரையில் டெபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்

பிரதி மாதம் டெபாஸிட் செய்யும் தொகையான

| | | | | |
|---|---|---|---|---|
| | ரூ. 5 | ரூ. 10 | ரூ. 50 | ரூ. 100 |
| | கீழ்க் கண்டபடி பெருகும் | | | |
| 34 மாதங்களில் | ரூ. 180 | ரூ. 360 | ரூ. 1,800 | ரூ. 3,600 |
| 46 மாதங்களில் | ரூ. 250 | ரூ. 500 | ரூ. 2,500 | ரூ. 5,000 |
| 86 மாதங்களில் | ரூ. 500 | ரூ. 1,000 | ரூ. 5,000 | ரூ. 10,000 |

முழு விவரங்களுக்கு எமது கிளைக் காரியாலயங்களுக்குத் தயவுசெய்து எழுதவும்:

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

ஸி. பி. துரைக்கண்ணு
ஜெனரல் மானேஜர்

# ராமப்பன்

## சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

குப்பண்ணக் கவுண்டன் இறந்த போது அவனுடைய பெரிய மகன் சுப்பண்ணனுக்கு முப்பது வயது. சுப்பண்ணன் தம்பிக்குப் பதினாறு வயது. சாதாரணக் குடியானக் குடும்பம். இரண்டு ஏக்கரா புஞ்செயை வைத்துக் கொண்டு சம்சாரம் நடத்தி வந்த குடும்பம்.

சுப்பண்ணனும் ராமப்பனும் சக்களத்தி மக்கள். முதல் மனைவி இறந்து நான்கு வருஷங்கள் குப்பண்ணன் மறு விவாகத்தைப் பற்றி யோசிக்கவில்லை. பிறகு செய்துகொண்டான். இரண்டாம் தாரத்துக்குப் பிறந்த மகன் ராமப்பன். இவனைப் பள்ளிக்கூடத்தில் போட்டான். "இந்தப் புஞ்செய்க் காட்டை வைத்துக் கொண்டு எத்தனை பேர் சீவனம் செய்ய முடியும்? இவன் ஏதாவது படிக்கட்டும்! ஓர் உத்தியோகம் சம்பாதித்துக் கொண்டு வாழ்க்கை நடத்தட்டும்" என்று மனைவி சொன்னதைக் கேட்டுப் பள்ளிக்கூடத்தில் போட்டான்.

பையன் புத்திசாலி. நன்றாய்ப் படித்துத் தேறிக் கொண்டு எட்டாவது வகுப்பில் முதல் இடம் பெற்றான். வாத்தியார்களுக்கெல்லாம் ராமப்பனிடம் மிகப் பிரியம்.

குப்பண்ணன் இறந்த பிறகும் பையனுடைய படிப்பை நிறுத்தவில்லை. எப்படியோ கஷ்டப்பட்டுச் சுப்பண்ணன் தன் தம்பியினுடைய படிப்புக்கு வேண்டிய செலவைச் சமாளித்து வந்தான். குப்பண்ணன் இறந்த மறு வருஷத்தில் ராமப்பன் தாயாரும் வைசூரி கண்டு இறந்து விட்டாள்.

குடும்பத்தில் வர வர ஒற்றுமை குலைந்தது. இதற்கு ஒரு மாமன் வந்து சேர்ந்தான். சுப்பண்ணனுடைய தாயுடன் பிறந்த மாமனும் அவன் மனைவியும் புளியம்பட்டிக்கு அடிக்கடி வந்து இரண்டு மூன்று நாட்கள் இருந்து போவார்கள். அவர்கள் கிராமம் பத்து மைல் தூரத்தில் காளியப்பன்புதூர் என்கிற ஊர்.

"இந்த மாதிரித் தம்பியின் படிப்புச் செலவு நடந்து கொண்டே போனால் உங்கள் கதி என்ன? நாமெல்லாம் எந்தப் பள்ளிக்கூடத்தில் படித்தோம்?" என்பான் மாமன் சாமியப்பன். சுப்பண்ணன் இந்தப் பேச்சை முதலில் பொருட்படுத்தவில்லை. ஆனால் ஓயாமல் அடித்தால் அம்மியும் நகரும் என்பதைப் போல் சில நாட்கள் கழித்து அதைப் பற்றி யோசிக்கலானான்.

மாமி பாவக்காளும் சுப்பண்ணன் மனைவியிடம் சொல்லுவாள்: "இரண்டு ஏக்கரா புஞ்செய் வருமானம் இப்படிச் செலவாகிக்கொண்டு போனால் அந்தப் பையனுடைய படிப்பு முடிவதற்குள் இந்தக் குடும்பம் கெட்டுக் குட்டிச்சுவராகப் போகும். ராமப்பன் படித்துப் பாஸ் செய்து முன்னுக்கு வருவதை யார் கண்டார்கள்? அவனுக்கு உத்தியோகமானால் அவன் உங்களைக் காப்பாற்றப் போகிறானா, இல்லை; அதற்குள் நீங்கள் கூழுக்கு ஓடு எடுத்துக்கொண்டு பிச்சையெடுக்க வேண்டியதாகும்." -- அவள் இவ்வாறு மெதுவாக உபதேசம் நடத்துவாள். சுப்பண்ணன் மனைவி உண்மையில் பயந்து போனாள்.

"குடும்பம் சுத்தமாகக் கெட்டுப் போவதற்குள் பாகம் பண்ணிவிட்டுத் தம்பிக்கு உரிய பாகம் கொடுத்துப் போட்டு நீ சுகமாக உன் காரியத்தைப் பார்த்துக்கொண்டு போ" என்று சாமியப்பன் சுப்பண்ணனுக்கு முடிவாக ஒரு நாள் யோசனை சொன்னான். அவனும் அப்படியே செய்வதென்று தீர்மானித்தான்.

ராமப்பனுக்கு அப்போது பதினெட்டு வயது. பவானியில் பெரிய பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தான்.

"அண்ணா! இப்படிச் செய்வதே முடிவானால் நான் சொல்வதைக் கேள். இந்தச் சிறு புஞ்செய்க் காட்டை இரண்டாகப் பிரித்தால் எப்படி உழுது வெள்ளாமை எடுக்க முடியும்? இரண்டு பாகமும் பயனில்லாமல் போகும். முழுக் காட்டையும் நீயே வைத்துக்கொள். எனக்கு ஒன்றும் வேண்டாம்" என்றான் ராமப்பன்.

"தம்பி கோபித்துக்கொண்டு இப்படிச் சொல்கிறான்" என்றான் மாமா.

"இல்லை மாமா! அப்படி ஒன்றுமில்லை. சந்தோஷமாகத்தான் சொல்லுகிறேன். அப்பா விட்டுப் போன நிலத்தைப் பிரித்துப் பாழாக்க வேண்டாம் என்று சொல்லுகிறேன். நான் ஏதாவது சிறு உத்தியோகம் சம்பாதிக்கப் பார்க்கிறேன். காடும் வீடும் அண்ணா வைத்துக்கொண்டு வாழட்டும்" என்று ராமப்

பன் சொல்லிவிட்டுப் பவானிக்குச் சென்று விட்டான்.

கப்பண்ணன் மனைவிக்கு இந்த நிகழ்ச்சிகள் திருப்தியே தந்தன. ஆனால் கப்பண்ணன் மனம் நிம்மதியில்லை. தான் ஏதோ பாவம் செய்ததாகவே மனத்தில் வருத்தப்பட்டான்.

"அவன் இப்படித் தியாகம் செய்யத் துணிந்தால் நாம் ஏன் தடுக்க வேண்டும்?" என்றான் சாமியப்பன்.

பவானியில் தாசில்தார் ஆபீஸில் ராமப்பன் ஒரு சேவக வேலை ஒப்புக் கொண்டான். படித்த பையன் ஆன படியால், அந்தப் 'பியூன்' உத்தியோகம் சுலபமாகக் கேட்டவுடனேயே கிடைத்தது. அவனுடைய வாத்தியார், "ஐயோ, இந்த வேலையா உனக்கு? நீ படித்துத் தாசில் வேலையே சம்பாதித்திருப்பாயே!" என்று கண்கள் கலங்கச் சொன்னார்.

"இருக்கட்டும் ராமசாமி அய்யர்வாள், நான் இவனை முன்னுக்குக் கொண்டு வருகிறேன்" என்று தாசில்தார் மாசிலாமணி முதலியார் அவரைச் சமாதானப் படுத்தி அனுப்பினார்.

ராமப்பனைத் தம் வீட்டில் அந்தரங்கச் சேவகனாக வைத்துக் கொண்டு அவனிடம் மிகப் பிரியமாக இருந்து வந்தார். அவனுக்கு இருக்கத் தம் வீட்டுப் பின்புறம் இருந்த ஒரு கொட்டாயைக் கொடுத்தார். சாப்பாடும் தாசில்தார் வீட்டிலேயே நடந்தது.

இப்படிச் சந்தோஷமாக வாழ்க்கை சென்றது. தன் அண்ணனுக்குப் பிதுரார்ஜிதச் சொத்து முழுவதையும் கொடுத்து விட்டதைப் பற்றிப் பெருமைப்பட்டுக் கொண்டும் வந்தான் ராமப்பன்.

கப்பண்ணன் மகன் ஐந்து வயதுப் பையன் குப்பு, அடிக்கடி "சின்னையா, சின்னையா" என்று பவானிக்கு வந்து ராமப்பனுடன் இரண்டு நாட்கள், மூன்று நாட்கள் இருந்துவிட்டுப் போவான். அவனுக்குச் சிற்றப்பனிடம் மிகப் பிரியம். இது அவன் தாயாருக்குப் பிடிக்கவில்லை. ஆனாலும் கப்பண்ணன் இதைத் தடுக்கவில்லை. அவனே பையனை ராமப்பனிடம் கொண்டு வந்து விட்டுப் போவான்.

"ஏதாவது மருந்து வைத்துவிட்டிருப்பான். அதனால்தான் இப்படிப் பையன் 'சின்னையா, சின்னையா' என்று அவ்விடம் ஓடுகிறான். இது அபாயம். ஒரு நாளில்லாமல் போனால் ஒரு நாள் விஷம் வைத்து என் குடும்பத்தைக் கெடுத்தாலும் கெடுப்பான். எங்கள்பேரில் அவனுக்குள்ள துவேஷத்தைத் தீர்த்துக் கொள்வான்" என்று கப்பண்ணனின் மனைவி காளியப்பன் புதூர் மாமியிடம் சொல்லுவாள். அவளும் "அப்படித்தான் ஆகும். இதற்கு என்ன செய்ய? இந்தக் கப்பண்ணனுக்கும் புத்தியே இல்லை. எல்லாரும் தன்னைப் போல அப்பாவி என்று எண்ணுகிறான்" என்பாள்.

"சின்னையா! சின்னையா! பாம்பு கடித்துவிட்டது" என்று கூச்சலிட்டான் குப்பு. புழக்கடையில் விளையாடிக் கொண்டிருந்தவன் இப்படிக் கூச்சலிட்டதும் ராமப்பன் ஓடிப்போய்ப் பார்த்தான். பாம்பையும் அது படமெடுத்துப் போவதையும் கண்டான். பாம்பு பாழியில் போய்ப் புகுந்து கொண்டது. பயந்து போன குப்புவைத் தூக்கியெடுத்துப் பாம்பு கடித்த இடத்துக்கு மேல் கயிற்றை இறுக்கிக் கட்டிவிட்டுக் கடித்த இடத்தில் ராமப்பன் தன் வாயை வைத்து இரத்தத்தை நன்றாக உறிஞ்சித் துப்பினான். இது அவன் எங்கேயோ படித்திருந்த படிப்பு.

பையனைத் தாசில்தார் உடனே ஆஸ்பத்திரிக்கு அனுப்பினார். அவனுக்கு ஒன்றும் சேதமில்லை. ஆனால் ராமப்பனுக்கு ஏதோ வியாதி கண்டது. டாக்டர் அவன் வாயில் புண் இருந்ததாகவும், பாம்பு கடித்த விஷத்தை அவன் உறிஞ்சியபடியால் இந்தக் கோளாறு என்றும் சொன்னார்.



ராமப்பன் ஒரு மாதம் கஷ்டப்பட்டான், சௌக்கியமாக வில்லை. அவனைச் சேலம் ஆஸ்பத்திரிக்குச் சிகிச்சைக்கு அனுப்பினார்கள்.

"நான் சொன்னேனோ இல்லையா? பாம்பாவது தேளாவது, எல்லாம் ஏதோ வஞ்சனை" என்றாள் கப்பண்ணன் மனைவி.

"சும்மா, இரு பேத்தாதே!" என்றான் கப்பண்ணன். "ராமப்பன் விஷத்தை உறிஞ்சிப் பையனைக் காப்பாற்றினான். இப்போது அவன் நோய்வாய்ப்பட்டுக் கஷ்டப்படுகிறான்."

"இந்தப் பையன் அந்த இடத்துக்கு ஏன் போக வேண்டும்? எல்லாம் அதனாலேதான் ஆயிற்று" என்று கப்பண்ணன் மனைவி விஷயத்தை விடாமல் தொடர்ந்து பேசினாள்.

கப்பண்ணன் தன் கோபத்தைப் பொறுத்துக் கொண்டு மனைவியின் பேச்சைக் கவனிக்காமல் தன் வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

சேலத்தில் தம்பி ரொம்பச் சங்கடப் படுகிறான், பிழைப்பது கஷ்டம் என்று சமாசாரம் வந்ததின்மேல் கப்பண்ணன் சேலம் சென்றான்.

"தம்பி! உனக்கு நான் செய்தது மகா பாவம். என்னை மன்னிப்பாயா?" என்றான் கப்பண்ணன்.

"அண்ணா நீ ஒரு பாவமும் எனக்குச் செய்யவில்லை. குப்பு சுகமாக இருக்கிறானா?" என்றான் ராமப்பன். கப்பண்ணன் அழுதான்.

"அண்ணா அழாதே! பெண்கள் செய்த காரியம். அதற்கு நீ பொறுப்பு இல்லை. அந்தச் சின்னக் காட்டை வைத்துக் கொண்டு நாம் இருவரும் என்ன செய்திருக்க முடியும்? வீணாக மனம் நொந்து கொள்ள வேண்டாம். நான் பிழைப்பது சந்தேகம். என் பணம் எஜமான் தாசில் தாரிடம் கட்டத்தட்ட இரண்டாயிரம் ரூபாய் இருக்கிறது. பாங்கியில் போட்டிருக்கிறார்; நான் பிழைத்தாலும் சரி, உயிர் போனாலும் சரி, அது குப்புவின் சொத்து" என்று சொன்னான்.

தாசில்தாரும் அப்போது இரண்டு நாள் லீவு எடுத்துக் கொண்டு ராமப்பனைப் பார்க்க வந்திருந்தார். ராமப்பன் அண்ணனிடம் சொன்னதைக் கேட்டுக் கொண்டிருந்தார்.

"ராமாயணம் பழைய சரித்திரம். ஆனால் இப்போதும் ராமனும் பரதனும் போல் நம் நாட்டில் சிலர் இருக்கிறார்கள் என்பதைக் கண்டோம்" என்றார் தாசில்தார், பக்கத்திலிருந்த டாக்டர் சாமிநாதய்யரிடம்!



தரமுள்ள
கேபிள்கள்
என்பதற்கு
இதுவே நற்சாட்சி




# குளோஸ்டர் கேபிள்கள்




குளோஸ்டர் கேபிள்கள் எல்லா தொழிற்சாலைகளுக்கும், வீட்டு உபயோகத்துக்கும் ஐ. எஸ். 434 முறைப்படியே செவ்வனே தயாரிக்கப்படுகின்றன.

உலகத்திலேயே கேபிள் தயாரிப்பில் முன்னணியில் நிற்கும் லண்டனிலுள்ள பிரிட்டிஷ் இன்ஸுலேடட் காலண்டர்ஸ் கேபிள்ஸ் லிமிடெட் ஸ்தாபனத்தின் தொழில் நுணுக்கக் கூட்டுறவோடு குளோஸ்டர் கேபிள்கள் தயாரிக்கப்படுகின்றன.

டி. ஜி. எஸ். & டி. விலை நிர்ணயப்படியுள்ள குளோஸ்டர் கேபிள்களை எல்லா முக்கிய ராஜ்ய மின்சார போர்டுகளும் சென்னை, ஆந்திர ராஜ்ய பொது மராமத்து இலாக்காக்களும் ஒப்புக்கொண்டுள்ளன.

இதற்கு மேலும் ஒவ்வொரு குளோஸ்டர் கேபிள் ரீலும் தனித்தனியாகப் பரிசோதிக்கப்பட்டு ஐ. எஸ். ஐ. முத்திரையிடப்பட்டுள்ளன.

**இதுவே தரத்துக்கு [சரியான நற்சான்று**




## போர்ட் குளோஸ்டர் இண்டஸ்ட்ரீஸ் லிட்.

**கேபிள் டிவிஷன்**

14, நேதாஜி சுபாஷ் ரோடு, கல்கத்தா - 1

மானேஜிங் ஏஜண்டுகள் : கெட்டில்வெல் புல்லன் & கோ., லிமிடெட்

சென்னை, கேரள ராஜ்யங்கள், ஆந்திர கடற்கரைப் பிரதேசங்கள்
மற்றும் ராயலசீமைக்கு ஏஜண்டுகள்

மெஸர்ஸ் கார்டன் வுட்ராப் & கோ. (மதராஸ்) பிரைவேட் லிமிடெட்
1/21, வடக்கு பீச் ரோடு, சென்னை - 1

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 7. நகர நாகரிகம்

இந்தியா விளப்புக்குச் சென்று "குடியேறிய" சில நாட்களில் ராஜாஜியிடமிருந்து வந்த நேர்த்தியான கடிதம் ஆங்கிலேய நண்பர்களுக்கு வியப்பும் ஆனந்தமும் நல்கியது!

"ஆசிர்வாதம். 23 ம் தேதி எழுதிய கடிதமும் அதற்குமுன் எழுதியவையும் சரியாக வந்து சேர்ந்து விஷயங்கள் அறிந்தேன். அவ்விடம் நீங்கள் சந்தோஷமாகவும் சௌக்கியமாகவும் நான் ஒன்றுக்கு 15 ரூபாய் வாடகை கொடுத்து ஓர் அறையில் இருந்து வருவதும் சைவச் சாப்பாடு கிடைப்பதும் எல்லாம் அறிந்தேன். ரொம்பத் திருப்தி. எதிர்பார்த்ததுதான். முக்கியமாக அந்த நாட்டு மக்களின் பண்பும் குணமும் அடக்கமும் அறிவும் பார்த்திருப்பீர்கள். நாகரிகம் என்றால் என்ன என்பதை அவ்விடம் பார்க்கலாம். நான் சௌக்கியமாகவே இன்னும் இருந்து வருகிறேன். உடம்பினுக்குள்ளே உறு பொருள் கண்டேன், உடம்புளே உத்தமன் கோயில் கொண்டானென்று, உடம்பினை யா(னும்) இருந்து ஓம்புகின்றேன் என்று சொல்லி முடிக்கிறேன்.

ஆசியும், அன்பும்,

இராஜகோபாலாச்சாரி

இந்தக் கடிதத்தைப் பார்த்ததும், ஆறாயிரம் மைல்களுக்கு அப்பால் சென்னை நகரத்தின் ஒரு கோடியிலே இருந்து கொண்டு இந்தத் தீர்க்கதரிசியினால் ஆங்கில நாட்டை எத்தனை துல்லியமாக எடை போட்டுச் சொல்ல முடிகிறது என்று நண்பர்கள் எல்லாரும் வியந்தார்கள். பி. பி. ஸி.யின் நிகழ்ச்சி அமைப்பாளர்களில் முக்கியமான ஒரு பெரிய எழுத்தாளர் கடிதத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பை நூறு தடவைகள் படித்திருப்பார்!

"நாகரிகம் என்றால் என்ன வென்பதை அவ்விடம் பார்க்கலாம்" என்ற அந்த ஒரு வாக்கியத்துக்குள்ளே உள்ள ஆழமும் அகலமும் இங்கிலாந்தைப் பார்த்துள்ள அன்பர்களுக்கு மிக நன்றாகப் புலனாகும். திருமூலரின் திருமந்திரத்தை ராஜாஜி மேற்கோள் சொல்லி முடிக்கிற அந்த அழகே அழகு!

உடம்பினை முன்னம் இழுக்கென்று
இருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள்
கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்
கொண்டான் என்று
உடம்பினை யானிருந்து ஓம்புகின்றேனே

[ஓம்புதல் - நன்றாகப் பாதுகாத்தல்.]

என்று பாடுகிறார் திருமூலர்! நம்முடைய நாட்டின் தத்துவ ஞானிகள் எப்போதுமே இந்த உடம்பைப் பொய் என்று சொல்லி, ஒருவித வெறுப்போடு பாடுவார்கள் என்ற பொதுக் கருத்து ஆங்கிலேயர்கள் மத்தியிலே உலவுகிறது. இப்பொழுது இக் கடிதத்தின் மூலம் திருமூலரின் இந்த அரிய ஞான நோக்கைக் கண்ட ஆங்கிலேய அறிஞர்களுக்குத் திருமூலரிடத்தும் அவருடைய திருமந்திரத்திடத்தும் அபாரமான பக்தி உண்டாகி விட்டது. இதுகாரணமாகப் பல சந்தர்ப்பங்களில் திருமூலரைப் பற்றி விரிவாக எடுத்துச் சொல்லக் கூடிய வாய்ப்புக்கள் நேர்ந்தன.

லண்டன் நகரத்தைப் பார்க்கப் பார்க்க அதை ஒரு புது ஊர் என்று சொல்வதை விட ஒரு புது உலகம் என்றே சொல்லத் தோன்றியது. மாடிகள் ஒன்றுக்கு மேல் ஒன்று அடுக்கடுக்காகச் செல்கின்றன. கீழே நிலத்துக்கு அடியிலே சுரங்க அறைகள் இல்லாத கட்டடங்கள் மிக மிக அபூர்வம். நிலத்தின் மேற்பரப்பை உபயோகிப்பதைப் போலவே, பாதாளத்தையும் குடைந்து, வீடுகள், சமையலறைகள், குளியலறைகள் முதலியன அமைத்திருக்கிறார்கள். வானம், பூமி, பாதாளம் மூன்று உலகங்களிலுமே இவர்களுடைய சஞ்சாரம் நடக்கிறது!

இப்பொழுதெல்லாம் லண்டன் மக்களுக்கு நாட்டுப்புறச் சூழ்நிலையில் ஒரு பெரிய ஆசை பிறந்திருக்கிறது! 'ஒம்பிக்' என்று சொல்லுகிற அலங்கார முறையைக் காப்பி பார் என்ற விடுதிகளிலும், 'பப்' என்கிற மது அங்காடிகளிலும் காணலாம். காப்பி விடுதிகளில் மாட்டுத் தொழு, குதிரை லாயம் இவற்றைப் போல்



"பைன்! பைன்!"

அலங்காரப் பின்னணிகளைச் செய்துவைத்து, புல்லுக்கட்டு, குதிரைச் சேணம் முதலியவற்றைக்கொண்டு ஜோடித்திருக்கிறார்கள். அதாவது நாட்டுப்புறத்திலே இருப்பது போன்ற ஓர் உணர்ச்சி இந்த விடுதிகளிலேவந்து காப்பி குடிப்பவர்களுக்கு உண்டாகும் வண்ணம் இந்த அலங்காரங்களைச் செய்திருக்கிறார்கள்!! சில கடைகளில் கப்பலுக்குள்ளே இருப்பது போன்ற உணர்ச்சி நமக்கு ஏற்படும் வண்ணம் ஜோடனைகள் அமைத்திருக்கிறார்கள்.

ஒரு சில அங்காடிகளுக்குள்ளே செயற்கையாகச் சமாதிகளைக் கட்டி, எலும்புக் கூடுகள், மண்டை ஓடுகள் முதலியவற்றையும் புனைந்து வைத்திருக்கிறார்கள்! 'கிம்மிக்' என்ற இந்த விநோத ஜோடனைகளைப் பார்த்ததும் எனக்கு ஆச்சரியமாக இருந்தது. என்னுடைய நண்பர் ஒருவர் லண்டனை ஒரு "சமாதிபுரி" என்று அழைத்தார். இந்த அலங்காரங்களிலுங்கூட அந்தப் பண்பைச் சில அங்காடிகளிலே காட்டியிருக்கிறார்கள்.

காப்பி பார்-நாகரிகம் பரவ ஆரம்பித்த வரலாற்றைப் பற்றி ஒரு ரசமான குறிப்பு நான் பார்த்த ஒரு விடுதியிலே சுவரில் பதித்து வைத்திருந்தார்கள். 1952-ம் ஆண்டு ஜூலை மாதம் 17-ந் தேதி இந்த வகையான புதிய விடுதி தொடங்கப்பட்டது என்றும், இதன் நோக்கம் அழகான சூழ்நிலையில் உட்கார்ந்து கொண்டு நண்பர்கள் காப்பியும் சிற்றுண்டியும் அருந்துவதோடு உல்லாசமாகப் பேசிக் கொண்டும் இருக்கலாம் எனவும் இந்தக் குறிப்பிலே எழுதியிருக்கிறார்கள்.



'மீனாக்ஷியா? வெள்ளரிப் பிஞ்சா?'

**வீ**திகளிலே எல்லா வீடுகளும் சேர்ந்து நிற்கின்றன. மதிற்சுவர்களோ, வெளிவெளிகளோ இல்லாமல் வரிசையாக நம்முடைய முறைப்படி வைத்து "பொதுச் சுவர்" பழைய ரத வீதிகளிலும் அக்கிரகாரங்களிலும் இருப்பது போலக் கட்டியிருக்கிறார்கள்!

"லிப்ட்" என்கிற "தூக்குத் தூக்கிகள்" இல்லாத பெரிய கட்டடங்களே இல்லை!

வீடுகளுக்குள்ளே குளிர் காலத்தில் சூடு காய்வதற்காக, நிலக்கரியும் கள்ளிகளும் போட்டு எரித்து, அதிலிருந்து அனல் வீசக் கூடிய விதத்தில் பெரிய மாடக் குழிகள் வைத்திருக்கிறார்கள். மின்சாரத்தின் மூலம் அனல் தருகிற கருவிகளும் பல இடங்களில் வைத்துள்ளார்கள். இது போலவே கோடையின்போது குளிர் காற்று குழாய்களின் மூலம் அறைச் சுவர்களுக்குமேல் இயங்கிக்கொண்டே இருக்கும்படியாகவும் அமைத்திருக்கிறார்கள். பொதுவாக, அந்த நாட்டின் வெப்பமும் குளிரும் விசித்திரமான தொல்லைகள். இந்தத் தொல்லைகளை மனித முயற்சியின் மூலம் வெற்றிகரமாகச் சமாளிக்கிறார்கள் இந்த அதிசய மக்கள்!

சமையலுக்காக நிலக்கரி மூலம் உற்பத்தி செய்யப்பட்ட 'கரிவாயு' நம்மூர் மின்சாரம் மாதிரி வீடுகள்தோறும் குழாய்களிலே ஓடுகிறது. சமையலறை அடுப்புக்குள்ளே இந்தக் குழாய்கள் செல்கின்றன. இவற்றைத் திறந்து தீக்குச்சியை உராய்ந்து விட்டால் போதும்! கரிக் காற்று நல்ல வேகத்தோடு 'கரு கரு' என்று எரிகிறது. உடையில் அதிகமாக அழுக்குப்படாமல் வெகு விரைவில் சமையலை முடித்து விடலாம். பாத்திரங்களிலும் அதிகமாகக் கரி படுவதில்லை. எனவே லண்டன் விடுதிகளில் தொழிலாளர்கள் எல்லாம் 'டை' கட்டிக்கொண்டே சமையலைச் செய்து முடித்து விடுகிறார்கள்!

சாமான்கள் வாங்குவதற்கு அந்தந்தக் கடைகளில் போய் விலையைக் கண்ணை மூடிக்கொண்டு கொடுத்து, கண்ணை மூடிக்கொண்டே சாமான்களையும் வாங்கிக்கொண்டு வந்துவிடலாம். பொருளின் விலையிலோ அல்லது தரத்திலோ புரட்டு கிடையாது. ஒரு குண்டூசியிலிருந்து பெரிய பெரிய நகைகள் வரையில் ஒரு சிறு குழந்தை போனாலும் ஒரே சரியான விலைதான்! பேரம் செய்வதில்லை. அதோடு இங்கிலாந்தின் தென்கோடியில் ஒரு சிறு குக்கிராமத்திலிருந்து, வடகோடியிலுள்ள பெரிய நகரம் வரை எல்லா இடங்களிலும் எல்லாச் சாமான்களும் எல்லாருக்கும் ஒரே விலைதான்!

தனித்தனியாக ஒவ்வொரு சாமானையும் தேடிப் பல கடைகளுக்கு ஏறி இறங்க வேண்டியது இல்லை. 'உல்வொர்த் அண்ட் கம்பெனி' போன்று சில பெரிய வியாபார நிலையங்கள் இருக்கின்றன. இவர்களுக்கு இங்கிலாந்து முழுதும் ஊரெல்லாம் கிளைகள் உண்டு. இந்த அங்காடிகளுக்குள்ளே சென்றுவிட்டால், பெரிய சந்தை போன்று குத்தூசியிலிருந்து ரேடியோ செட் வரையில் எல்லாச் சாமான்களும் கிடைக்கும்! விலையும் தரமும் வழக்கம்போல் ஒரே நிர்ணயம்!

'உல்வொர்த்' போன்று சில ஆடை அலங்காரக் கடைகள் உண்டு. இங்கே யெல்லாம் ஆடவருக்கும் பெண்டிர்களுக்கும் 'ரெடிமேட்' ஆயத்த ஆடைகள் தைத்து வைத்திருக்கிறார்கள். உள்ளே போய் நம்முடைய அளவுக்குத் தக்க உடைகளை வாங்கி மாட்டிக்கொண்டு வந்து விடலாம். இந்தியாவிலிருந்து செல்கிற நமக்கு இந்தக் கடைகள் மிகவும் வசதியாக இருக்கின்றன. இங்கிருந்து உடைகளை மூட்டை கட்டிக்கொண்டு போக வேண்டியதில்லை! தவிர நம்முடைய பருத்தி ஆடைகள் அங்கே பயன்படுவதும் இல்லை! அங்கு விற்கிற உலன் உடைகள் தையலிலும், தரத்திலும் நேர்த்தியாக இருப்பதோடு மலிவாகவும் இருக்கின்றன!

உலன் தவிர இந்தக் காலத்தில் 'டெரிலின்' என்ற செயற்கை நூல் ஆடைகளும் அங்கே

தனிச்சிறப்பு வாய்ந்த

**டிசைன்களில்**

காஞ்சீவரம் பட்டுப் புடவைகள்

பெங்களூர், பனாரஸ், கத்தான் &

ஜெரேப் சேலைகள்

சோளி பீஸ்கள்

ஏராளமாக ஸ்டாக் செய்திருக்கிறோம்

பலரக நூதன மில் ஜவுளிகள்
அழகிய ஸில்க் ரகங்கள்
பின்னி ஜவுளி தினுசுகள்
புதிய ஸ்டாக் நிறைய வந்திருக்கிறது

எங்களை ஆதரித்த அன்பர்கள் அனைவருக்கும் எங்கள் மனமார்ந்த

பொங்கல் நல் வாழ்த்துக்கள்!




**கரண ஜவுளி மாளிகை**

ராஜ வீதி, கோயமுத்தூர்

போன்: 2881 தந்தி: கரண



அழகானவை
மலிவானவை
நீடித்து உழைப்பவை

# கயிற்றுத் தளவிரிப்புகள்

## (COIR CARPETS)

கயிற்றுத் தளவிரிப்பின்மீது நடக்கும் பொழுது ஏற்படும் உல்லாச உணர்வை வேண்டாதார் யார்? கயிற்றுத் தளவிரிப்பு கதகதப்பானது. சந்தடி ஊட்டாதது. எல்லாவற்றிற்கும் மேலாக எழில்மிகு ஆடம்பரத் தோற்றத்தை அளிப்பது. அழகு கொழிக்கும் வண்ணங்களில் அமைந்த அவற்றின் விலையும் மலிவு. அதிக காலம் உபயோகப் படுபவை அவை.

# காயர் போர்டு

ஷோ ரூம் & விற்பனை நிலையம்:

- 1/155, மவுண்ட் ரோடு, மதராஸ்-2 போன்: 85787
- 1-A, மஹாத்மா காந்தி ரோடு பெங்களூர், போன்: 70216
- கஸ்தூரர் நிவாஸ், பிரெஞ்ச் ரோடு பம்பாய்-7, போன்: 74053
- 5, ஸ்டேடியம் ஹவுஸ், சர்ச் கேட் பம்பாய்.
- 16-A, ஆசப் அலி ரோடு, புது டெல்லி-1 போன்: 26988
- 22, லவுடன் தெரு (வாசல் பார்க் தெருவில்) கல்கத்தா-16, போன்: 44-5287

**காயர் போர்டு**

(இந்திய அரசாங்க வர்த்தக, தொழில் அமைச்சரவையின் கீழ் ஸ்தாபனக் கட்டுப்பாட்டில் இயங்குவது)

எர்ணாகுளம்

எமது மனமார்ந்த பொங்கல் நல் வாழ்த்துக்கள்!



டாடா-
மெர்ஸிடஸ்-
பென்ஸ்.....

ராயல் என்பீல்டு
மோட்டார் சைக்கிள்கள்

விற்பனையும் சர்விஸும் செய்கிறோம்

# தி கவுண்டர் & கம்பெனி

பிரைவேட் லிமிடெட்

9/69, ஜெயில் ரோடு - - - - - கோயமுத்தூர்

போன்: 3377, 3378 - தபால் பை: 512

என். மகாலிங்கம், B.SC., A.M.I.E., M.L.A., மானேஜிங் டைரக்டர்

K.R.

வைரம்
தங்கம்
வெள்ளி

K.R.

அணிகலங்கள், பரிசுப் பொருள்களுக்கு

தயவுசெய்து அணுகவும்:

# கே. ஆர். & சன்ஸ்

நகை வியாபாரிகள்

கோயமுத்தூர்

போன்: 3033 தந்தி: "புல்லியன்" தபால் பெட்டி: 114

ஏராளம். இவற்றைச் சலவைக்காரர்களிடம் அனுப்ப வேண்டியதில்லை! நனைத்து ஓர் அலசு அலசி அப்படியே 'ஹாங்கர்' என்ற தொங்கும் கொக்கிகளிலே மாட்டிவிட்டால் போதும். சீக்கிரமே தண்ணீர் வடிந்து விடுகிறது. 'இஸ்திரி' போட வேண்டியதில்லை. போடக் கூடாது! மடிப்பு கலைவதில்லை. அவற்றை மறுபடியும் எடுத்து அப்படியே அணிந்து கொள்ளலாம். "Drip Dry Shirts" என்று அழைக்கப்படும் இந்தச் சட்டைகள் மிகவும் வசதியாக இருக்கின்றன. இந்த டெரீனின் நூலை எப்படிச் செய்கிறார்கள் என்று நமக்கு ஆச்சரியமாக இருக்கும். இந்த அதிசயத்தை நேரிலே தெரிந்து கொள்வதற்காகப் பல மைல்கள் பிரயாணம் செய்து ஆகஸ்ட் மாதம் டெரீனின் ஆராய்ச்சி நிலையத்துக்கே போய் அந்த அற்புதக் காட்சிகளையெல்லாம் நேரிலே கண்டேன்!

'காண்டினெண்டல் ஸ்டோர்ஸ்' என்றும் 'இண்டர் நாஷனல் டீலர்ஸ்' என்றும் கடைகள் உண்டு. இங்கே ஆப்பிரிக்காவிலிருந்து வருகிற புளி கிடைக்கிறது. இத்தாலி, எகிப்து முதலிய நாடுகளிலிருந்து வந்துள்ள சில்லறைத் தானியங்களும்-பருப்பு உள்பட— நல்ல அரிசியும் கிடைக்கின்றன. தேங்காயைத் திருகி அந்தத் துகள்களைச் செயற்கை முறையிலே உலர்த்தி அவற்றை அட்டைப் பெட்டிகளிலே போட்டு நன்றாக மூடித் தாள்களை ஒட்டிப் பெட்டி பெட்டியாக விற்கிறார்கள். "டெஸிகேடெட் கோக்கனட்" என்று பெயர்!

இங்கிலாந்தின் பால்வளம் சரித்திரப் பிரசித்தி. பாட்டில்களிலே அடைத்துச் சுத்தமான முறையில் அசல் பாலாகவே விநியோகம் செய்கிற பாற்பண்ணைகளிலே தயிரையும் நல்ல முறையிலே தயாரித்து "யோகர்ட்" என்ற பெயரில் கடைகளிலே விற்கிறார்கள். அதிகப் புளிப்பு இராது. கட்டியாக இருக்கும்.

காய்கறிகளும் பச்சைப் பசேல் என்று கிடைக்கின்றன. கத்தரிக்காய் ஒரு சாண் நீளத்தில் தடித்துக் கொழுத்து வாழைக்காய் மாதிரி இருக்கும். உருளைக்கிழங்கு விதம் விதமான நிறத்தில் சேனைக் கிழங்கு மாதிரி அத்தனை பருமனாக இருக்கிறது! தக்காளியோ ஒவ்வொன்றும் ஒரு பெரிய மாம்பழம் மாதிரி அத்தனை பெரிது! கோஸ், மூட்டைக் கணக்கில் வந்து இறங்குகிறது. மிளகாயைப் பார்த்தால் இது மிளகாயா, அல்லது வெள்ளரிப்பிஞ்சா என்று சந்தேகப் படும்படி அத்தனை பெரிதாக இருக்கும். விலையெல்லாம் பவுன் ஷில்லிங் கணக்குத்தான்.

இத்தனை காய்கறிகள் கிடைத்தாலும் வேகும்போதே அவற்றிலே உப்பும் புளிப்பும் உறைப்பும் ஏறும் வண்ணம் சமைக்கிற பழக்கம் அவர்களிடம் இல்லை.

நம்முடைய சமையல் முறையில் இப்பொழுதெல்லாம் ஆங்கிலேயர்களுக்கு ஒரு மோகம் பிறந்திருக்கிறது. தோசையும், சாம்பாரும், நம்முடைய 'வெஜிடபிள் புலாவ்' என்கிற கூட்டாஞ்சோறும் சாப்பிடுவதற்காக, 'இந்தியா க்ளப்'பை நாடிப் பல மைல்கள் காரையும் போட்டுக் கொண்டு வருகிற ஆங்கிலேயத் தம்பதிகள் லண்டன் வட்டாரத்தில் உண்டு! சிலர் சாம்பார், ரசம் இரண்டுக்கும் வித்தியாசம் பாராட்டுவதில்லை! ரசத்தைப் போலவே ஒரு டம்ளர் நிறையச் சாம்பாரை ஊற்றி அப்படியே அதைக் குடித்துவிட்டு, "பைன்! பைன்!" என்று ஆனந்தக் கண்ணீர் சொரியப் பரவசத்தோடு நம்மைப் பாராட்டிக் கொண்டே கண்களைத் துடைத்துக் கொள்ளுகிறார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

நம்முடைய உணவு வகைகள் தவிர, நம்முடைய இந்தியப் பெண்களின் புடவை அலங்காரத்தை ஆங்கிலேயர்கள் மிகவும் மெச்சுகிறார்கள்! எந்தப் பெரிய கூட்டத்திலும் நம்முடைய இந்தியப் புடவை அணிந்த பெண்மணிகளைக் கண்டு விட்டால் ஆங்கில ஆடவரும் பெண்டிரும் மிகுந்த மரியாதையோடு வரவேற்று மதிப்பு நல்குகிறார்கள். சில சந்தர்ப்பங்களில் "அடடா! தனியாக அல்லவா வந்து விட்டோம்!" என்று நான் பச்சாத்தாபப் பட்டிருக்கிறேன்.

நம்முடைய தோடு, வளையல், ஏன் நம்முடைய நடன மணிகளின் தலை நகையிலும் புல்லாக்கிலுங்கூட ஆங்கிலப் பெண்களுக்கு ஓரே வியப்பும் மதிப்பும்! நமக்கு இவற்றில் பிரியம் குறைந்து வருகிற இக் காலத்தில் அவர்களுடைய பிரியத்தைப் பார்த்துத்தான் இனி நம்முடைய பிரியம் அதிகரிக்க வேண்டும்; அதிகரிக்கவும் கூடும்!

நம்முடைய நடன மணிகளின் தலை நகையை ஆங்கிலப் பெண்கள் தலையிலே வைத்துக் கொண்டு கூத்தாடுவது போலவே, நம்முடைய பெண்களின் கூந்தல் அலங்கார முறையையும் கண்டு அந்தக் கலைக்குத் தலைவணங்குகிறார்கள். கூந்தல் என்றால் அந்தக் காலத்துக் கொண்டையைச் சொல்லுகிறேன். நம்முடைய பெண்கள் தலையைக் கத்திரித்து விட்டுக் கொண்டு வருவதைவிட, பூ முடித்துப் பின்னிக் கொண்டு வந்துவிட்டால் ஆங்கிலப் பெண்கள் மிக மிக ஆர்வத்தோடு அனுபவிக்கிறார்கள்! அனுபவிப்பதோடு நிறுத்தவில்லை. சில ஆங்கிலப் பெண்கள் முடியைக் கத்திரிக்காமல் நீளமாக வளர்த்து "வகிடு" எடுத்துக் கொண்டை போடக்கூட ஆரம்பித்திருக்கிறார்கள்! கூந்தலை ஊசியும் இரும்பும் கொண்டு என்ன பாடு படுத்தியிருக்கிறார்கள், தெரியுமா? இப்பொழுது லண்டனில் சில வீடுகளில் நம்மைப் போன்று புடவை கட்டிக் கொள்வதற்கும், கூந்தலை முடித்துக் கொள்வதற்கும் என்றே ஆங்கிலப் பெண்களுக்குப் பயிற்சி வழங்கி வருகிறார்கள்!!

தொன்று தொட்டுத் தங்களிடையே வழங்கி வருகிற நாகரிகத்தைப் பாதுகாப்பதோடு, பிற நாடுகளில் நல்லது எது என்று கண்டுதேர்ந்து அதையெல்லாம் தங்களுடைய நாகரிகத்திலே பின்னிக் கொண்டை போட்டுக் கொள்ளக் கூடிய பண்பு ஆங்கில மக்களிடம் இருக்கிறது. ராஜாஜி குறிப்பிடுகிற 'அந்த நாட்டு மக்களின் பண்பும், குணமும், அடக்கமும், அறிவும்' எப்படி என்பதைப் 'ப்ரிட்டிஷ் ம்யூஸிய'த்திலேயுள்ள கலைக் காட்சிகளிலும் சமூகப் பழக்க வழக்கங்களிலும் நன்கு காணலாம். (தொடரும்)

# நந்தாவதி

இரவு சரியாக எட்டு மணி.

கொழும்பு, 'கோட்டை'ப் புகையிரத நிலையத்தின் முதலாவது 'பிளாட்பாரத்தை அநாயாசமாக உதறி எறிந்து விட்டு, 'ஜம்'மென்று புகையைக் கக்கிக்கொண்டு புறப்பட்டது, மட்டக்களப்பு மெயில் வண்டி.

வண்டி என்றும் போல் அன்றும் பொங்கி வழிந்தது. இந்த அம்பாரை நீர்ப்பாசன இராட்சத 'அணைத் திட்டம்', மட்டக்களப்புக்கு வந்தாலும் வந்தது; மட்டக்களப்பு மெயிலின் நிலை ஒரு பூர்ண கர்ப்பிணியின் நிலைதான்.

புறப்பட்ட ஐந்து நிமிஷங்களில், கொழும்பு நகரின் அடுத்த பெரிய ஸ்டேஷனான மருதானையை 'நொறுக்கி'க் கொண்டு கடந்து சென்றது வண்டி.

கோட்டையிலிருந்து மருதானை வரையும், கழுத்தை வெளியே நீட்டிக் கொண்டு வேடிக்கை பார்த்து வந்த நான், இப்பொழுது தலையை உள்ளுக்கு இழுத்துக்கொண்டு என் இருப்பிடத்துக்குத் திரும்பினேன்.

இந்த வண்டியில், இரண்டாம் வகுப்பு 'ஸிலீப்பிங் கா'ரில் நான் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன்.

எனது 'படுக்கை' எண் பதினொன்று.

எனது 'படுக்கை'க்குச் சரிநேராக மேலே இருந்தது பதின்மூன்றும் இலக்கப் 'படுக்கை.' அது வெறுமையாகவே இருந்தது.

இரண்டே இரண்டு 'படுக்கை'களே உள்ள அந்தக் தனிப் பெட்டியில், ஏகாங்கியாக நான் மட்டும் பிரயாணம் செய்வது என்னவோ போலத்தான் இருந்தது.

'தட தட' வென்று யாரோ கதவை இடிக்கும் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டுக் கண் திறந்தேன். தூக்கக் கலக்கத்தில் ஒன்றுமே புரியவில்லை. மின் விசிறி தன் பாட்டுக்குச் சுழன்று கொண்டிருந்தது.

'லைட்'டைப் போட்டுவிட்டுக் கதவைத் திறந்தேன். எதிரே ஒரு பௌத்த பிக்ஷு நின்றிருந்தார். அவருடைய ஒரு கையில் அடக்கமான ஒரு தோல் பையும், மறுகையில் விசிறியொன்றும் காணப்பட்டன. பாதத்தை உயர்தர 'ஸிலிப்ப'ரும், தேகத்தைத் தூய மஞ்சள் அங்கியும் அணி செய்தன. முகத்தில் காந்தியும், சாந்தியும் போட்டியிட்டன. கண்களில் ஒரு கனிவு. மூக்கில் ஒரு கம்பீரம். இதழ்க்கடையில் ஒரு குறுகுறுப்பு தெளிந்தது. மஞ்சள் அங்கியின் தழுவலுக்குத் தப்பியிருந்த திருவதனத்தில், தேகத்தின் சந்தன வர்ணம் பளிச்சிட்டது.

''ஆய்போவன்'' என்று சிங்களத்தில் வணக்கம் கூறிக் கொண்டு நிதானமாக உள்ளே நுழைந்தார் பிக்ஷு.

பதிலுக்கு நானும் மரியாதையுடன் கைகூப்பி அவருக்கு அஞ்சலி செலுத்தினேன்.

''மன்னிக்க வேண்டும்; உங்கள் தூக்கத்தைக் கெடுத்து விட்டேன், இல்லையா?'' என்று ஆரம்பித்தார் பிக்ஷு.

''அப்படியொன்று மில்லை'' என்று சம்பிரதாயமாய்ச் சொல்லிவைத்தேன் நான்.

தொடர்ந்து தானே கூறினேன்:

''தங்களைக் கொழும்பிலேயே நான் எதிர்பார்த்தேன், 'படுக்கை' 'புக்' பண்ணியிருக்கிறது. ஆனால் ஆளைக் காணோமே என்று!''

''ஆமாம்! இங்கு ருகமயிலில் 'படுக்கை' 'புக்' பண்ணுவது மிகவும் சிரமமாதலால், கொழும்புக்கு 'டெலிபோன்' பண்ணி அங்கிருந்தே படுக்கைக்கு ஒழுங்கு செய்து விட்டேன். இப்படிச் செய்திரா விட்டால் இன்று இந்த ரயிலில் பொலநறுவைக்குப் போன மாதிரித்தான்! அப்பப்பா! என்ன கூட்டம்; என்ன நெரிசல்!'' என்று அலுத்துக் கொண்டார் பிக்ஷு.

''நல்ல காரியம் செய்தீர்கள்'' என்று அவருக்கு ஒரு



நவம்




பாராட்டுக் கொடுத்துவிட்டு, மேற்கொண்டு பேசுவதற்கு விஷயம் ஒன்றும் இல்லாததால் மௌனமாயிருந்தேன் நான்.

''தம்பி! தூக்கம் வருகிறதா?''

''இல்லை; தாங்கள் பேசிக்கொண்டே வரலாம்.''

''நல்லது. அப்படியானால் உங்களிடம் ஒன்று கேட்டுத் தெரிந்து கொள்ளவேணுமே?''

''கேளுங்கள்.''

''சிங்களவர்களைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' அமைதியாகத்தான் கேட்டார் கேள்வியை.

ஆனால் அவர் காட்டிய அமைதியை என்னால் கடைப்பிடிக்க முடியவில்லை.

கண் இமைக்கும் நேரத்தில், கடந்த காலக் கறை படிந்த புண்ணான நிகழ்ச்சிகள் என் மனத்திரையில் சினிமாக் காட்டின. மொழி வெறித் திரையால் விழிகள் மறைக்கப்பட்ட சிங்களவரின் குரூர நிகழ்ச்சிகள் என் நெஞ்சில் ஊழிக் கூத்தாடின. அன்பையும், அஹிம்சையையும் போதித்த புத்த பிரானின் 'புத்திரர்கள்' பூதகணங்களாக மாறி மனிதக் குருதியில் நீச்சலடித்த பேய்க்காட்சி பூதாகாரமாக என்முன் தோன்றியது. நாடு முழுவதும் பரந்து கிடந்த தமிழர் கூட்டம், நாதியற்று நடுத் தெருவில் நலிவுற்று நின்ற கோரக்காட்சி என் இளம் ரத்தத்தில் சூடேற்றியது.

''தம்பி! நான் கேட்ட கேள்வி அநாதையாக நிற்கிறதே!'' என்று என் சிந்தனையை முறித்தார் பிக்ஷு.

''கேள்வி மட்டும் தானா அநாதையாக நிற்கிறது? இந்த நாட்டில் வாழும் தமிழர் நிலையும் இன்று அநாதர

வாகத்தானே இருக்கிறது!'' இந்தப் பதிலிலேயே அவருடைய கேள்விகளுக்குரிய பதிலையும் அவர் கண்டிருக்க வேண்டும். தொடர்ந்த அவருடைய பேச்சிலிருந்து இந்த உண்மை நன்கு விளங்கியது.

''தம்பி! இப்படி ஏகமாக நீங்கள் சிங்களவர்கள் மீது பழி சுமத்துவது ஒருதலைப்பட்சமானது. உதாரணமாகக் கலவரகால நிகழ்ச்சிகளை எடுத்துக் கொள்ளுங்கள்...''

நான் சற்று 'உஷார்' அடைந்தேன். 'நானே தொடங்கிச் சிங்களவர்களின் அட்டூழியத்தை பிக்ஷுவுக்கு உணர்த்த வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்த கலவரகால நிகழ்ச்சிகளை, இவரும் உதாரணத்துக்கு எடுக்கிறாரே' என்பதை எண்ணும்போது சற்று வியப்பாக இருந்தது. என்றாலும் அவரிடம் கூறினேன்:

''இலங்கையில் ஏற்பட்ட இனக் கலவரம் சிங்களவர்களுக்கு என்றும் நீங்காத - நீக்கவொண்ணாத - கறை; வடு!''

''அப்படிச் சொல்லிவிட்டுத் தமிழர்கள் ஒதுங்கிக் கொள்வதால், உண்மை மறைக்கப்பட்டு விடுமா?''

''தாங்கள் என்ன கூறுகிறீர்கள்?''

''உண்மையைச் சொல்லுகிறேன். கசப்பாக இருக்கிறது என்பதற்காக உண்மையை ஏற்றுக் கொள்ளாமல் இருந்துவிட முடியுமா?''

''அப்படியென்றால்?...''

''சிங்களவர்கள் மிருகங்கள்தாம்; ஒத்துக் கொள்ளுகிறேன். ஆனால், தமிழர்களும்...''

நான் வாய்மூடி மௌனியாகும் அளவுக்குப் பிக்ஷு பேசிக்கொண்டு போனார். வண்டியும் தன்பாட்டில் ஓடிக் கொண்டிருந்தது.

நுங்கும் நுரையுமாகக் காளுகங்கை பதினாயிரம் சுழி போட்டுப் பெருகி ஓடிக் கொண்டிருந்தது. நீர்ச் சுழிகளில் சிக்கிய காய்ந்த மூங்கிற் சருகுகள் படாதபாடுபட்டுப் பல்லாயிரம் கரணங்கள் அடித்து நீரோட்டத்தோடு அள்ளுண்டு கொண்டிருந்தன. கங்கையின் இருமருங்கிலும் 'வரிசைப் பிசகாத' ஒழுங்கற்று நின்ற காட்டுமரங்களின் கிளைகள், ஆற்றின் சீற்றத்தால் பெயர்த்தெறியப்பட்டு நீரோடு உருண்டு கொண்டிருந்தன. அதற்கு முந்திய தினம், சிவனொளிபாதமலைச் சாரலில் கொட்டிய கோர மழையின் காரணமாக, அம்மலையில் பிறக்கும் காளுகங்கை, பொங்கிப் பிரவாகமெடுத்துக் கம்பீரத்தோடு அவசரப் பிரயாணத்தை மேற்கொண்டிருந்தது.

'ஹோ' என்ற பேரிரைச்சலோடு, எக்காளத் துள்ளலோடு நதி சென்ற காட்சி, பார்ப்பதற்குப் பயங்கரமாகவும் இருந்தது; பகைமையாகவும் இருந்தது.

இந்த நதிப் பெண்ணுக்கு இன்று என்ன நேர்ந்தது? என்றுமில்லாத உக்கிரத்தோடு இன்று அவள் போர்க்கோலம் பூணக் காரணம் என்ன? தண்மைக்கும், சாந்திக்கும் பெயர் பெற்ற பெண்களோடு ஒப்பிடும் இந்தக் கங்கைக் கன்னிக்கு, இன்று மட்டும் அப்படி என்ன ஆவேசம் வந்தது? மலைப் பாறைகளையும், மண் மேடுகளையும் கிழித்துத் துவம்சம் பண்ணி இப்படி ஒரே ஓட்டமாக ஓடுகிறாளே! ஊழிக் காலம் நெருங்கி விட்டதா? அல்லது...சற்று நேரத்தில் இந்நதிப் படுகையில் அசாதாரண நிகழ்ச்சியொன்றுக்குக் கட்டியம் கூறுகிறாளா? பின் ஏன் இத்துணை துள்ளல்? ஏன் இத்தனை துடிப்பு?

ஆற்றைக் கடந்து அக்கரை செல்ல வேண்டும் அருணாசலம். அந்த அக்கரைச் 'சீமை'யில்தான் அவனுடைய பாடசாலை. மட்டக்களப்பிலிருந்து நூற்றுக்கணக்கான மைல்களைத் தாண்டி ஆசிரியத் தொழில் புரிய வந்திருக்கிறான் அவன்.

இடம் புதிது; இனம் புதிது; இயம்பும் மொழி புதிது. இதற்கு முன் மலைநாட்டுப் பக்கம் தலைகாட்டக்கூட இல்லை அவன். தான் மட்டக்களப்பு ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில், 'பயிற்சி ஆசிரிய'னாகப் பயின்ற போது, ஆசிரிய மாணவர்களெல்லாம் ஒரு தடவை இலங்கை முழுவதும் சுற்றுப் பிரயாணம் போனார்கள். அப்பொழுதுகூட அவன் போன இல்லை. 'சிவனே' என்று கல்லூரியிலேயே இன்னும் சில மாணவர்களோடு இருந்து விட்டான். அந்தக் 'கிணற்றுத் தவளை' மனப்பான்மையை இன்று அவன் தனக்குள்ளாகவே கடிந்து கொண்டான்.

'பேசாமல் 'மானேஜ்மெண்ட்' பாடசாலை ஒன்றில் இடமெடுத்திருந்தால், ஊரோடேயே, வீட்டுக்குப் பக்கத்திலேயே ராஜா மாதிரி படிப்பித்துக் கொண்டிருக்கலாமே!' என்ற 'கட்டுப் பெட்டி' மனப்பாங்கான எண்ணமும் தலைநீட்டத்தான் செய்தது.

'பேசாமல் வந்த வழியே திரும்புவோமா?' என்று அவன் தீர்மானிப்பதற்குள், அக்கரைக்குச் செல்லவேண்டிய இன்னும் சில பிரயாணிகள் அங்கு வந்து சேர்ந்தனர். அத்தனை பேரும் சிங்களவர்கள்!

வந்தவர்கள், ''ஓரியோ! ஓரியோ!'' என்று 'ஒறுவ'க்காரனுக்குக் (தோணிக்காரன்) குரல் கொடுத்தனர்.

'கொஞ்சம் இருங்கள். இதோ வருகிறேன்' என்று சிங்களத்தில் குரல் கொடுத்துக் கொண்டு, அக்கரையிலிருந்த தன் சின்னஞ்சிறு குடிசையிலிருந்து வெளிப்பட்டான், தோணிக்காரன்.

வெளிப்பட்டவன் ஐந்து நிமிஷத்தில் தன் தோணியைச் செலுத்திக் கொண்டு இக்கரைக்கு வந்து சேர்ந்து விட்டான்.

அடித்துப் புரட்டிக் கொண்டு ஆங்காரத்தோடு ஓடிக் கொண்டிருந்த நதியை ஊடுருவி அவன் வந்த அநாயாசத்தைக் கண்டபோது அருணாசலத்துக்குக் குலைநடுக்கம் எடுத்தது.

தோணியில் எல்லாரும் பக்குவமாய் ஏறிக் கொண்டதும், அதைச் செலுத்தத் தொடங்கினான் தோணிக்காரன். நதியின் மத்தியில் தோணி வந்ததோ இல்லையோ; எங்கிருந்தோ ஒரு பூதாகாரமான சுழி தோன்றித் தோணியையும், தோணிக்குள் இருந்தோரையும் வலம் புரியாய்ச் சுழற்றி நீருக்குள் குப்புறக் கவிழ்த்து விட்டது! எல்லாம் மின்வெட்டும் நேரம்தான்.

அருணாசலத்தின் மூக்கின் வழியாக நீர் என்ற மின்னல் ஒன்று புகுந்து அவன் மூளையைத் தாக்கியது. மூச்சுத் திணறிய அருணாசலம், நீச்சல் தெரியாத காரணத்தால், நீரின் போக்கோடு அள்ளுண்டு சென்றான். அவனுடைய அவஸ்தை, அவனுடைய தவிப்பு



போன்: 3524
RES. 72342
தந்தி: கந்தவடி
GANDAVADI

அன்பர்களுக்கும்
ஆதரவாளர்களுக்கும்
பொங்கல் வாழ்த்துக்கள்!

உங்களுக்குத் தேவையான எல்லாவித தங்க நகைகளும், வெள்ளிச் சாமான்களும் நம்பிக்கையாகவும், நாணயமாகவும் கிடைக்கும்

ஆர்டர்களின் பேரில் குறித்த காலத்தில் செய்து கொடுக்கப்படும்

ஒருமுறை நமது கடைக்கு விஜயம் செய்யுங்கள்



கந்தவடி ஸ்ரீராமுலு செட்டி & சன்ஸ்
207-208 நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, சென்னை-1

# தேனா பாங்க்

## எங்கள் முன்னேற்றம்

மக்களின் சுபிட்ச வாழ்வே எங்கள் முன்னேற்றம். நமது நாட்டு மக்கள் பணத்தை சேமித்து, சிறந்த முதலீடு செய்ய உதவுவதே எங்கள் பணி. சென்ற ஆண்டு பல புதுக் கிளைக் காரியாலயங்கள் மூலம் சேவைகளை அபிவிருத்தி செய்வதோடு புதிய சேமிப்புக்களையும் பெருக்கி சுபிட்ச வாழ்வுக்கு வழி செய்தோம்.

| | |
|---|---|
| அங்கீகரிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 1 கோடி |
| வழங்கி செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 50 லக்ஷம் |
| ஒதுக்கப்பட்ட நிதிகள் | ரூ. 60 லக்ஷம் |
| டெபாஸிட்டுகள் (31-12-60) | ரூ. 35 கோடிக்குமேல் |
| புழங்கும் நிதி | ரூ. 42 கோடிக்குமேல் |
| கணக்குகளின் எண்ணிக்கை | 2,00,000க்கு மேல் |

## எங்கள் சேவைகளில் சில

| | |
|---|---|
| சேமிப்புத் திட்டம் | 2½% வட்டி |
| மைனர் சேமிப்புத் திட்டம் | 2½% வட்டி |
| 5 ஆண்டு கேஷ் சர்ட்டிபிகேட்டுகள் | 4½% வட்டி |

வெகுமதி செக்குகள்
சிறிய வெள்ளிக் கட்டிகள்
பரிசுக்குச் சிறந்தது

தேவகரண் நான்ஜீ பாங்கிங் கம்பெனி லிமிடெட்

96 கிளைகள் & 23 சேப் டெபாஸிட் வால்ட்டுகள்

தலைமைக் காரியாலயம்:
ஹார்னிமான் சர்க்கிள்
போர்ட், பம்பாய் - 1



பொதுவான பாங்கிங் அலுவல்களும் வெளி நாட்டுப் பரிவர்த்தனைகளும் நடத்தப்படும்

பிரவின் சந்திர வி. காந்தி
மானேஜிங் டைரக்டர்

> சைவனுக்கு மாமிசத்தின்மீது எத்தகைய வெறுப்பு இருக்கிறதோ, அத்தகைய வெறுப்பு அடிமைத்தனத்தின்மீது ஒவ்வொருவருக்கும் இருக்க வேண்டும். — ராஜாஜி

இவை எவற்றையுமே லட்சியம் செய்யாத அந்தப் பயங்கர ஆறு, தன் சுழிக் கரங்களால் அவனை உருட்டி அடித்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தது.

கண் விழித்த அருணாசலத்துக்கு இன்னுமொரு 'மூச்சுத் திணறல்' காத்திருந்தது. நீரில் மூழ்கியபோது ஏற்பட்ட மூச்சுத்திணறலை விட, இந்த மூச்சுத்திணறல் அவனை மிகவும் திக்குமுக்காட வைத்துவிட்டது.

'சற்றுமுன் தான் கங்கையின் மடியில் கிடத்தப்பட்ட அவன்னைதனைப் பார்க்கச் சகிக்காமல், கங்காதேவியே நேரில் தோன்றி என்னை மீட்டுவிட்டு இதோ நிற்கிறாளா?' என்ற பிரமை தோன்றியது அருணாசலத்துக்கு.

உலகத்து அழகெல்லாம் ஒன்று திரண்ட ரூபலாவண்யத்தோடு, ஒரு மோகனாங்கி அவனெதிரே சொட்டச் சொட்ட நனைந்தபடி நின்று கொண்டிருந்தாள்!

ஆற்றின் முத்துநீர் அவளின் தங்க மேனியிலிருந்து இன்னமும் உலரவில்லை. பல பளிங்கு நீர்த் திவலைகள் அவளின் கருட் குழலில் எண்ணெய் தடவி, அவள் வனப்புக்குப் பட்டை தீட்டின. முகம் எனும் செங்கமலத்தில் சிந்திய நீர் மணிகள், அவள் கதுப்புக் கன்னங்களில் 'கிரீம்' தடவி ஒப்பனை செய்தன. அவள் தேகத்தில் உறவாடிய நீரோ, அவளுக்குப் பட்டு 'வாயி'லாக அணி செய்தது.

அருணாசலம், சுற்றுப்புறச் சூழலை ஒரு தடவை பார்த்துக் கொண்டான். கங்கைக் கரையோரமாக உள்ள ஒரு கரும் பாறையில் தான் நனைந்தபடி படுத்திருப்பது தெரிந்தது. பக்கத்தில் அந்தப் பெண்ணைத் தவிர, வேறு மனித வாடையே தெரியவில்லை.

அருணாசலத்துக்குச் சற்று முன்னால் நடந்த நிகழ்ச்சிகள் ஒன்றொன்றாக நினைவுக்கு வந்தன. தன் எதிரில் நின்ற பெண்ணை நிமிர்ந்து நோக்கினான் அருணாசலம்.

பீதியும், பரபரப்பும் முகத்தில் தெறிக்க அவள் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள். படபடத்த அவள் கண்கள் பதினாயிரம் கதைகள் பேசின.

''தெல் கோமத மாத்தயா?'' தனிச்சிங்களத்தில் தேன்வதைதனை அருணாசலத்தின் காதுகளில் பிழிந்தாள் அந்த மோகனாங்கி.

'இசையைப் பருக மொழி அவசியமே இல்லை!' என்ற ஒரு புது உண்மை அருணாசலத்துக்கு அப்போதுதான் வெளிச்சமாகியது.

''எனக்குச் சிங்களம் தெரியாது. இந்த இடமே எனக்குப் புதிசு. வந்த இடத்தில்...'' நிறுத்தி நிறுத்திப் பேசினான் அருணாசலம். அப்படிப் பேசினால் தமிழ் அவளுக்குப் புரிந்து விடும் என்ற நினைப்பு அவனுக்கு!

என்ன விந்தை! அவன் நினைத்தது சரியாகவே இருந்தது. அவளுக்குத் தமிழ் புரிந்தது! கொச்சைத் தமிழில் கொஞ்சினாள்.

''அது பத்திக் காரியம் இல்லே; எனக்குக் கொஞ்சம் கொஞ்சம் தமில் வரும்!''

''பரவாயில்லையே! நீங்கள் நன்றாகவே தமிழ் பேசுகிறீர்கள். இந்தச் சிங்களப் பகுதியிலிருந்து கொண்டு நீங்கள் எப்படித் தமிழ் பேசப் பழகினீர்கள்?''

''அதெல்லாம் பொறகு சொல்றேன். இப்ப ஒங்களுக்கு எப்படி இரிக்கி? அதைச் சொல்லுங்க'' என்றாள் அவள்.

''ஒருவிதக் குறையுமில்லே. அது சரி, ஆபத்திலிருந்து என்னைக் காப்பாற்றினது யார்?''

''ஏன் என்னெப் பார்த்தாத்தெரியலே?''

''தெரிகிறது. தெரிகிறது. ஆனால்?...''

''இந்தப் பொம்பிளேப் புள்ளையாலே தண்ணியிலே நீந்த முடியுமா என்று சமிசயப் படுறீங்க. இல்லையா, மாத்தயா?''

அவள் கஷ்டப்பட்டுக் கூறியதிலிருந்து பல உண்மைகள் புரிந்தன அருணாசலத்துக்கு.

கங்கையில் அள்ளுண்டு சென்ற அவனை நந்தாவதி-அதுதான் அவள் பெயர்-கண்டிருக்கிறாள். உடனே நீரில் குதித்து நீந்திச் சென்று அருணாசலத்தை எமன் வாயிலிருந்து சாமர்த்தியமாக மீட்டுக் கொண்டு வந்திருக்கிறாள்! அவள் தரையில் மான்! தண்ணீரில் மீன்! பொதுவாகக் கங்கைக் கரையை அடுத்த கிராமங்களில் வாழுகின்ற ஆண்கள்-பெண்கள் குழந்தை-குட்டிகளுக்கு நீச்சல் தண்ணீர் பட்ட பாடு. நதி பஞ்சணை மெத்தை.

அருணாசலம், நந்தாவதியின் குடிசைக்குச் செல்வதற்கிடையில், நந்தாவதியின் குடும்ப விவரம் முழுவதையும் தெரிந்து கொண்டான்.

அப்புஹாமி — புஞ்சிநோனா தம்பதிகளின் ஒரே பெண் நந்தாவதி. இறந்த காலத்தில் சிறப்பாக இருந்த குடும்பம். இடையில் ஏற்பட்ட கால மாற்றத்தால், நிகழ்காலம் இருள் சூழ்ந்ததாகிவிட்டது. இரத்தினக் கல் வியாபாரத்தில் 'டால்' வீசிக் கொண்டிருந்த அவர்கள் குடும்பம், அதில் ஏற்பட்ட பாரிய நஷ்டத்தால் இன்று வறுமைக் குழியில் தள்ளப்பட்டுக் கிடந்தது. நந்தாவதி பக்குவமடைந்த பத்தாம் நாளிலேயே அவள் அன்னை புஞ்சிநோனா பரலோக யாத்திரையை மேற்கொண்டுவிட்டாள். இத்தனையும் போதாதென்று, சிவனொளிபாதத் தெய்வம், அப்புஹாமியின் கால் ஒன்றைக் குரூரமாகப் பறித்துக் கொண்டு அவரை நொண்டியாக்கிவிட்டது. கடந்த வருஷம் வைகாசிப் பௌர்ணமியன்று தன் இரு கால்களாலும் சிவனொளிபாத மலைக்கு ஏறிய அப்புஹாமி, உச்சிக்குச் சமீபத்திலுள்ள 'கரமிட்டிப்பால' என்ற இடத்தில் கால் தடுக்கி விழுந்து, தன் ஒற்றைக் காலைக் கடவுளுக்கு அர்ப்பணித்துவிட்டு முடமாகத் திரும்பினார். உயிர் பிழைத்தது ஆச்சரியம்! இன்று அந்தத் துரதிர்ஷ்டம் பிடித்த குடும்பத்துக்குத் தீனி போடுவது நந்தாவதியின் துணிச்சலே!

அவர்கள் கிராமத்துக்குப் பக்கத்திலுள்ள, 'எதுபுஜுல' ரப்பர்த் தோட்டத்தில் கூலியாகச் சேர்ந்து, இரத்தத்தை வியர்வையாக்கி, அந்த வியர்வையை உணவாக்கும்

'ஜால வித்தை'யைச் செய்து கொண்டு வருகிறாள் நந்தாவதி!

இந்த விவரங்களை இத் தோட்டத்தில் வேலை செய்யும், 'மலைநாட்டுத் தமிழர்'களிடமிருந்து பெற்ற தன் 'கொஞ்சம் கொஞ்சம் தமிழால்' கூறி முடித்தாள் நந்தாவதி.

அருணாசலம், இமியானைவிலுள்ள அரசினர் சிங்களப் பாடசாலையின், தமிழ் 'செக்ஷ'னுக்கு வந்து இப்பொழுது ஐந்து வருடங்களாகி விட்டன. இந்த ஐந்து வருடங்களில் அவனிடத்தில் எத்தனையோ மாற்றங்கள். சிங்களம் அவனுக்கு இப்பொழுது தண்ணீர் பட்டபாடு! நீச்சலில் அவனை மிஞ்ச அந்த வட்டாரத்திலேயே இப்பொழுது ஆள் கிடையாது!

இவற்றில் மட்டுமின்றி, தோற்றத்திலும் அருணாசலத்திடத்தில் ஒரு புதுமை பொலிந்தது: அவன் இங்கு வரும்போது, அவனுடைய மூக்குக்கும், மேலுதட்டுக்கும் இடைப்பட்ட பாகம் 'மழுமழு' வென்று இருந்தது. இப்பொழுது அந்த இடத்தில் 'கருகரு' என்று அரும்பு மீசை அணி செய்தது. மட்டக்களப்பின் 'சுருக்கும்' வெயிலில் கருமையாகி யிருந்த அவன் மேனியில் மலைநாட்டுச் சீதளச் சுவாத்தியம், சந்தன வர்ணத்தைச் சீதனமாய் வழங்கியிருந்தது. நவரத்தினங்கள் பிறக்கும் காலுகங்கையில் நீச்சலடித்து நீச்சலடித்து அவன் மேனியே வைரம் போல் மாறியிருந்தது.

இத்தனை மாற்றங்களுக்கு மத்தியில், அவன் உள்ளத்திலும் ஒரு பெரிய மாற்றம். தன் ஒரே தங்கையும் மற்றும் அவனது தாய் தந்தையரும் இடம் பெற்றிருந்த அவனது உள்ளத்தில், நான்காவது பேர்வழியாக நந்தாவதியும் வந்து, நெருக்கியடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

அவள் போக்கிலும்கூடச் சில மாற்றங்கள்: முன்னர், 'கொஞ்சம் கொஞ்சம் தமிழ்' பேசத் தெரிந்தவள், இப்பொழுது நிறைய நிறையத் தமிழ் பேசக் கற்றிருந்தாள். திருக்குறளில்கூட இரண்டொன்று மனப்பாடம்! முன்னரெல்லாம் எத்தனைதான் கஷ்டம் தொடர்ந்தும், கண்ணீர் விடத் தெரியாதிருந்தவள், இப்பொழுது அடிக்கடி கண்ணீர் சிந்தப் பழகியிருந்தாள். அநேகமாகச் சித்திரையும், ஆவணியும் மார்கழியும் அவள் கண்ணீர் சிந்துவதற்கென்றே பிறந்து கொண்டிருந்தன. இந்த மூன்று மாதங்களிலும்தான் அருணாசலம், விடுமுறைக்காக மட்டக்களப்புக்குச் செல்வது!

பட்ட கடன், தொட்ட கடன், 'பாவியார் வயிற்றில் பிறந்த' கடன் என்று எல்லாக் கடன்களையும், இந்த ஐந்து வருடங்களில் தீர்த்து விட்டான் அருணாசலம்.

சென்ற தையில்தான் அவனுடைய தங்கையின் திருமணம் ஒருபடியாகக் 'கல்லில் நார் உரித்தது போல' நடந்துவிட்டிருந்தது. மாப்பிள்ளையும் அவனைப் போல் ஆசிரியன்தான். வெலிமடையில் வேலை பார்க்கிறான். திருமணம் முடிந்த அடுத்த மாதமே மனைவியை அழைத்துக் கொண்டு போய் விட்டான். இனித் தொல்லை இல்லை. எந்த நிமிஷத்திலும் தன் நெஞ்சைக் கவர்ந்த நந்தாவதியை முறைப்படி தனக்குரியவளாக்கிக் கொள்ள வேண்டியதுதான்!

இந்தச் சுமுக நிலையில்தான் இலங்கையில் இனக் கலவரத் தீ பற்றிக் கொண்டது! நெருப்புக்கும் இலங்கைக்கும் ஒரு நீங்காத உறவு போலும்! முன்னர் ஒரு தடவை அநுமான் சுட்டுப் பொசுக்கினான். அவன் வழித்தோன்றலான மனிதர்கள் இன்று சுட்டுப் பொசுக்குகிறார்கள்!

இத்தருணத்தில் அருணாசலத்துக்கு ஊரிலிருந்து ஓர் அவசரத் தந்தி வந்தது:

'அன்னையின் நிலை ஆபத்து. உடனே புறப்படு!'

தந்தியை நந்தாவதியிடம் படித்துக் காட்டினான் அருணாசலம்.

"இந்நிலையில் நீங்கள் எப்படிப் போக முடியும்? வழியெல்லாம் வெறியர்கள் சவக்குழி தோண்டுகிறார்களே!"

"நான் இங்கு இருப்பதும் ஆபத்துத்தானே! தவிரவும், நான் ஊர் செல்லாவிட்டால் அம்மா பிழைக்கவே மாட்டாள். நான் எப்படியும் போயே தீரவேண்டும். தங்கைகூட இல்லை. மாப்பிள்ளையும் அவளும் வெலிமடையில் என்ன ஆனார்களோ?" என்று குமைந்தான் அருணாசலம்.

நந்தாவதிக்கு ஒன்றுமே ஓடவில்லை.

"நான் எப்படியும் இன்று போயே தீர வேண்டும்" என்று வெறி பிடித்தவன்போல் கத்தினான் அருணாசலம்.

அவனைத் தடுப்பதில் பயனில்லையெனக் கண்ட நந்தாவதி, மெல்ல அவனை அணுகி, "உங்களோடு நானும் வருகிறேன்!" என்றாள்.

அவள் கோரிக்கையை ஏற்கக் கண்டிப்பாக மறுத்துவிட்டான் அருணாசலம்.

அவன் உறுதியை அசைக்க முடியாதெனக் கண்ட நந்தாவதி, ஒருமுடிவுக்கு வந்தவளாய், அவன் காதுக்குள் எதையோ 'குசுகுசு'த்தாள். அதைக் கேட்ட அருணாசலத்தின் முகத்தில் நம்பிக்கை ஒளி படர்ந்தது.

அருணாசலம் இப்பொழுது அருணாசலமாகவே இல்லை! ரத்த வெறி பிடித்த ராக்ஷஸனாக மாறியிருந்தான். மனித இனத்தின் ஊன் குடிக்கும், 'ஊத்தைக் குடிய'னாகத் தோற்றமளித்தான்.

மட்டக்களப்பு—பதுளைச் சாலையில், கராடியனாற்றுக் காட்டின் மத்தியில், பல குண்டர்களைத் துணை சேர்த்துக் கொண்டு மனித வேட்டைக்காகப் பதுங்கி யிருந்தான்.

தூரத்தே, பதுளைப் பக்கமிருந்து இருளைக் கிழித்தபடி ஒரு கார் மின்னல் வேகத்தில் பாய்ந்து வந்தது. இதைக் கண்டுவிட்ட அருணாசலம், சாலையின் குறுக்கே கட்டையைப் போட்டு மறிக்கும்படி தன் குண்டர்களுக்குக் கட்டளை பிறப்பித்தான்.

இமைக்கும் நேரத்தில் கட்டளை நிறைவேற்றப்பட்டது. துப்பாக்கியைத் தயார் பண்ணியபடி எல்லாரும் காட்டுக்குள் பதுங்கிக் கொண்டனர்.

இதோ கார் நெருங்கி விட்டது.

கரும் பூதம்போல் சாலையின் குறுக்கே கிடந்த கட்டைக்குச் சமீபமாக வந்த கார், 'கிரீச்' என்ற 'பிரேக்'கோடு நிறுத்தப் பட்டுவிட்டது.

''காருக்குள் இருப்பது, 'சிறுப் புள்ளி'யா? 'தாளுப் புள்ளி'யா? என்று பார்த்துவர இரண்டு குண்டர்களை அனுப்பி விட்டு, துப்பாக்கியை நீட்டியபடி 'ரெடி'யாக நின்றான் அருணாசலம்.

மோப்பம் பிடிக்கச் சென்றவர்கள், ''காருக்குள் இருப்பவர்கள் 'சிறுப்புள்ளி'கள்தான்'' என்பதற்கு அடையாளமாகச் சீழ்க்கை யடித்தார்கள். அடுத்த கணம்? 'டுமீல், டுமீல்' என்று துப்பாக்கி முழங்கி ஓய்ந்தது. எல்லாக் குண்டர்களும், 'தட, தட' என்று காருக்குச் சமீபமாக ஓடினார்கள். அருணாசலம் 'டார்ச்'சை அடித்துக் காருக்குள் பார்வையைச் செலுத்தினான்.

உள்ளே......?

ஒரு கிழவர்; ஒரு பெண்; டிரைவர்-மூவரும் இரத்த வெள்ளத்தில் நீச்சலடித்தார்கள்.

அந்த மூன்று ஜீவன்களும் முக்கி முனகிய படி மரண ஓலமிட்டுக் கொண்டிருந்தன. அந்த மயானச் சூழலின் மத்தியிலும் அவர்களில் யாரோ எதையோ கூற முயல்வதும் வெளியில் நின்ற அருணாசலத்துக்குத் தெளிவாய்க் கேட்டது.

''துவே! மகே ரத்ரம் துவே! நந்தா! நந்தாவதி......'' பழக்கப்பட்ட ஒரு கிழக்குரல் முனகியது.

காதைக் கூராக்கினான் அருணாசலம்.

''தாத்தே! மகே தாத்தே! தமிலே தமிலே'' என்று குரல் கொடுத்தது ஓர் இனியகுரல்.

அந்தக் குரலைக் கேட்ட அருணாசலத்தின் உரோமங்கள் குத்திட்டு நின்றன. சருமத்தைக் கிழித்துக்கொண்டு வெளியே பாய்வதற்கு ஆயத்தமானது அவன் குருதி.

''நந்தாவதி! என் அன்பே!'' என்று அலறி விட்டான் அருணாசலம். காருக்குள் அலங்கோலமாகக் கிடந்த அவள் ரத்தமேனியை வாரி எடுத்துத் தன் மார்பில் அணைத்துக் கொண்டான்.

நந்தாவதி அவன் அணைப்பில் மெய்ம்மறக் கக்கூடிய நிலையில் இல்லை. உயிர் பிரிவதற் கிடையில், தான் வந்த நோக்கத்தைக் கூறத் தொடங்கினாள்:

''அன்பரே! விதியின் பிரகாரம் விஷயம் நடந்துவிட்டது. இப்பொழுது உங்கள் நாட்டை நெருங்கிக் கொண்டிருக்கும் இன்னொரு விதியை நீங்கள் உடனடியாக மாற்றி யமைக்க வேண்டும்; உங்கள் நாட்டைத் துவம்சம் பண்ணுவதற்கு, இரத்தினபுரியிலிருந்து லாரிகள் மூலம் புறப்பட்டுள்ள நரசோரக் கோஷ்டி, இதற்குள் கொழும்பு மார்க்கமாகப் பொலநறுவைக்கு வந்து சேர்ந்திருக்கும். அங்கு பொலநறுவைக் கோஷ்டியை ஜோடி சேர்த்துக் கொண்டு மட்டக்களப்புக்குள் புகுவது அதன் திட்டம். இந்தச் சதித் திட்டத்தை ரகசியமாக அறிந்து கொண்டு, நானும், தந்தையும் உங்களைப் பார்க்க விரைந்து கொண்டிருந்தோம். இடையில் இப்படி ஆகி விட்டது. என்னைப் பற்றியோ, என் தந்தையைப் பற்றியோ நீங்கள் இனி கவலைப்பட நேரம் இல்லை. போங்கள். போய் உங்கள் நாட்டு மக்களை எச்சரிக்கை செய்யுங்கள்.'' 'மளமள' வென்றுகூறி முடித்தாள் நந்தாவதி. அணையப் போகும் விளக்கின் பிரகாசம் மின்னியது அவள் பேச்சில்.

அருணாசலத்தின் மூளைக்குள் துப்பாக்கி வெடித்தது; மின்னல் மின்னியது; இடி இடித்தது; சமுத்திரம் பொங்கியது. செயலிழந்து நின்ற அவன் மார்பில் துவண்டு கிடந்த நந்தாவதியின் மூச்சும் செயலிழந்தது! அவள் தந்தையும், கார் டிரைவரும் அப்பொழுதே விறைத்து விட்டார்கள்!

பிக்ஷு கதையைக் கூறி முடிப்பதற்கும், வண்டி 'ஹாய்' என்ற பேரிரைச்சலுடன் பொலநறுவையை வந்து அடைவதற்கும் சரியாக இருந்தது.

அதுவரையில் கதையில் ஒன்றியிருந்த நான் மணியைப் பார்த்தேன். பின் ஜாமம் 3-30. புறப்பட எழுந்த பிக்ஷுவிடம், ''அன்னையைப் பார்க்க ஊருக்குச் சென்ற அருணாசலம், திடீரென்று அத்தனை கொடிய வெறியனாக எப்படி மாறினான்? கலவரம் உச்சநிலையை அடைந்திருந்த அந்தப் பயங்கர வேளையில் அவன் எப்படி ஊருக்குச் சென்றான்?'' என்று இயற்கையாகவே என்னுள் எழுந்த கேள்விகளைக் கேட்டு வைத்தேன்.

அவர் பதிலே பேசவில்லை. மெதுவாகக் கீழே இறங்கி 'விருட்'டென்று நடந்து விட்டார்! ஆனால், அவர் அமர்ந்திருந்த இடத்தில் கிடந்த 'டயரி' ஒன்று என்னைப் பார்த்துச் சிரித்து நின்றது!

அவசரம் அவசரமாக அதை எடுத்து அவரிடம் கொடுப்பதற்கு முயன்றேன். அதற்குள் அவர் மறைந்தே விட்டார்!

என்னை மீறிய ஆவலொன்று அந்த 'டயரி'யைப் புரட்டிப் பார்க்கத் தூண்டியது. புரட்டினேன். என்ன விந்தை! முத்து முத்தான தமிழில் அந்த 'டயரி' எழுதப் பட்டிருந்தது.

'என்னதான் எழுதப்பட்டிருக்கும்?' என்று படிக்கத் தொடங்கினேன்:

'புத்தர் பிரானே! போதிமர நிழலில் மோனத் தவமியற்றும் புனிதத் தலைவனே! கருணைப் பெருங்கடலே! என்னை மன்னித்து விடு ஐயனே! அன்று நான் அத்தனை வெறியாட்டமாடி மனித ரத்தம் குடித்ததற்கு என் ஒரே தங்கையை இழந்து தவித்ததே காரணம். அன்னையைப் பார்க்க ஓடோடிச் சென்ற என்னை வரவேற்றது, வெளிமடையிலிருந்து வந்த அந்தப் பயங்கரச் செய்தி. கருவுற்றிருந்த என் தங்கையைக் கண்ட துண்டமாக வெட்டி எறிந்து விட்டார்கள் சிங்களவர்கள். அதனால் ஏற்பட்ட பழி உணர்ச்சி, என் உயிரை நீரிலிருந்து மீட்ட- என் நாட்டைப் பயங்கர ஆபத்திலிருந்து காத்த - என் உயிரினும் இனியவளையே பலி கொண்டு விட்டது! இதைவிடத் தண்டனை எனக்கு வேண்டியதில்லை, தேவா! அன்று என் அன்னையைக் காண, அந்த உத்தமி சொன்ன ஆலோசனைப்படி புனித மஞ்சளங்கி தரித்துத் தற்காலிக பிக்ஷுவாகி, ஓர் ஆபத்து மின்றி ஊர் போய்ச் சேர்ந்தேன். இன்று அதே புனித அங்கி தரித்து நிரந்தரமாகவே உன் பக்தனாகி விட்டேன். உன் நிழலில் ஒதுங்கியுள்ள என்னை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும், ஞானதேவா! - அருணாசலம்.'

# காம்கோஸ்

## நவீன வாழ்க்கைக்கு ஏற்றது!

நவீன வாழ்க்கைச் சுகத்தை மூன்று முக்கிய மான காம்கோஸ் தயாரிப்புப் பொருள்களின் மூலம் அதிகப்படுத்துங்கள்.

"காம்கோஸ் ஆட்டோமாடிக் ஸ்டோரேஜ் வாட்டர் ஹீட்டர்" ஐ உபயோகித்து வெந்நீரில் குளித்து சுகமடையுங்கள். இந்த ஹீட்டர் 90-பா முதல் 190 வரை இயங்க வல்லது.

"காம்கோஸ் வாட்டர் பாய்லர்" பொருத்த அளவில் வேண்டியபோது உடனே வெந்நீர் தயாரித்துக் கொடுக்கக் கூடியது.

"காம்கோஸ் 16 mm. சவுண்ட் புரொஜக்டர்" தோற்றத்தில் எளிதாயினும் நடைமுறையில் திறமை மிக்கதாயிருக்கிறது. ...
கல்வி ஸ்தாபனங்கள், தொழிற்சாலைகள் சங்கங்கள், விளம்பர வேலை முதலியவைகளுக்கும் உபயோகமானது. வீட்டிலே சினிமாப் படங்களைப் பார்த்து மகிழ்ச்சியுறலாம்.




உற்பத்தியாளர்கள் :

# அம்கோ

என்ஜினீரிங் கார்ப்பொரேஷன்
இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்
கிண்டி, மதராஸ்

தென் பிராந்தியத்துக்கு வினியோகஸ்தர்கள் :

சினி புரொஜக்டர்கள் :
முஹமத் இப்ராஹிம் & கம்பெனி பிரைவேட் லிமிடெட்
7/8, மவுண்டு ரோடு, சென்னை - 2

வீட்டு உபகரணங்கள் :
ஓபுல் ரெட்டி மதராஸ் பிரைவேட் லிட்.
31, ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு
சென்னை - 2

# மணி

## முதற் பருவம்

## பூம்புகார் நகரம்

**தோரணவாயில்** :---பூரணமான இந்தக் கதை மாளிகையின் தோரண வாயிலில் ஆவல் பொங்க நிற்கும் வாசக அன்பர்களுக்குச் சில வார்த்தைகள். சற்றே கண்களை மெல்ல மூடிக் கொள்ளுங்கள்! மணிமேகலையும், சிலப்பதிகாரமும் நிகழ்ந்த காலத்துப் பூம்புகார் நகரத்தையும், மதுரையையும் வஞ்சிமா நகரையும் ஒரு விநாடி உருவெளியில் உருவாக்கிக் காணுங்கள். பழைய பெருமிதத்தோடு சார்ந்த எண்ணங்களை நினைத்துக் கொண்டே காணுங்கள்

அடடா! எவ்வளவு பெரிய நகரங்கள். எத்துணை அழகு! மாட மாளிகைகள் ஒரு புறம். கூடகோபுரங்கள் ஒரு புறம். சித்திரைப் பொய்கைகள் ஒருபுறம். செந்தமிழ் மன்றங்கள் ஒருபுறம். பல பல சமயத்தார் கூடி வாதிடும் சமயப் பட்டிமன்றங்கள் ஒரு புறம். கோவில்கள், கோட்டங்கள், ஆற்றங்கரைகள், கடற்கரைகள், பெருந் தோட்டங்கள், பூம்பொழில்கள்,— நினைப்பில் அளவிட்டு எண்ணிப் பார்க்க இயலாத பேரழகு அல்லவா அது? சங்குகள் ஒலி விம்ம, மகரயாழும், பேரியாழும் மங்கல இசை எழுப்ப, மத்தளம் முழங்க, குழலிசை இனிமையிற் குழைய, நகரமே திருமண வீடு போல் நகரமே நாளெல்லாம் திருவிழாக் கொண்டாடுவது போல் என்ன அழகு! என்ன அழகு! சொல்லி மாளாத பேரழகு! சொல்லி மீளாத பேரழகு!

நம் முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து முடித்த பழமையை நினைக்கும் போது, எவ்வளவு பெருமிதமாக இருக்கிறது. இன்று அந்தப் பழம்பெரும் நகரங்களையும், அவற்றின் அரச கம்பீர வாழ்வையும் நினைக்கும்போது நீங்கள் உணர்வதென்ன? விழிகளில் கண்ணீரும், நெஞ்சில் கழிவிரக்க நினைவும் சுரக்க உருவெளியில் அந்த மாபெரும் நகரங்களைக் கற்பனை செய்து காண முயலும்போது உங்கள் செவிகள் அவற்றில் ஒலித்த இன்னொலிகளைக் கேட்கவில்லையா? உங்கள் நாசியில் அகிற்புகை, சந்தனம், நறுமண மலர்கள், மணக்கவில்லையா? உங்கள் சிந்தனை அவற்றின் வளமான பெருவாழ்வை நினைக்கவில்லையா? அத்தகைய பெருநகரங்களின் செழிப்பு நிறைந்த வாழ்வினூடே நமது கதை நுழைந்து செல்கிறது என்பதற்காக நாம் பெருமிதம் கொள்ளலாம் அல்லவா?

தமிழகத்தில் சரித்திர நாவல்கள் என்றால் அரசர்-அரசி, படை வீரர், படைத் தலைவர், அமைச்சர், என்று கதாபாத்திரங்களை வகுத்துக் கொண்டு எழுதுவதே இதுவரை வழக்கம். இதனால் ஆண்ட வாழ்வின் ஒருபகுதி ஒளி நிறுவிக் காட்டப்பட்டதே தவிர ஆளப்பட்ட வாழ்வு என்ற பெரும் பகுதி விவரிக்கப் பெறவில்லை. பேரரசர்

# பல்லவம்

பலர் போர்கள் செய்து வெற்றி வாகை சூடி வீர வாழ்வு வாழ்ந்தும், அரசவையில் அரியணையில் அமர்ந்தும், பீடுறக் காலங் கழித்த நாளில் அவர்கள் அங்ஙனம் காலங் கழிக்கக் காரணமான மக்களும் பல்லாயிரவர் வாழ்ந்திருக்கத் தானே வேண்டும்?

அந்த மக்களிலும் வீரர்கள் இருந்திருப்பார்கள். பலவேறு சமயச் சார்புள்ள விதவிதமான மக்கள் விதவிதமாக வாழ்ந்திருப்பார்கள். ஈடு சொல்ல முடியாத அழகர்கள் இருந்திருப்பார்கள். அரச குலத்து நங்கையரை அழகிற் புறங் காணும் பேரழகிகள் இருந்திருப்பார்கள். அவர்களிடையே நளினமான உறவுகள், காதல், களிப்பு, எல்லாம் இருந்திருக்கும். வாழ்க்கைப் போராட்டங்கள் இருந்திருக்கும். ஆனால் பெரும் பான்மையானதும், சரித்திரத்தை உண்டாக்கியதும், சரித்திரத்தின் பொன்னேடுகளில் நாயகம் கொண்டாடும் பேரரசர்களை அப்படிப் பேரரசர்களாக ஆக்கியதுமான, இந்த மக்கள் கூட்டத்தின்மேல் வரலாற்று நாவலாசிரியர்கள் எந்த அளவு ஒளியைப் படர விட்டார்கள்? எந்த அளவு கவனம் செலுத்த முயன்றார்கள்?

பழைய வாழ்வின் இந்த அழகிய பகுதி மறைந்தே இருக்கிறது. மணிபல்லவம் கதையின் முக்கிய நோக்கங்களில் இந்த அழகிய வாழ்க்கையைப் புனைந்து கூற முயல்வதும் ஒன்று. மணிபல்லவம் கதையின் நாயகன் ஓர் அற்புதமான இளைஞன். காவிரிப்பூம் பட்டினத்துப் பொது மக்களிடையே வாழ்ந்து வளர்ந்து அழகனாய், அறிஞனாய், வீரனாய், உயர்ந்து ஓங்குகிறவன். பருவத்துக்குப் பருவம் அவனுடைய விறுவிறுப்பான வாழ்வில் மாபெரும் மாறுதல்கள் நிகழ்கின்றன. அதனால் இந்தக் கதையின் ஒவ்வொரு பகுதிக்கும் பாகம் என்று பெயரிடாமல் கதாநாயகனின் வாழ்க்கை மாறுதல்களை மனத்திற் கொண்டு பருவம் என்று பெயரிடுகிறேன். கதாநாயகனின் வாழ்வில் நிகழும் பெரிய பெரிய மாறுதல்களுக்கு எல்லாம் மணிபல்லவத்தீவு காரணமாகிறது. அவனுடைய வாழ்வில் இறுதி வரை விளங்கிக் கொள்வதற்கு அரிதாயிருக்கும் மிகப் பெரிய மர்மம் ஒன்றும் மணிபல்லவத்தில்தான் விளங்குகிறது. அந்த மெய் அவன் கண்களைத் திறக்கிறது. தன்னைப் பற்றிய பரம இரகசியத்தை அன்று அங்கே அவன் விளங்கிக் கொள்கிறான்.

இன்னும் இந்தக் கதையில் எழில் நிறைந்த பெண்கள் வருகிறார்கள். ஆனால் அவர்கள் அரசகுல நங்கையரில்லை. காதலும், வீரமும், சோகமும், இன்பமும், சூழ்ச்சியும், சோதனையும் வருகின்றன. ஆனால் அவை அரண்மனைகளையும் அரசமாளிகைச் சுற்றுப் புறங்களையும் மட்டும் சார்ந்து வரவில்லை. போரும், போட்டியும் வருகின்றன. ஆனால் அவை மணிமுடி தரித்த மன்னர்களுக்கிடையே மண்ணாசை கருதி மட்டும் வரவில்லை. சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற மாபெரும் காவியங்கள் பிறக்கக் காரணமாயிருந்தது போன்ற காலச் சூழலைப் பின்னணியாகக் கொண்டு அந்தப் பெருங் கதைகளில் கண்ட மிகப் பெரியதும் அளப்பரியதுமான பூம்புகார் நகரை உங்கள் கண் பார்வையிற் கொண்டு வந்து காட்ட முயல்கிறேன்.

அதோ!

சிறப்புமிக்க சித்திரை மாதம். காவிரிப் பூம்பட்டினம் இந்திர விழாக் கொண்டாடத் தொடங்கியிருக்கிறது. எங்கும் இனிய ஒலிகள். எங்கும் அலங்காரப் பேரொளி. எங்கும் மணமலர் அகிற்புகை வாசனை. எங்கும் மக்கள் வெள்ளம். காவிரி கடலொடு கலக்கும் சங்கமுகத்தில் விழாக் கூட்டம். யானைகளிலும், குதிரைகளிலும், தேரிலும், சித்திர ஊர்திகளிலும் விரையும் மக்கள். கடல் முடிந்து கரை தொடங்குமிடத்தில் மற்றொரு கடல் தொடங்கி ஆரவாரம் செய்வது போல் அலை அலையாய் மக்கள் குழுமியிருக்கின்றனர். மஞ்சளும், சிவப்புமாய் வண்ண வண்ண நிறம் காட்டும் மாலை வானத்தின் கோல எழில் குலவும் நேரம்; அடங்கிய பொழுது. அந்த நேரத்தில் அந்த விழாக் கோலங் கொண்ட கடற்கரையில் ஒரு பரபரப்பான இடத்தில் பரபரப்பான சூழ்நிலையில் நம்முடைய கதாநாயகனைச் சந்திக்கிறோம். கதை தொடங்குகிறது. கதை மாளிகைக் குள்ளே நுழையலாம்: வாருங்கள்.

**நா. பார்த்தசாரதி**

# 1. இந்திர விழா

பூம்புகார் நகரம் புதுவிழாக் கோலம் பூண்டு எழிலுடன் விளங்கியது. சித்திரை மாதத்தில் சிறப்பு வாய்ந்த சித்திரை நாள். வானத்தின் கீழ் மூலையில் வெண்மதி முழுநிலா விரித்துக் கொண்டிருந்தது. 'இந்திர விழாத் தொடங்குகிறது' — என்று வச்சிரக் கோட்டத்து முரசம் ஒலி பரப்பியபோதே அந்தப் பேரூர், விழாவுக்கான புதுமையழகுகளைப் புனைந்து கொள்ளத் தொடங்கி விட்டது. விழாவுக்கான புத்துணர்வும் புது மகிழ்வும் பெற்று விட்டது.



அடடா! அதோ, காவிரி கடலொடு கலக்கும் காவிரி வாயிற் சங்கமத் துறையில்தான் எவ்வளவு பெருங் கூட்டம். கடலுக்கு அது கரை, ஆனால் அந்தக் கரைக்குக் கரையே இல்லாததுபோல் மக்கள் திரண்டிருந்தனர். எத்தனை வித ஒலிகள்! எத்தனைவித ஒளிகள்! எத்தனை வகை மணங்கள்! ஆடவரும், பெண்டிரும், இளைஞரும், முதியரும், சிறுவரும், சிறுமியருமாக, அழகாகவும், நன்முகவும் அணிந்தும், புனைந்தும், உடுத்தும் வந்திருந்தனர். நோக்குமிடம் எங்கும் நிருத்த கீத வாத்தியங்களின் இனிமை நிகழ்ந்தது. இந்திர விழாவுக்காக எத்தனை விதமான கடைகள் காவிரிப்பூம் பட்டினத்தில் உண்டோ, அவ்வளவும் கடற்கரைக்கு வந்திருந்தன. இன்ன இன்ன கடையில் விற்கப்படும் பொருள்கள் இவையிவை என்பதை அறிவிக்க ஏற்றிய பல நிறக் கொடிகள் விசிப் பறந்து கொண்டிருந்தன. பூவும், சந்தனமும், கூவிக் கூவி விற்கும் மணம் நிறைந்த பகுதி, பொன்னும், மணியும், முத்தும், பவழமும் மின்னும் ஒளி மிகுந்த கடைகள், பிட்டு விற்கும் காழியர்களின் உணவுக் கடைகள், பட்டுத் துகிலும் பகர்ந்து விற்கும் கடைகள், வெற்றிலை விற்கும் பாசவர்களின் கடைகள், கற்பூரம் முதலிய ஐந்து வாசனைப் பொருள்களை விற்கும் வாசவர் கடைகள்,—எல்லாம் நிறைந்து கொடுப்போர் குரலும், கொள்வோர் குரலுமாகப் பேராரவாரம் மிகுந்து கடற்கரை கடைக் கரையாகவே மாறி யிருந்தது. செல்வச் செழிப்பு மிக்க பட்டினப் பாக்கத்து மக்களும், மருவூர்ப் பாக்கத்து மக்களும், கழிக்கரைகளில் வசித்து வந்த யவனர்களும், எல்லோரும் கடற்கரையிலே கூடிவிட்டதனால், நகரமே வறுமையடைந்து விட்டாற்போல், வெறுமை பெற்றிருந்தது. நாளங்காடித் தெருவிலுள்ள பூத சதுக்கத்துக் காவற் பீடிகையில் மட்டும் பொங்கலிடுவோர் கூட்டம் ஓரளவு கூடி யிருந்தது. அது தவிர மற்றெல்லாக் கூட்டமும் கடற்கரையில்தான்!

அவ்வழகிய கடற்கரையின் மேற்குக் கோடியில் மற்போர் நடந்து கொண்டிருந்த இடத்தில் பரபரப்பு அதிகமாயிருந்தது. கூத்து, இசை, சமயவாதம் முதலியனவெல்லாம் நிகழ்ந்து கொண்டிருந்த அரங்கங்களைவிட மற்போர் அரங்கத்தில் ஆர்வம் காரணமாக ஆண்களும் பெண்களுமாக இள வயதினர் மிகுந்து கூடியிருந்தனர். முழுமதியின் ஒளி பரவும் வெண் மணற் பரப்பில் பல வகைக் கோலங்களைப் பாங்குறப் புனைந்து நின்றிருந்த பட்டினப் பாக்கத்துச் செல்வ நங்கையர் கந்தருவருலகத்து அரம்பையர் போல் காட்சியளித்தனர். எட்டி, காவிதி, போன்ற பெரும்பட்டங்கள் பெற்ற மிக்க செல்வக் குடும்பத்து இள நங்கையர் சிலர் பல்லக்குகளில் அமர்ந்தவாறே திரையை விலக்கி மற்போர்க் காட்சியைக் கண்டுகொண்டிருந்தனர். அவர்கள் செவ்விதழ்களில் இளநகை அரும்பிய போதெல்லாம், எதிர்ப்புறம் நின்றிருந்த பூம்புகார் இளைஞர் உள்ளங்களில் உவகை மலர்ந்தது. பொன்னிறத்துப் பூங்கரங்களில் வளைகள் ஒலித்தபோதெல்லாம் அங்கே கூடியிருந்த இளைஞர் நினைவுகளில் அவ்வொலி எதிரொலித்தது. அவர்கள் மென்பாதங்களில் மாணிக்கப் பரல் பொதித்த சிலம்பு குலுங்கின போதெல்லாம் இளைஞர்தம் தோள்கள் பூரித்தன. அல்லிப் பூவின் வெள்ளை இதழில் கருநாவற் கனி உருண்டாற்போல் அவர்கள் விழிகள் சுழன்ற போதெல்லாம் இளைஞர் எண்ணங்களும் சுழன்றன. மற்போரும் களத்தில் நடந்து கொண்டுதான் இருந்தது.

ஆனால் இவற்றையெல்லாம் அலட்சியம் செய்தவன்போல் ஒதுங்கி நின்று கொண்டிருந்த தீரன் ஒருவனும் அந்தக் கூட்டத்தில் இருந்தான். கூட்டத்தில் அவன் நின்ற இடம் தனியாய்த் தெரிந்தது. கைகளைக் கட்டியவாறு கம்பீரமாக நிமிர்ந்து நின்று கொண்டிருந்த அந்த அழகிய இளைஞன் பார்வையிலிருந்தும், நின்ற விதத்திலிருந்தும் தான் எதற்கும் அஞ்சாதவன், எதற்கும் கவலைப்படாதவன் என்று தன்னைப் பற்றி அநுமானம் செய்துகொள்ள வைத்தான். அவனுக்குப் பணிந்து மரியாதை செய்யக் கூடியவர்கள் போல் தோற்றமளித்த நாலைந்து விடலைத்தனமான இளைஞர்களும் அவனைச் சூழ்ந்து நின்றனர். செந்தழல் போல் அழகிய சிவப்பு நிறமும், நீண்ட முகமும், எழில் வடிந்த நாசியும், அழுத்தமான உதடுகளும், அவனுடைய தோற்றத்தைத் தனிக் கவர்ச்சி யுடையதாக்கிக் காட்டின. அமைந்து அடங்கிய அழகுக் கட்டு நிறைந்த உடல், அளவான உயரம், மிகவும் களையான முகம், இவற்றால் எல்லோரும் தன்னைக் காணச் செய்து கொண்டு, தான் எதையுமே காணாததுபோல் மற்போரை மட்டும் கவனித்துக் கொண்டு நின்றான் அந்த இளைஞன். இணையற்ற அழகுக்குச் சரிசமமாக அவனுடைய விழிகளின் கூரிய பார்வையில் அஞ்சாமையின் சாயல்

அபிமானிகள் அனைவருக்கும்

எமது அன்பு கனிந்த

பொங்கல் வாழ்த்துக்கள் !

உத்திரவாதமான
தங்க நகைகள்
வாங்குவதற்கு
சிறந்த இடம்!

ராதாகிருஷ்ண
ஜுவல்லரி.

பெரியகடை வீதி,
கோயமுத்தூர்.




சீல்
நம்பிக்கையானது

உரிமையாளர்.
S.T.ராதாகிருஷ்ணன்.

போன் : 2140.

SEKHAR. —OSR



always INSIST

ON

Phenix
FAN

THE ENGINEERING WORKS OF INDIA PRIVATE LTD.
1/4C GUN FOUNDRY ROAD, CALCUTTA

EWI

சென்னை, ஆந்திரம், பாண்டிச்சேரி
ராஜ்யங்களுக்கு பிரதான ஏஜண்டுகள் :

கில்லெண்டர்ஸ் அர்பத்நாட் & கோ.
லிமிடெட்

3, நார்த் பீச் ரோடு, சென்னை - 1

கேரளா, மைசூர் ராஜ்யங்களுக்கு
பிரதான ஏஜண்டுகள்

சௌத் இந்தியா கார்ப்பொரேஷன்
(பிரைவேட்) லிமிடெட்

திருவனந்தபுரம், எர்ணாகுளம், பெங்களூர்

அழுத்தமாகத் தெரிந்தது. 'இவன் நம் பக்கம் சற்றே விழி சாய்த்துப் பார்க்க மாட்டானா' — என்று முறுவலுக்கும், வளையொலிக்கும் சொந்தக்காரர்கள் ஏங்க எதற்குமே தான் ஏங்காதவன் போல் மற்போரில் கவனமாக நின்றிருந்தான் அந்த இளைஞன். ஏக்கங்களைப் பலருக்கு உண்டாக்கிக்கொண்டு நிற்கிறோம் என்பதையே உணராதவன்போல் தான் சிறிதும் ஏங்காமல் நின்றான். ஆசைகளுக்கு ஆசைப்படுகிற அழகாகத் தெரியவில்லை அது! ஆசைகளையே ஆசைப்பட வைக்கிற அழகாகத் தோன்றியது. அவ்வளவிற்கும் ஆடம்பரமான அலங்காரங்கள் எதுவும் அவனிடம் காட்சியளிக்கவில்லை. முத்தும், மணியும், பட்டும் புனைவுமாகச் செல்வத் திமிரைக் காட்டிக் கொண்டு நின்ற பட்டினப்பாக்கத்து இளைஞர்களின் தோற்றத்திலிருந்து வேறுபட்டு எளிமையாகத் தோன்றினான் அவன். அவனைச் சுற்றிச் சீடர்கள் போல் நின்ற இளைஞர்கள் இடையிடையே மற்போர் பற்றி உணர்ச்சி வசப்பட்டு அவனிடம் ஏதோ கூறிய போதெல்லாம் 'சிறிது பொறுத்திருங்கள்' — என்று பதறாமல் மெல்லக் கூறினானே தவிர அவன் உணர்ச்சி வசப்படவில்லை. ஆனால் மற்போரை நன்கு கூர்ந்து கவனித்து வந்தான். மற்போரை உற்சாகப்படுத்தி நடுநடுவே கூட்டத்தினர் ஆரவாரக் குரலெழுப்பியபோது அதிலும் அவன் கலந்து கொள்ளவில்லை. அலட்சியமான மென்னகை மட்டும் அவனது சிவந்த இதழ்களில் ஓடி மறைந்தது.



மிகவும் வலிமை வாய்ந்த யவன மல்லன் ஒருவன் களத்தில் வெற்றியோடு போர்புரிந்து கொண்டிருந்தான். போர் தொடங்கியதிலிருந்து தொடர்ந்து அவனே வென்று கொண்டிருந்தான். அதே களத்தில் மூன்று தமிழ் மல்லர்களையும், நாகர் இனத்தைச் சேர்ந்த இரண்டு மல்லர்களையும் தோற்கச் செய்து அந்த வெற்றியாணவத்தில் மேலும் அறைகூவி ஆட்களை அழைத்துக் கொண்டிருந்தான் யவன மல்லன். அவனுடைய முகத்திலும், தோள்களிலும் வெற்றி வெறி துடித்தது. செருக்கின் சாயல் தெளிவாய்த் தெரிந்தது. காரணம் அவனால் தோல்வி யடைந்த மூன்று தமிழ் மல்லர்களும், சோழ நாட்டிலேயே சிறந்த மற்போர் வீரர்களெனப் பெயர்பெற்றவர்கள். வெற்றியில் பெருமிதம்தான் இருக்கிறது. ஆனால் வல்லவர்களை வெல்வதில் பெருமிதத்தைக் காட்டிலும் இன்னதென்று கூற இயலாததொரு பேருணர்வும் இருக்கிறது. அந்தப் பேருணர்வில் திளைத்த யவன மல்லன் அறைகூவல் என்ற பேரில் என்னென்னவோ பேசினான். சோழ நாட்டு ஆண்மையையே குறைத்துக் கூறுகிற அளவு அவனிடமிருந்து சொற்கள் வெளிப்பட்டன. அவனுடைய அறைகூவலில் கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே முன்தோன்றி மூத்த தமிழ் இனத்து ஆண்மை இகழப்படுவதை உணராமலோ அல்லது உணர்ந்தும் வேறு வழியின்றியோ கூடியிருந்த பட்டினப்பாக்கத்துச் செல்வர்களும், செல்வியர்களும் குலுங்கக் குலுங்க நகைத்துக் களிப்படைந்து கொண்டிருந்தனர்.

அப்படிக் களித்துக் கொண்டிருந்த நேரத்தில்தான் கணீரென்று ஒலி முழக்கி நகைப்புக்களை அடக்கி மேலெழுந்தது அந்தக் கம்பீரமான ஆண்மைக் குரல்!

"பிதற்றாதே! நிறுத்து!" — பாய்கின்ற புலிபோல் திரும்பி இந்த இரண்டு சொற்களுக்கும் உரியவன் யார் என்று காணக் கண்களைச் சுழற்றினான் யவன மல்லன். அவனுடைய விழிகள்மட்டுமா சுழன்றன? அல்ல. அங்கே கூடியிருந்த வேல்விழி நங்கையர்கள், நாகரிக நம்பியர் அனைவர் பார்வையும் இந்தத் துணிவான சொற்களைப் பிறப்பித்தவனைத் தேடி விரைந்தன! ஆவலோடு பாய்ந்தன.

அவன்தான்! அந்த அழகிய இளைஞன் இயல்பாகச் சிவந்த முகமே மேலும் சிவக்க நின்றான். அவனுடைய வனப்பு வாய்ந்த கூர் விழிகளில் துணிவின் ஒளி துள்ளியது. தோளோடு போர்த்தியிருந்த ஒரு பழைய பட்டுப் போர்வையை விலக்கிச் சற்றே கிழிந்த மேலங்கியையும் கழற்றி விட்டுக் கட்டமைந்த செம்பொன் மேனி சுடர் விரிக்க அவன் முன் வந்தான். அப்போது அவனுடைய தோள்களில் எத்தனை நூறு வேல் விழிகள் தைத்திருக்கும் என்று அளவிட்டு உரைப்பதற்கில்லை. அந்த ஒரு விநாடி வேல் விழி நங்கையர் அனைவரும் கண்கள் பெற்ற பயனைப் போற்றியிருப்பார்கள். பெண்களாகப் பிறந்ததற்காகவும் நிச்சயமாகப் பெருமை கொண்

டிருப்பார்கள். யவனமல்லனை நோக்கி வீர நடை பயின்ற அவனை, "இளங் குமரா, நிதானம்! அவன் முரடன்!" என்று அவன் அருகில் நின்ற இளைஞர்களில் ஒருவன் எச்சரிக்கை செய்து கூவியதிலிருந்து அவன் பெயர் இளங் குமரனென்பது அங்கிருந்தவர்களுக்குத் தெரிந்தது. அவன் முகத்துக்கும் தோளுக்கும், பரந்த மார்புக்கும் தன் நெஞ்சையும், நினைவுகளையும் தோற்கக் கொடுத்த பட்டினப்பாக்கத்துப் பெருஞ் செல்வ மகள் ஒருத்தி பல்லக்கிலிருந்தவாறே அந்தப் பெயரை இதழ்கள் பிரிய மெல்லச் சொல்லிப் பார்த்துக் கொண்டாள். அவள் இதழ் எல்லையில் அப்போது இளநகை விளையாடியது. நெற்றியிலும், கருநீல நெடுங் கண்களிலும், மாம்பழக் கன்னங்களிலும் நாணம் விளையாடியது. நெஞ்சில் பரவசம் விளையாடிக் கொண்டிருந்தது.

"வசந்தமாலை! எவ்வளவு அழகான பெயர் இது? நீ கேட்டாயல்லவா?" — என்று பல்லக்கில் எதிரேயிருந்த தோழியை வினவினாள் அந்தச் செல்வ மகள். தோழி பொருள் நிறைந்த நகை புரிந்தாள். இதற்குள் களத்தில் அந்த இளைஞனும் யவன மல்லனும் கைகலந்து போர் தொடங்கியதால் எழுந்த ஆரவாரம் அவர்கள் கவனத்தைக் கவரவே, அவர்களும் களத்தில் கவனம் செலுத்தலாயினர். 'இவ்வளவு திறமையாக மற்போர் செய்யத் தெரிந்தவனா இதுவரை ஒன்றுந் தெரியாதவனைப் போல் நின்று கொண்டிருந்தான்?' — என்று கூடியிருந்தவர்களை வியக்கச் செய்தது இளங்குமரன் என்று அழைக்கப்பட்ட அந்த இளைஞனின் வன்மை! மின்னல் பாய்வது போல் தன் பொன்னிறக் கரங்களை நீட்டிக்கொண்டு அவன் பாய்ந்து தாக்கிய போதெல்லாம் யவனமல்லனுக்கு விழி பிதுங்கியது. இளங்குமரனை உற்சாகமூட்டி அவனுடன் இருந்த இளைஞர்கள் கைகளை ஆட்டியவாறே ஆரவாரம் செய்து கூவினர்.

இந்தச் சமயத்தில் சித்திரப் பல்லக்கிலிருந்த பட்டினப் பாக்கத்து இளநங்கை தன் தோழி வசந்தமாலையை நோக்கி இனிய குரலில் யவன மல்லனைத் திணறச் செய்யும் அவன் புகழை வாய் ஓயாமல் கூறிக் கொண்டிருந்தாள்.

"நீங்கள் எதையுமே அதிகமாகப் புகழும் வழக்கமில்லையே, அம்மா! இன்றைக்கு ஏனோ இப்படி....?" என்று தொடங்கிய அவள் தோழி வசந்தமாலை சொற்களில் சொல்ல ஆரம்பித்ததைச் சொற்களால் முடிக்காமல் தன் நளினச் சிரிப்பில் முடித்து நிறுத்தினாள்.

களத்தில் மற்போர் விறுவிறுப்பான நிலையை அடைந்திருந்தது. இருவரில் வெற்றி யாருக்கு என்று முடிவு தெரியவேண்டிய சமயம் நெருங்கிக் கொண்டிருந்தது. எல்லோருடைய உள்ளமும் அந்த விநாடியை ஆவலோடு எதிர்கொள்ளத் தவித்துக் கொண்டிருந்தது. இன்னதென்று தெரியாமல் இன்ன காரணம் என்றும் விளங்காமல் எல்லாருடைய மனத்திலும் அநுதாபத்தைப் பெற்றுக் கொண்டிருந்த அந்தத் தமிழ் இளைஞனே வெல்ல வேண்டுமென்று அனைவரும் எதிர்பார்த்தனர். அவன் தோற்றால் அத்தனை பேருடைய உள்ளமும் தோற்றுவிடும் போலிருந்தது. களத்தில் அவனுடைய கவர்ச்சி வளரும் விழிகளில் சோர்வு தெரிந்த போதெல்லாம் காண்போர் விழிகளில் பதறி அஞ்சும் நிலை ஒளிர்ந்தது. பொன் வார்ந்து வடித்து அளவாய் அழகாய்த் திரண்டாற் போன்ற அவன் தோள்கள் துவண்ட போதெல்லாம் சித்திரப் பல்லக்கிலிருந்த எட்டி குமரன் வீட்டுப் பெருஞ் செல்விக்கு நெஞ்சமே துவண்டு போய் விட்டது.





இறுதியாக எல்லாரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்த அந்த விநாடியும் வந்தது. வேரற்றுச் சாயும் அடி மரம்போல் யவனமல்லன் விழி பிதுங்கி மணற் பரப்பில் சாய்ந்தான். இளங்குமரன் வென்றான். வெற்றி மகிழ்ச்சியில் கூட்டம் அடங்காத ஆரவாரம் செய்தது! அவனுடைய நண்பர்களோ களத்துக்குள் ஓடி வந்து அவனை அப்படியே மேலே தூக்கி விட்டனர். இந்திர விழாவுக்காக

அபிமானிகளுக்குப் பொங்கல் வாழ்த்துக்கள்!

○●○

# பின்னி

மற்றும் பாம்பே மில் சரக்குகள்

மில் முத்திரை விலைக்கே கிடைக்கும்

○●○

# C. S. V's. CLOTH CENTRE

(C. S விஸ்வநாத அய்யர் கிளாத் சென்டர்)

ராஜ வீதி – போன் 3009 – கோயமுத்தூர்

---

இந்தியாவின் தொழில்வளத்திற்கு உதவும்போதே உங்களுக்கும் உத்திரவாதமான லாபம் கிடைக்கின்றது...

# தி மதருஸ் இண்டஸ்டிரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் லிமிடெட்

38, ஒயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14

பிக்சட் டிபாசிட்டுகள் இப்பொழுது கார்ப்பரேஷனில் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. பலவகை கால கெடுவிற்கு வட்டி விபரம் பின் வருமாறு: 1 வருஷம்: ரூ 1-க்கு 4%; 2 வருஷங்கள்: ரூ 1-க்கு 4¼%; 3 வருஷங்கள்: ரூ 1-க்கு 4½%; 4 வருஷங்கள்: ரூ 1-க்கு 4¾%; 5 முதல் 20 வருஷங்கள் வரை ரூ 1-க்கு 5%.

சென்னை அரசாங்கத்தின் தொழில், வேலை & கூட்டுறவு இலாகாவில் வெளியிட்ட 1957 ஜூலை மாதம் 11உ. யிட்ட G. O. Ms. நெ. 2316 அறிக்கையில் இந்த டிபாசிட்டுகளின் அசல் மற்றும் வட்டிக்கு சர்க்கார் எவ்வித நிபந்தனையின்றி உத்திரவாதம் அளித்துள்ளனர்.

MIIC-1-58

வந்திருந்த மலர்க் கடையிலிருந்து முல்லை மாலை ஒன்றை வாங்கிக் கொணர்ந்து அவன் கழுத்தில் சூட்டினான் உடனிருந்த நண்பர்களில் ஒருவன். வெற்றிக் களிப்போடு அவன் அழகு இகழச் சிரித்துக் கொண்டு நின்றபோது, மலர்ந்த மார்பில் அலர்ந்து நெளிந்த முல்லை மாலையும் சேர்ந்து கொண்டு சிரிப்பது போல் தோன்றியது. அந்தச் சிரிப்பையும் வெற்றியையும் கூட்டத்திலிருந்த சில யவனர்கள் மட்டும் அவ்வளவாக விரும்பவில்லை போலத் தோன்றியது. அங்கே கூடியிருந்த கூட்டம் சிறிது கலைந்து, போவதற்கு வழி ஏற்பட்டபோது அவனும், அவனுடைய நண்பர்களும் மணற்பரப்பில் நடக்கத் தொடங்கினர். அப்போது வழியையே மறிப்பது போல் கொண்டு வந்து நிறுத்தப்பட்டது அந்தச் சித்திரப் பல்லக்கு. நுண்ணிய பூவேலைப்பாடுகள் அமைந்த பல்லக்கின் ஓவியத் திரை விலகியது. வளைகள் குலுங்கும் செந்நிற முன்கை ஒன்று நீண்டது. அந்தக் கையின் மெல்லிய நீண்ட காந்தள் விரல்களில் பேரொளி நிறைந்ததும் விலைவரம்பற்றதும் நவமணிகளால் தொடுக்கப்பட்டதுமான மணிமாலை ஒன்று இலங்கியது. அந்த மாலை ஏந்திய செந்தாமரைப் பூங்கரம் இளங்குமரனுடைய முகத்துக்கு முன் நீண்டபோது அவன் ஒன்றும் புரியாது திகைத்தான். நிமிர்ந்து பார்த்தபோது பல்லக்கினுள்ளிருந்து அந்த இளநங்கை முகத்திலும், கண்களிலும், இதழ்களிலும், எங்கும் சிரிப்பின் மலர்ச்சி தோன்ற எட்டிப்பார்த்தாள். பல்லக்கினுள்ளிருந்து பரவிய நறுமணங்களினாலும், திடீரென்று ஏற்பட்ட அந்தச் சந்திப்பினாலும் சற்றே தயங்கி நின்றான் இளங்குமரன். சொல்லைக் குழைத்து உணர்வு தோய்த்த மெல்லினிமைக் குரலில் அவள் கூறலானாள்:

"இந்தப் பரிசை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்."

"எதற்காகவோ ...?"



"பெருவீரமும் வெற்றியும் உடையவர்களைப் பரிசளித்துப் போற்றும் பெருமையை அடையும் உரிமை இந்தப் பூம்புகார் நகரத்தில் ஒவ்வொருவருக்கும் உண்டு! எல்லோருக்கும் மகிழ்ச்சி தருகிற இந்திர விழாக் காலத்தில் இப்படிப் பரிசளிக்கும் வாய்ப்பு ஒன்று எனக்குக் கிடைத்ததற்காக நான் பெருமைப்படுகிறேன்."

சற்றும் தயங்காமல் துணிவாக இவ்வாறு மறுமொழி கூறிய அந்த எழிலரசியின் வதனத்தைச் சில விநாடிகள் இமையாது நோக்கினான் இளங்குமரன். அவள் இன்னும் நன்றாக, இன்னும் அழகாக, இன்னும் நிறைவாக நகைத்துக் கொண்டே மணிமாலையை அவனுக்கு மிக அருகில் நீட்டினாள். அந்தத் துணிவும், செல்வச் செழிப்பும், அவன் மனத்துக்குப் புதுமையான அநுபவத்தை அளித்தன. பல்லக்கிலிருந்த அடையாளங்கள் எட்டிப் பட்டம் பெற்ற பெருங் குடியைச் சேர்ந்தவள் அவள் என்பதை உய்த்துணர இடமளித்தன.

பதில் ஒன்றும் கூறாமல் மெல்ல நகைத்தான் இளங்குமரன். அந்த நகைப்பில் எதையோ சாதாரணமாக மதித்து ஒதுக்குகிற போன்ற சாயல்தான் அதிகமிருந்தது. அவன் நண்பர்கள் அமைதியாக நின்று கவனித்துக் கொண்டிருந்தார்கள். இளங்குமரன் அதே குறும்பு நகையோடு கேட்டான்: "அம்மணீ! எனக்கு ஒரு சிறு சந்தேகம்!"

"என்ன சந்தேகமோ?"

"இதை எனக்குக் கொடுத்துவிடுவதனால் நீங்கள் பெருமைப்பட இடமிருக்கிறது. ஆனால் இதை உங்களிடமிருந்து வாங்கிக் கொள்வதனால் நான் பெருமைப்பட்டுக் கொள்ளச் சிறிதாவது இடமிருக்கிறதா என்பதுதான் என் சந்தேகம்" என்று நிதானமாக ஒவ்வொரு வார்த்தையாக நிறுத்தி இளங்குமரன் கேட்டபோது அவள் மருண்டாள். அவளுடைய மலர் விழிகள் வியந்தது போலகன்றன.

"வாங்கிக் கொள்ளுங்கள், ஐயா! எங்கள் தலைவி நீங்கள் மற்போர் செய்த போது காட்டிய ஆர்வத்தைக் கண்டு நானே வியப்படைந்து விட்டேன்." எழிலரசிக்கு எதிரே தோழி போன்ற தோற்றத்தோடு வீற்றிருந்த மற்றொரு பெண் இளங்குமரனை நோக்கி இவ்வாறு பரிந்து கூறினாள். இதைக் கேட்டு இன்னும் பெரிதாக நகைத்தான் இளங் குமரன். அவன் முகம் அந்த நகைப்பொலியால் சுருங்கிச் சிறுத்ததுபோல் சாயல் மாறியது.

உடனே, "வசந்தமாலை! பத்து நூறாயிரம் பொன் பெறுமானமுள்ள மணிமாலையைப் பரிசு கொடுப்பதற்காக நாம் பெருமைப்படுவது பெரிதில்லையாம். இவர் பெருமைப்படுவதற்கு இடமிருக்கிறதா என்று சிந்திக்கிறாராம்" என்று அவள் தோழியிடம் கூறுவது போல் அவனுக்குக் கூறிய குறிப்புரையில் கடுமையும் இகழ்ச்சியும் கலந்திருப்பதை அவன் உணர்ந்து கொண்டான். அவன் வதனத்தில் நகைக்குறிப்பு வறண்டது. ஆண்மையின் கம்பீரம் நிலவியது.

"மன்னியுங்கள், அம்மணீ! உங்கள் மணிமாலையின் பெறுமானம் பத்து நூறாயிரம் பொன்னுயிருக்கலாம். அதற்கு மேலும் இருக்கலாம்! ஆனால் என்னுடைய வீரத்தின் பெறுமானமாக அதை நீங்கள் கொள்ளவேண்டிய அவசியமில்லை. 'கொள் எனக் கொடுத்தல்' உயர்ந்தது. 'கொள்ளமாட்டேன்' என்று மறுப்பது அதைவிட உயர்ந்தது என்று பழைய நூல்களில் படித்திருப்பீர்கள். என்னைப்போல் ஆண்மையும், தன்மானமும் உள்ளவர்கள் பிறருடைய கைகளிலிருந்து அவசியமின்றி எதையும் பெற விரும்புவதில்லை. இந்தப் பெரிய நகரத்திலே * இலஞ்சிமன்றத்திலும், † உலக அறவியின் வாயிற்புறத்திலும் கூனும், குருடுமாக, நொண்டியும், நோயுடம்பமாக ஆற்றலும் வசதியுமில்லாத ஏழையர் எத்தனையோபேர் பிச்சைப் பாத்திரங்களுடன் ஏங்கிக் கிடக்கிறார்கள். அப்படிக் கொடுப்பதானாலும் அவர்களுக்கு வாரிக் கொடுத்துப் பெருமையடையுங்கள். வணக்கம். மீண்டும் உங்களுக்கு என் நன்றி. போய் வருகிறேன்" என்று விரைவாக விலகி நடந்தான் இளங்குமரன். அவனைப் பின்பற்றி நடந்த நண்பர்களின் ஏளன நகையொலி அவள் செவியிற் பாய்ந்தது. இளங்குமரனின் கழுத்தில் வெற்றிமாலையாக அசைந்த முல்லை மாலையின் நறுமணம் அவன் விரைவாகத் திரும்பி நடந்த திசையிலிருந்து பல்லக்கினுள் காற்றோடு கலந்து வந்து பரந்தது. ஆனால் அந்த மணத்தினால் அவளுடைய கோபத்தையும் ஏமாற்றத்தையும் ஆற்ற முடியவில்லை. பல்லக்குத் தூக்கி நிற்பவர்க்கும், தோழிக்கும் முன்னிலையில் தன்னை எடுத்தெறிந்து பேசிவிட்டுப் போன அவன் செல்லும் திசை நோக்கி அவள் கண்கள் சீற்றத்தைப் புலப்படுத்தின. கைவிரல்களை மணிமாலையோடு சேர்த்துச் சொடுக்கினாள். பவழமெல் உதடுகள் ஒன்றையொன்று மெல்லக் கவ்வின.

வேகமாக நடந்த இளங்குமரன் சற்றே நின்று கேட்க முடிந்திருந்தால் அந்தப் பல்லக்கு அங்கிருந்து நகர்ந்தபோது, "வசந்தமாலை! இவனை அழகன் என்று மட்டும் நினைத்தேன். முரடனாகவும் திமிர் பிடித்தவனாகவும் அல்லவா இருக்கிறான்?" என்று சீறி ஒலித்த செல்வமகளின் கோபக் குரலைத் தானும் செவிமடுத்திருப்பான். ஆனால் அந்தச் சீற்றக் குரலில் சீற்றமே முழுமையாக இருந்ததா? இல்லை! கவனித்தால் சீற்றமும் சீற்றமற்ற இன்னும் ஏதோ ஒருணர்வும் இருந்தது புலப்பட்டது.

* † வரலாற்றுக் காலத்துப் பூம்புகாரில் இருந்த இடங்கள்.

## 2. சக்கரவாளக் கோட்டம்

இராப்போது நடு யாமத்தைத் தொட்டுக் கொண்டிருந்தது. இந்திர விழாவின் ஆரவாரங்கள் பூம்புகாரின் புறநகர்ப்பகுதிகளில் அதிகமாக இல்லை. புறநகரில் சக்கரவாளக் கோட்டத்தை அடுத்திருந்த சம்பாபதிவனம் இருண்டு கிடந்தது. நிலாவொளியின் ஆற்றல் அந்த வனத்தில் தன் ஆதிக்கத்தைப் படரவிட முடியாது. அடர்ந்து நெருங்கிய மரங்களும், செடிகொடிகளும் பின்னிப் பிணைந்து நெடுந் தொலைவுக்குப் பரந்து கிடந்தது சம்பாபதி வனம். அந்த வனத்தின் மற்றோர்புறம் காவிரிப்பூம் பட்டினத்து மயானமும், சக்கரவாளக்கோட்டமென்னும் பகுதியும் இருந்தன. சக்கரவாளக் கோட்டத்தின் அங்கங்களாகிய முனிவர்களின் தவச்சாலையும், கந்திற்பாவை கோட்டமும் உலகவறவியும் இன்னொரு பக்கத்தே இரவின் அமைதியிலே மூழ்கிக் கிடந்தன. மரக்கிளைகளின் அடர்த்திக்கு இடையே சிறு சிறு இடைவெளிகளின் வழியே கறுப்புத் துணியிற் கிழிசல்கள் போல் மிகக் குறைந்த நிலவொளி சிதறிப் பரவிக் கொண்டிருந்

நா. பார்த்தசாரதி அவர்களின்

சரித்திர நூல்கள்

| | |
|---|---|
| பாண்டிமாதேவி | ரூ 12- |
| தகடூர் யாத்திரை | 4- |
| இராஜகோபுரம் | 4- |
| நானூறில் நல்ல காட்சிகள் | 0-95 |



விபரமான பட்டியலுக்கு எழுதுங்கள்

**மங்கள நூலகம்**

சென்னை-6



மோட்டார்களின் பாதுகாப்பிற்குச் சிறந்தவை










SWITCH GEARS

ஸ்டார்ட்டர்கள்
5 to 25 Amps

சுட்சுகள்
15 to 60 Amps

**கணபதி இஞ்சினீயரிங் மான்யுபாக்சரர்ஸ்**
பிரைவேட் லிமிடெட்
கணபதி, கோயமுத்தூர்-6.

போன்: 3024 & 3830

தந்தி: "AGRITOOLS"




# இது புதியது-நியாயமான விலை!

# மெரிட்

## தையல் மெஷின்

பல வருஷங்களுக்கு உங்களுக்கு தையலில் மகிழ்ச்சியளிக்கக் கூடியது—தவிர, பிரசித்தமான ஸிங்கர் கம்பெனியாரின் பராமரிப்பின் வசதியும் உண்டு.

ஸிங்கர் ஸுயிங் மெஷின் கம்பெனி,

மற்றும் அவர்களால் நியமிக்கப்பட்ட டீலர்களால் விற்கப்படுகிறது.

தது. நரிகளின் விகாரமான ஊளை ஒலிகள், கோட்டான்களும், ஆந்தையும் குரல் கொடுக்கும் பயங்கரம் எல்லாமாகச் சேர்ந்து அந்த நேரத்தில் அந்த வனப் பகுதியை ஆட்கள் பழக அஞ்சுமிடமாக்கிக் கொண்டிருந்தன. வனத்தின் நடுவே சம்பாபதி கோயில் தீபத்தின் மங்கிய ஒளியினால் சுற்றுப்புறம் எதையும் நன்றாகப் பார்த்து விட முடியாது. நரி ஊளைக்கும், ஆந்தை அலறலுக்கும் இசைந்து நடுநடுவே சக்கரவாளக் கோட்டத்து வன்னி மரங்களின் கீழே காபாலிகர்களின் நள்ளிரவு வழிபாட்டு வெறிக் குரல்களும் விகாரமாக ஒலித்தன.



இந்தச் சூழ்நிலையில் சம்பாபதி வனத்தின் ஒரு பகுதியில் இளங்குமரன் அவசரமாக நடந்து சென்று கொண்டிருந்தான். தோளிலும், உடலின் பிற அங்கங்களிலும், மாலையில் கடற்கரையில் அந்த யவன மல்லனோடு போரிட்டு வென்ற களைப்பு இருந்ததாயினும் மிக முக்கியமான காரியத்தை எதிர்நோக்கிச் செல்கிறவன்போல் அந்த அகால நேரத்தில் அங்கு அவன் சென்றுகொண்டிருந்தான். கடற்கரையிலும் நாளங்காடிப் பூத சதுக்கத்திலும், இந்திரவிழாக் கோலாகலங்களைப் பார்த்து விட்டுத் திரும்பியபோது மருவூர்ப் பாக்கத்தில் நண்பர்களை ஒவ்வொருவராக அனுப்பி விட்டு வேண்டுமென்றே தனிமையை உண்டாக்கிக் கொண்டு புறப்பட்டிருந்தான் அவன். இந்தச் சம்பாபதி வனமும், சக்கரவாளக் கோட்டமும், பயங்கரமான இரவுச் சூழலும் அவனுக்குப் புதியவையானால்தானே அவன் பயப்பட வேண்டும்? உயிர்களின் அழிவுக்கு நிலமாக இருந்த இதே சக்கரவாளத்துக்கு அருகில் இருந்த வனத்தில்தான் அவன் வளர்ந்து செழித்துக் காளைப் பருவம் எய்தினான்! இதே சம்பாபதி கோவில் வாயிலுள்ள நாவல்மரங்களின்கீழ் விடலை வாலிபர்களோடும், முரட்டு இளைஞர்களோடும் அலைந்து திரிந்துதான் வலிமையை வளர்த்துக்கொண்டான். இங்கே ஒவ்வோரிடமும் ஒவ்வோர் புதரும், மேடு பள்ளமும் அவனுக்குக் கரதலப் பாடம் ஆயிற்றே! எத்தனை வம்புப் போர்கள், எத்தனை இளம் பிள்ளைச் சண்டைகள், எத்தனை அடிபிடிகள், அவனுடைய சிறு பருவத்தில் இந்த நாவல் மரங்களின் அடியில் நடைபெற்றிருக்கும்? அவனுடைய அஞ்சாமைக்கும், துணிவுக்கும் இந்தச் சூழ்நிலையில் வளர்ந்ததே ஒரு காரணமென்று நண்பர்கள் அடிக்கடி கூறுவதுண்டு.

மனத்தில் அந்தப் பழைய நினைவுகள் எல்லாம் தோன்றிப் படர நடந்து கொண்டிருந்தான் இளங்குமரன்.

'இன்றைக்கு இந்த நள்ளிரவில் நான் தெரிந்து கொள்ளப்போகிற உண்மை என் வாழ்வில் எவ்வளவு பெரிய மலர்ச்சியை ஏற்படுத்தப்போகிறது! என்னைப் பெற்ற அன்னையை முதல் முதலாக நினைவு தெரிந்த பின் இன்று காணப் போகிறேன். அவளுடைய அருள் நிகழும் தாய்மைத் திருக் கோலத்தை இந்த இருண்ட வனத்துக்குள் சம்பாபதி கோவிலின் மங்கிய விளக்கொளியில் காணப் போகிறேனே என்பதுதான் எனக்கு வருத்தமாயிருக்கிறது! தாயே! என்னை வளர்த்து ஆளாக்கி வாழவிட்டிருக்கும் அந்தப் புனிதமான முனிவர் இன்று உன்னை எனக்குக் காண்பிப்பதாக வாக்களித்திருக்கிறார். 'சித்திரை மாதம் சித்திரை முழுமதி நாளில் இந்திர விழாவன்று உன் அன்னையைக் காண்பிக்கிறேன்' என்று மூன்றாண்டுகளாக ஏமாற்றி என் ஆவலை வளர்த்துவிட்டார் முனிவர். இன்று என் உள்ளம் உன்னை எதிர்பார்த்து நெகிழ்ந்திருக்கிறது. அன்னையே! உன்னுடைய பாதங்களைத் தொட்டு வணங்கும் பேறு இந்தக் காளைப் பருவத்திலிருந்தாவது எனக்குக் கிடைக்க விருக்கிறதே; இன்று என் வாழ்வில் ஒரு பொன்னாள்' என்று பெருமை பொங்க நினைத்தவனாக விரைந்து கொண்டிருந்தான் இளங்குமரன். தாயும் தந்தையும் எவரென்று தெரியாமல் சக்கரவாளக் கோட்டத்துத் தவச்சாலையிலுள்ள முனிவரொருவரால் வளர்த்து ஆளாக்கப்பட்டவன் அவன். நினைவு வந்தபின் அவன் தன் பெற்றோர் பற்றி நினைவு வரும்போது எல்லாம்

ஏதேதோ சொல்லி ஆவலை வளர்த்திருந்தார் அந்த முனிவர். சித்திரா பௌர்ணமியன்று காட்டுவதாகச் சொல்லி மூன்று முறை இந்திர விழாக்களில் அவனை ஏமாற்றி விட்டிருந்தார் அவர். எத்தனைக்கெத்தனை தைரியசாலியாகவும், அழகனாகவும் வளர்ந்திருந்தானோ, அத்தனைக்கத்தனை தன் பிறப்பைப் பற்றி அறிந்து கொள்ளத் தவிக்கும் தணியாத் தாகம் அவனுள் வளர்ந்து கொண்டிருந்தது. அதில் மிகப் பெரிய மர்மங்களும், அதியற்புதச் செய்திகளும், இருக்க வேண்டும் போல் ஓர் அனுமானம் அவனுள் முறுகி வளரும்படி செய்திருந்தார் அந்த முனிவர்.

அன்று இரவு நடுயாமத்துக்கு மேல் சம்பாபதி கோவிலின் பின்புறமுள்ள நாவல் மரத்தின் கீழ் அவனைப்பெற்ற தாயையும் அவனையும் எவ்வாறேனும் சந்திக்க வைத்து விடுவதாக உறுதி கூறியிருந்தார்.

'ஆகா! அதோ நாவல் மரத்தடி வந்து விட்டது. மரத்தடியில் யாரோ போர்த்துக் கொண்டு அடக்கமாக அமர்ந்திருக்கிறாற்போல் தெரிகிறது. பக்கத்தில் சிறிது விலகினாற்போல் நிற்பது யார்? வேறு யாராயிருக்கும்? முனிவர் தான்! என் அருமை அன்னையை அழைத்து வந்து அமர வைத்துக் கொண்டு என்னை எதிர்பார்த்து ஆர்வத்தோடு நிற்கின்றார்போலும்! நான் தான் வருகை நேரமாக்கி விட்டேன். இன்னும் சிறிது போது முன்னாலேயே வந்திருக்கலாமே!'—

இவ்வாறு உணர்வு மயமான எண்ணங்களோடு மரத்தடியை நெருங்கிய இளங் குமரன், "சுவாமீ! என் அன்னையை அழைத்து வந்து விட்டீர்களா? இன்று நான் பெற்ற பேறே பேறு"—என்று அன்பு பொங்கக் கூறியவாறே முனிவரின் மறுமொழியையும் எதிர்பார்க்காமல் அமர்ந்திருந்த அன்னையுருவை வணங்கும் நோக்குடன் நெடுஞ்சாண் கிடையாக மண்ணில் விழ்ந்தான். 'அம்மா'—என்று குழைந்தது அவன் குரல்.

அம்மாவின் பதில் இல்லை! ஆசிமொழி கூறும் அன்னையின் பாசம் நிறைந்த குரலும் ஒலிக்கவில்லை! மெல்லச் சந்தேகம் எழுந்தது இளங்குமரனின் மனத்தில். 'அன்னையைக் காணும் ஆர்வத்தில் இருளில் யாரென்று தெரியாமலே விழ்ந்து வணங்கிக் கொண்டிருக்கிறேனோ?'—என மருண்டு விரைவாக எழுந்திருக்க நிமிர்ந்தான்.




''என்னடா இது 'கொர்' 'கொர்'ன்னு ரேடியோவிலே சத்தம் வருது?''
''கிரிக்கட் மாட்ச 'போர்' தாங்காமல் காமெண்டேட்டர் தூங்கறார்போலே இருக்கு!''




இரண்டு வலிமை வாய்ந்த கைகள் அவனுடைய தோள் பட்டைகளை அமுக்கி மேலே எழ முடியாமல் செய்தன. வேறு இரு கைகள் கால் பக்கம் உதற முடியாமல் தன்னைக் கட்ட முயல்வதையும் அவன் உணர்ந்து கொண்டான்.

அன்னையைக் காணும் ஆர்வத்தில் ஏமாந்து தப்புக் கணக்குப் போட்டு விட்டோம் என்று தீர்மானமாக உணர்ந்து எச்சரிக்கை பெற்ற அவன் துள்ளி எழுந்து திமிர முயன்றான். நாவல் மரத்தில் ஆந்தை அலறியது. மரத்தைச் சரணடைந்திருந்த ஏதோ சில பறவைகள் இருளில் ஓசை எழுமாறு சிறகடித்துப் பறந்தன. (தொடரும்)

# கால்கேட்டின் மூலம்
# நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10-ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன! இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினால் உங்கள் பற்களை சுத்தமாக துலக்குங்கள். இதன் வீரியமும், நுரையும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் சேர்த்திருக்கும் நூதன நறுமணத்தினால், குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

DCG.1307-TAM.

# தகுதி வாய்ந்த இளைஞர்க்குத் தக்கதொரு வாய்ப்பு

ஜம்ஷெட்பூரிலுள்ள டாடா ஸ்டீல் கம்பெனியார் நடத்தும் 34 பள்ளிக்கூடங்களில் சுமார் 48,000 குழந்தைகள் படிக்கிறார்கள். அவற்றுள் 17 பள்ளிக்கூடங்கள் இரண்டு ஷிப்ட்களில் வேலை செய்கின்றன. அவற்றைத் தவிர 122 தனியோர் நடத்தும் உதவிபெறும் பள்ளிக்கூடங்கள் உள்ளன. மெட்ரிகுலேஷன் வகுப்பு வரை பலதரப்பட்ட மொழி பேசும் தொழிலாளர் வசதிக்காக நான்கு மொழிகளில் கல்வி கற்பிக்கப்படுகிறது.

தொழிலாளர் குழந்தைகளுக்குக் கல்வி இலவசமாகவோ அல்லது பெற்றோரின் வருமானத்துக்கு ஏற்ற வகையில் சிறு கட்டணம் வசூலித்தோ கற்பிக்கப்படுகிறது. எஃகுத் தொழிற்சாலையில் பணியாற்றும் மோங்கபாரைச் சேர்ந்த ஸ்ரீமான் சத்வாரியையும் அவர் மகன் காமேஸ்வர் பிரசாத்தையும் இங்கு நாம் காண்கிறோம். சர்வகலாசாலை உபகாரச் சம்பளம் பெறும் அளவிற்கும், டாடா ஜூபிலி ஸ்காலர்ஷிப்பான ரூபாய் எழுபத்தைந்து பெறும் தகுதியுடனும் காமேஸ்வர் 1959ல் மெட்ரிகுலேஷன் வகுப்பில் சிறப்பாகப் பாஸ் செய்தான். இதனால் அவன் காலேஜில் சேர்ந்து, தந்தைக்கு அதிகச் சிரமமில்லாமல் படிக்க முடியும்.

ஜூபிலி ஸ்காலர்ஷிப்பைத் தவிர டாடா ஸ்டீல் கம்பெனியார் தகுதி வாய்ந்த குழந்தைகளுக்கு — மேல் படிப்பு படிக்க வசதி ஏற்படும் வகையில் உதவுகின்றனர். இதன்மூலம் ஜம்ஷெட்பூரில் திறமைமிக்க இளைஞர்கள் ஊக்குவிக்கப்படுகிறார்கள். உற்சாகமடைகிறார்கள். ஜம்ஷெட்பூரில் தொழில், வயிற்றுப்பிழைப்புக்காக மட்டும் இல்லை, வாழ்க்கை வழிகாட்டியாகவும் உள்ளது.



# நம்மாழ்வார் பாடிய பக்தி நெறி

ராஜாஜி

## 53

காணுமாறு அருளாய் என்று என்றே கலங்கி,
கண்ண நீர் அலமர, வினையேன்
பேணுமாறு எல்லாம் பேணி, நின் பெயரே
பிதற்றுமாறு அருள் எனக்கு ; அந்தோ !
காணுமாறு அருளாய்—காகுத்தா ! கண்ணா !
தொண்டனேன் கற்பகக் கனியே !
பேணுவார் அமுதே ! பெரிய தண் புனல் சூழ்
பெரு நிலம் எடுத்த பேராளா !

கலங்கிப் பேணிப் பிதற்றுமாறு என்றும், அலமரப் பேணிப் பிதற்றுமாறு என்றும், தனித்தனியே கூட்டிப் பொருள் கொள்ளவேண்டும்.

வினையேன் — என் கர்மங்களின் பயனாக உன்னைக் காணாமல் வருந்துகிறவனாகிய நான். பேணுதல்—பகவானை விரும்புதல். பேணி நின் பெயரே பிதற்றுமாறு அருள் எனக்கு-பகவானை விரும்புவதும் அவன் பெயரைச் சொல்லி அலைவதும் அவன் அருளாலேதான். - பெயரே—ஏகாரம் பிற பொருள்களைப் பற்றி நிற்காமல் இருப்பதைக் குறிக்கும் பிரிநிலை ஏகாரம்.

'அருள் எனக்கு' என்பதை 'எனக்கு அருள்வாய்' என்று வியங்கோள் வினையாக வைத்துக் கொள்ளாமல், "எனக்கு இத்துணை அளவுதானா உன் அருள், ஐயோ!" என்பது வியாக்யாதாவின் உரை. அது போதாது. உன்னைக் காணுமாறும் அருள்வாய் என்பது இதன் பொருள்.

காகுத்தனும் (ஸ்ரீ ராமனும்) கண்ணனும் அந்தக் காலங்களில் அருளினார்களே, அப்படி எனக்கு அருள்வாய் என்று அவ்விரு அவதாரங்களை எடுத்து விளிக்கிறார்.

பேணுவார் அமுதே—இது பகவானுடைய முக்கிய குணம். விரும்புபவர்களுக்கு உடனே கொடுப்பவன். உன்னை ஆசைப்படவும் ஆபத்தை அறிவிக்கவும் செய்யமாட்டாத உலகத்தை நீ அன்று தூக்கிக் காத்தாயே என்று முடிக்கிறார்.

• • •

எடுத்த பேராளன் நந்தகோபன் - தன்
இன் உயிர்ச் சிறுவனே ! அசோதைக்கு
அடுத்த பேரின்பக் குல இளம் களிறே!
அடியனேன் பெரிய அம்மானே !
கடுத்த போர் அவுணன் உடல் இரு பிளவாக்
கை உகிர் ஆண்ட எம் கடலே !
அடுத்தது ஓர் உருவாய் இன்று நீ வாராய்—
எங்ஙனம் தேறுவர் உமரே ?

குல இளம் களிறு—இளவயதான ஆனையானை. குல—நல்ல வகையான பிறப்பு, கலப்பு இல்லாத பிறப்பு. அடுத்த—பொருத்தமான; கடுத்த போர் அவுணன்—கோபம் கொண்டு எதிர்த்த இரணியன்; கை உகிர் ஆண்ட—நரசிம்ம அவதாரம்; அடுத்தது ஓர் உருவாய்—பொருந்த ஓர் உருவத்தோடு வராமலிருக்கிறாயே, எப்படி உன் அடியார் தெளிவு அடைவார்கள்? உமர்—உன் அடியார்கள்.

எடுத்த பேராளன் நந்தகோபன்—நிதி எடுத்துக் கொண்டாற் போல்

> அறிவற்றவனே! பொருளீட்ட வேண்டும் என்ற வேட்கையை விடுவாயாக. நிராசை நிறைந்த நெஞ்சினனாக நற்புத்தியைக் கைக்கொள்வாயாக. உனக்குரிய தொழிலைப் புரிந்து அதனால் எவ்வளவு கிடைக்கிறதோ அதைக்கொண்டே சித்தத்தைக் களிக்கச் செய்வாயாக...
>
> உடைமை, உறவினர், இளமை இவற்றால் இறுமாப்படையாதே. இவற்றை நொடியில் கவர்ந்து சென்றுவிடும் காலம். மாயையால் தோன்றியுள்ள இவ்வுலகை நீத்துப் பரமாத்ம நிலையை அறிந்து அதில் புகுவாயாக.
>
> —ஸ்ரீ ஆதிசங்கரர், மோஹ முத்கரம்.

உன்னை எடுத்துக் கொண்ட புண்ணிய வான் நந்தகோபன்.

எங்கு வந்து உறுகோ, என்னை
ஆள்வானே?
ஏழ் உலகங்களும் நீயே;
அங்கு அவர்க்கு அமைத்த
தெய்வமும் நீயே;
அவற்று – அவை கருமமும் நீயே;
பொங்கிய புறம்பால் பொருள்
உளவேலும்,
அவையுமோ நீ; இன்னே ஆனால்,
மங்கிய அறிவாம் நேர்ப்பமும் நீயே;
வான் புலன் இறந்ததும் நீயே;

"என்னை ஆள்வானே! எல்லாம் நீயே ஆயின் உன்னை எங்கே சென்று கிட்டுவேன்?" என்று அத்துவைத உணர்ச்சியில் ஆழ்ந்து கேட்கிறார்.

எங்கு வந்து உறுகோ—எங்கே சென்று உன்னைக் கண்ணாரக் காண்பேன்? எல்லா உலகங்களும் நீயே ஆவாயன்றோ. அங்கு அவர்க்கு அமைத்த தெய்வமும் நீயே—அந்த உலகங்களில் அவரவர்கள் அறிவுக்கும் ருசிக்கும் தகுந்தவாறு வைத்துக் கொண்டிருக்கும் தெய்வங்கள் எல்லாம் நீயே. அவற்று அவை கருமமும் நீயே — அந்த அந்தத் தெய்வங்கள் செய்யும் காரியங்களும் நீயே.

'எல்லாம் நீயே' என்றால் எல்லாம் உன்னுடைய ஆதீனம் என்பது வைஷ்ணவ வியாக்கியானம். எல்லாம் நீயே என்பது அத்வைத பர வியாக்கியானமாகும்.

பொங்கிய புறம்பால் பொருள் உளவேலும் அவையுமோ நீ-மூல தத்துவங்களினின்று விரிந்து நிற்கும் எல்லாப் பொருளும் நீயே. அதற்கு மேலும் வேறு நாம் காணாத பொருள்கள் இருந்தாலும் அவை எல்லாமும் நீயே. அவை அனைத்தும் உன் ஆதீனம் அல்லது அவை நீயே ஆவாய்.

தொகுதியும் நீயே. அல்லது உன் ஆதீனமே.

வடிவு கொண்டு புலனுக்கு விளங்கும் பொருள்களும் அதைத் தாண்டிப் புலன்களுக்கு விளங்காத சகலமும் நீயே என்பது அல்லவோ உண்மை. அப்படியிருக்க உன்னைக் கண்டு ஆனந்தம் பெற ஆசைப்படும் நான் எப்படி எங்கே உன்னை அடைவேன் என்கிறார். தத்துவார்த்த ஞானத்துக்கும் பக்தன் உள்ளத்தில் பொங்கும் ஆசைக்கும் இருக்கும் பரஸ்பர விரோதத்தை உணர்ந்து வருந்துகிறார்.

• • • •

இவ்வாறு பல பாசுரங்கள் பாடி முடிவில் சொல்லுகிறார்:

அமர்ந்த நாதனை, அவர்அவர் ஆகி,
அவர்க்கு அருள்அருளும் அம்மானை,
அமர்ந்த தண்பழனத் திருச்செங்
குன்றூரில்
திருச் சிற்றாற்றங் கரையானை,
அமர்ந்த சீர் மூவாயிரவர் வேதி
யர்கள்
தம்பதி அவனிதேவர் வாழ்வு
அமர்ந்த மாயோனை, முக்கண்
அம்மானை,
நான்முகனை - அமர்ந்தேனே.

இதோ சாஸ்திரத்தில் சொன்னதையும் தாமும் பலமுறை சொன்னதையும் மறுபடியும் சொல்லுகிறார்.

அவர் அவர்கள் ஆராதிக்கும் அந்த அந்தத் தெய்வங்களின் சொரூபத்தில் அவரவர்களுக்கு அருளும் அம்மானை, திருச்சிற்றாற்றங் கரையில் உள்ள அர்ச்சாவதார மூர்த்தியில் காண்கிறேன். அந்த மூர்த்தியில் ஹரியையும் காண்கிறேன், பரம சிவனையும் சதுர்முக பிரும்மாவையும் கண்டு மனக் கலக்கம் தீர்ந்து சாந்தி அடைகிறேன் என்கிறார்.

மங்கிய அறிவாம் நேர்ப்பமும் நீயே — அனைத்துக்கும் காரணமாகிய அவ்யக்த மூலமும் நீயே.

வான்புலன் இறந்ததும் நீயே — இந்திரியங்களுக்கு எட்டாததும் மேலானதுமான ஆன்மாக்களின்

> கடலிலிருந்து விடுவிக்கத் தந்தைக்குத் தனயன் முதலானோர் உண்டு. பிறவிக் கட்டிலிருந்து விடுவிக்கக் கூடியவன் தானேயன்றி வேறொருவனுமல்லன்.
>
> - ஸ்ரீ ஆதிசங்கரர்-விவேக சூடாமணி

அமர்ந்த நாதனை அவர் அவராகி அவர்க்கு அருள் அருளும் அம்மானை முக்கண் அம்மானை நான்முகனை ஆற்றங் கரையானை அமர்ந்த மாயோனை அமர்ந்தேன் என்று கோத்துப் படிக்கவும்.

# ஓர் அறிவிப்பு

இதுவரை 45-A பிளாக், கன்னாட் சர்க்கஸ் என்ற இடத்திலிருந்து வந்த சென்னை இராஜ்யக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கத்தின் "கோ-ஆப்டெக்ஸ்" விற்பனை நிலையம் அடியிற் கண்ட முகவரிக்கு மாற்றப்பட்டிருக்கிறது.

## "கோ-ஆப்டெக்ஸ்" விற்பனை நிலையம்

22-B. கான்மார்க்கெட்
புது டில்லி - 11

*

சென்னை இராஜ்ய கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம், லிட்.,
34/1-A, பாந்தியன் சாலை - எழும்பூர் - சென்னை - 8

SISTAS



லிப்கோ வெளியீடு !

## தசா புக்திகளும்

ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்
[ஸ்தோத்திர மாலையுடன்]

ஒவ்வொன்றும் ரூ. 2

(9 தசைகளுக்கான 9 புத்தகங்கள்)



## ஸகல காரிய ஸித்தியும்

ஸ்ரீமத் ராமாயண பாராயணமும்
[ஸ்தோத்திர மாலையுடன்]

ரூ. 3

(ஸ்தோத்திரமாலை மட்டும்: ரூ. 1.30)

உபந்யாஸக சக்ரவர்த்தி
**சேங்காலிபுரம் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்கள்**
அன்புடனும் மகிழ்ச்சியுடனும் வழங்கிய ஆசியுரை :

"... வெகு அழகான முறையில் சிறு குழந்தைகள், ஸ்திரீகள், பெரியவர்கள் யாவரும் தினம் பாராயணம் செய்யும்படி வெளியிட்டுள்ளனர் ... இவை ஒவ்வொரு குடும்பத்திற்கும் ரக்ஷையாக இருக்கும்..."

தி லிட்டில் பிளவர் கம்பெனி (லிப்கோ), தி. நகர், சென்னை-17 : M. தாமோதரம் கம்பெனி, அப்பர் பில்டிங், சென்னை-1 : வாணி கலா நிலையம், 8, தெற்கு மாட வீதி, மயிலாப்பூர், சென்னை-4 : ஹிக்கின்பாதம்ஸ், சென்னை-2 : ஜெயின்லே ஸ்டோர்ஸ் : S. கிருஷ்ணஸ்வாமி கம்பெனி, தெப்பக்குளம், திருச்சி-2 : C.R. நடராஜன், கோயம்புத்தூர்-1 : கலைப் பதிப்பகம், ராஜ வீதி, கோயம்புத்தூர்-1 : சந்திரசேகர செட்டியார், கோட்டை, சேலம்-1 : M. நடனசுந்தரம், புதுமண்டபம், மதுரை : பிரபாத் ஸ்டோர்ஸ், காலேஜ் ரோடு, நாகர்கோவில்.

NALIN

கல்யாணப் பட்டு சேலைகள்

முதலியன வாங்க மிகவும் நம்பிக்கையான சிறந்த இடம்

# P. B. லக்ஷ்மணஸா & பிரதர்ஸ்

பட்டு ஜவுளி உற்பத்தியாளர்கள், வியாபாரிகள்

109, ஐயா முதலித் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2: போன்: 86966

தயாரிப்பு பிராஞ்சு: 15, மேட்டுத் தெரு, காஞ்சிபுரம்

குறிப்பு: தங்கள் சௌகரியத்தை முன்னிட்டு எமது ஷோ ரூமை ஏர் – கண்டிஷன் செய்து வருகின்றோம்

---

அன்பர்களுக்கு எமது பொங்கல் வாழ்த்துக்கள்



சென்னை

ஜார்ஜ் டவுன்

வட்டாரத்தில்

ஏர் கண்டிஷன்

செய்யப்பட்ட

வரவேற்புக்கூடம் • சாப்பாட்டு அறைகள் • தங்கும் அறைகள்

குளிப்பதற்கான வசதிகள் இணைந்த அறைகள்

மற்றும் எல்லா நவீன வசதிகளும் உள்ள முதல்தரமான ஒரே ஹோட்டல்

# அம்பீஸ் கபே

போர்டிங் & லாட்ஜிங்

(புதுக் கட்டிடத்தில்)

6 & 7 பிராட்வே – போன்: 21853 & 4747 – சென்னை - 1

---

போன்: 85877 (ஸ்தாபிதம்: 1930) தந்தி: 'MOBILINERS'




நாங்கள் தயாரிக்கும் உன்னதமான - கார் ஸீட் உறைகள் - அழகுக்கும் உறுதிக்கும் உழைப்புக்கும் பெயர் பெற்றவை

•

# P. M. சுப்பிரமணியம் & கோ.

20, உட்ஸ், ரோடு :: சென்னை - 2

# பொங்கலோ பொங்கல்!









## சாமா!







## அங்கும் இங்கும்



சினிமா நடிகை வீட்டில்



கிரகஸ்தர் வீட்டில்






## தை மகள்

என். எஸ். சிதம்பரம்

பொன்னிறத்துச் செழுங்கதிரும் பூங்க ரும்பும்
பொற்புடனே ஏந்திவந்து புதுமை யான
இன்னிசைதான் செவிகொள்ள எதிரே நிற்பாள்!
'இனியதமிழ்த் தைமகள்நான்' எனசொல்வாள்!

'அற்புதமாய் ஒளிச்சுடரை அள்ளி வீசும்
அருங்கதிரோன் தெற்கினின்றும் அருள் வடக்காம்
நற்புதிய திசைக்கேகும் நாளில் வந்தேன்!
நற்காலம் பிறந்த'தென்றே நன்கு ரைப்பாள்!

'சீர்புனைந்த கதிர், கரும்பின் சிறப்ப றிந்தே
செழுஞ்சுவைசேர் பொங்கலினைச் செய்தே இந்தப்
பார்புரக்கும் கதிரினுக்குப் பக்தி யன்பால்
படைத்துண்டு வாழ்க'வென்றே பாட்டிற் சொல்வாள்!

கரும்புமொழி படைத்திடும்'தை'க் கன்னி தானும்
கதிர், இஞ்சி, மஞ்சளினைக் காட்டி நின்றே
அரும்பொங்கற் பண்ணிசைத்தே 'ஆரம் பம்தான்
அரியபுது வாழ்வெ'ன்றே அழகாய்ச் சொல்வாள்!

ஆக்கமதை நீக்கமற அளிக்கச் செய்யும்
அழகுத்'தை' அணங்கவளின் அருஞ்சொற் பேணி
ஊக்கமுடன் பணிசெய்வோம்! உவகை பொங்கும்!
ஒப்பில்லாப் புதுஉலகம் ஓங்கக் காண்போம்
கதிர் கரும்பு மேவிடும்'தை'க் கன்னி தன்னைக்
கனிதமிழில் வரவேற்போம்! கடமை செய்து
புதியதொரு விதியமைத்தே புனித வாழ்வு
புகழுடனே வாழ்ந்திடவே பொங்கலென்போம்!



## உழவன் பொங்கல்

"கலாபாரதி"

கொட்டும் மழையதில் சொட்ட நனைந்திடக்
கூடி உழைப்பவர் நாம் - நானை
நட்ட பயிரது நற்பயன் தருமென
நம்பிப் பிழைப்பவர் நாம்.

பட்டப் பகலதில் சுட்ட வெயிலதில்
பயிர்கள் நடுபவர் நாம் - அவை
நெட்ட வளர்ந்து நெற்கதிரானதும்
நிறைய எடுப்பவர் நாம்.

பொங்கற் புனிதநாள் மங்கையர் சமைத்திடப்
புது நெல் படைப்பவர் நாம் - தைத்
திங்கள் பிறந்தது. தெய்வம் அருள்வழி
தெளிந்து நடப்பவர் நாம்.

கதிரவன் மதிதனைத் துதிசெயும் நாளன்று
காளையும் போற்றுவோர் நாம் - கொம்பில்
புதிதென வண்ணத்தைப் பூசி அழகிட்டுப்
பூமாலை சாற்றுவோர் நாம்.



# பொங்கல் நன்னாள்!

திருச்சி வாசுதேவன்

தையெனும் புனித மங்கை
தாரணி புகுந்து மக்கள்
செய்கையில், மனையில், நெஞ்சில்
தெவிட்டிடாப் புதுமை யின்பம்
பெய்திடும் பொங்கல் நன்னாள்
பீடுற மலரும் இந்நாள்
வெய்யவன் உதவி போற்றி
விருப்பமாய் வணங்கும் பொன்னாள்!
பிழைத்திட வைய மெல்லாம்
பெருமனம் படைத்து நாளும்
உழைத்துமே பயிர்வி ளைக்கும்
உழவர்தம் வாழ்வில் இன்பம்
தழைத்திடச் செய்யும் இந்நாள்
தனிப்புகழ்ச் செங்க ரும்பின்
செழுஞ்சுவை போன்று மாண்பைச்
சிந்தையில் சேர்க்கும் நன்னாள்!



## அலை

பக்திசாரன்

கோலக் கடல் எழுப்பி—என்னைக்
கொண்டு வந்து சேர்த்ததடீ!

ஓலக் குரல் கொடுத்தேன்—அங்கே
ஓமென்று கேட்டதடீ!

வாழ்வு மலர்ந்திடவே—வான்
மதியைத் தேடி நின்றேன்.

தாழ்வு பறந்திடவே—அதைத்
தாவிப் பிடிக்க வந்தேன்.

பெண்ணின் மனக்குறையை—இங்கே
பேசி முடிவதுண்டோ?

எண்ணித் தவித்தாலும்—நான்
எழும்பி அடங்கி நின்றேன்.

தேவி உதித்து நின்றாள்—அன்று
தேவர் வணங்கி நின்றார்.

மேவிக் கடலிடையே—என்
மேனி குளித்து வந்தேன்!

காலக் கடல் எழுப்பி—என்னைக்
கரை சேர்த்து விட்டதடீ!

ஞாலத் தடமெங்கும்—நான்
நனைத்துப் பயனடைந்தேன்!

## பொங்கல் மணக்குது

"ரஞ்சிதன்"

தைத்திங்கள் வந்தாள்
தானஇசை தந்தாள்
தித்திப்புக் கண்டோம்
தேன்பொங்கல் உண்டோம்
கொத்துக் கொத்தாய் மஞ்சள்
குலைகுலையாய் இஞ்சி
எத்திக்கும் இன்பம்
எரியுதடா துன்பம்!

செங்கழனிப் பச்சை
சிலிர்க்குதடா மொச்சை
நங்கைமுகம் கொஞ்ச
நஞ்சையில்பார் மஞ்சள்
பங்கயத்தில் வண்டு
பறக்குதடா உண்டு
பொங்கல்இது பொங்கல்
புகழ்மணக்கும் பொங்கல்!

காலையெல்லாம் எங்கள்
சங்கராந்திப் பொங்கல்!
காலைவேளை கோலம்
காவிபூசும் ஜாலம்
பாலைவார்க்கும் பசுவும்
பளுஇழுக்கும் மாடும்
வேலையேதும் இன்றி
விடுத்திடுவோம் நன்றி!



மழை கொட்டுக் கொட்டு என்று கொட்டிக் கொண்டிருந்தது. ஐந்து நாட்களுக்கு முன் பிடித்த மழை இன்னும் நிற்கவில்லை. வெளியே தலைகாட்டவோ, கால் வைக்கவோ முடியாத நிலையில் கிராமத்தில் ஒவ்வொருவரும் வீட்டோடு கிடந்தார்கள். அந்திசந்திகளில் கூடத் தெருவில் மனித நடமாட்டத்தைக் காண முடியவில்லை. எங்கு பார்த்தாலும் ஒரே வெள்ளக்காடு. இரண்டொரு வீடுகளில் பலஹீனமான மண் சுவர்கள் விழுந்துவிட்டன. அன்றாடக் கூலி வேலை செய்து ஜீவித்து வந்த மக்கள் ஒவ்வொரு நாளையும் எப்படித்தான் கழித்தார்களோ?

மளிகைக் கடை ஆறுமுகம் பிள்ளை வீட்டின் தெருத் திண்ணையில், தட்டி வைத்துக் கட்டப்பட்ட ஒரு மூலையில் இரண்டு மனித ஜீவன்கள் தூங்கிக் கொண்டிருந்தன. இரண்டும் அநாதைகள்; ஆனால் எங்கெங்கோ பிறந்த இந்த இரண்டு அநாதைகளும் சந்தர்ப்ப விசித்திரத்தால் ஒரு திண்ணையில், ஒரு பாயில் படுத்துறங்கும்படி நேர்ந்தது.




அந்த இடம் முத்துப் பிள்ளையின் வாசஸ்தலம். பத்து வருடங்களாக அந்த மூலையில் தான் அவர் படுத்து உறங்குகிறார். ஒருவருக்குத்தான் தாராளமாகப் படுத்துக் கொள்ள அங்கே இடம் உண்டு. அந்தக் குறுகிய பகுதியில், ஊருக்குப் புதியவனான ஆண்டியப்பனும் பங்குக்கு வந்து சேர்ந்து விட்டதற்கு இந்த மழைதான் காரணம்.

ஆண்டியப்பன் ஏதோ ஒரு தூரத்துக் கிராமத்தைச் சேர்ந்தவன். வயது பதின் மூன்று இருக்கும். அவனுக்குத் தாயுமில்லை; தகப்பனுமில்லை. அனாதையாக வயிற்றுப் பிழைப்புக்கு வழி தேடி அந்தக் கிராமத்துக்கு வந்து சேர்ந்தான். ஒரு பெரிய வீட்டில் மாடு மேய்க்கும் வேலை கிடைத்தது. இரண்டு நேரக் கஞ்சியும் ஒரு நேரச் சாதமும்தான் சம்பளம். தொழுவிலேயே உட்கார்ந்து சாப்பிட்டுவிட்டுத் தொழுவிலேயே ஒரு மூலையில் படுத்துக் கொள்வான். இப்படியே இரண்டு மூன்று மாதங்கள் கழிந்தன. அப்புறம் அடை மழை பிடித்துக் கொண்டு விடவே, தொழுவில் படுத்துக்கொள்ள முடியாமல் போய்விட்டது. மண் தரையெல்லாம் சரச் சதுப்பேறிப் பனிக்கட்டியாகக் குளிர்ந்தது. சுவர்களோ அதையும் விட மோசம். மாட்டையே கடித்து ரத்தத்தை உறிஞ்சும் பெரிய பெரிய கொசுக்கள் வேறு ஏகமாகப் பெருகி முகம், முதுகு, கை கால்கள் என்று அவன் உடம்பு முழுவதையுமே சித்திரவதை செய்து கொண்டிருந்தன. இந்தச் சூழ்நிலையில், போர்த்துக் கொள்ள ஒரு கந்தை கூட இல்லாமல் ஓலைப் பாயில் தூங்குவது எப்படி? இம்சை பொறுக்க மாட்டாத அந்தப் பையன் தன் துயரக் குரலுக்குப் பைத்தியக்கார முத்துப் பிள்ளை ஒருவர்தான் செவி சாய்ப்பார் என்று நம்பி அவரிடம் வந்தான்.

"தாத்தா! ராத்திரிக்கு நான் திண்ணையில் வந்து படுத்துக் கொள்ளட்டுமா?" என்றான்.

முத்துப் பிள்ளை அவன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாரே ஒழிய, பதில் சொல்லுவதற்கு வாயைத் திறக்கவில்லை.

ஆண்டியப்பன் மறுபடியும் தன் வேண்டுகோளைத் தெரிவித்தான். மொத்தம் ஆறு தடவைகள் அவன் வாய் திறந்து கேட்ட பிறகுதான், "திண்ணையா...?" என்றார் முத்துப் பிள்ளை.

"ஆமாம்..."

"படுக்கவா?"

"உம்."

"....திண்ணையில்தானே?... படுத்துக்கோயேன்!" என்று அனுமதி கொடுத்தார் முத்துப் பிள்ளை.

அப்புறம், "நீ யாரு?" என்று அவனை மெதுவாக விசாரித்தார்.

ஆண்டியப்பன் தன் பிறப்பு வளர்ப்பைப் பற்றியும், தான் வேலை செய்யும் வீட்டுத் தொழுவில் தூங்க முடியாமல் பட்ட கஷ்டத்தையும் விரிவாக எடுத்துச் சொன்னான்.

அன்றிரவு முத்துப் பிள்ளை ஒரு கோடியிலும் ஆண்டியப்பன் மறு கோடியிலுமாகப் படுத்துத் தூங்கினார்கள். இது திண்ணையின் சொந்தக்காரருக்கும் தெரிய வந்தது. உடனே அவர் ஆண்டியப்பனை விரட்டாததற்குக் காரணம், அவனுடைய முதலாளி அவருக்கு மிகவும் வேண்டியவராகவும், அதைவிட முக்கியமாக அந்த ஊரிலேயே பெரும்புள்ளியாகவும் இருந்ததுதான்.

பையன் இரண்டாவது நாள் படுத்துத் தூங்கும்போது, மழையோடு காற்றும் சேர்ந்து கொண்டது. சுழன்று சுழன்று பேயாட்டம் போட்டு அடித்த முரட்டுக் காற்றில் சில வீடுகளின் கூரைகள் பறந்துவிட்டன. சில மரங்களும் சாய்ந்தன. அப்போது ஆறுமுகம் பிள்ளை வீட்டுத் திண்ணையிலும் திண்ணையை ஒட்டிய சுவரிலும் மழைத் துளிகளை விசிறி அடித்தது காற்று. தூங்கிக் கொண்டிருந்த ஆண்டியப்பன் சவுக்கடி பட்டவனைப்போல் துள்ளி எழுந்தான். அவனும் கண்ணைத் திறக்கவே முடியவில்லை. என்ன நடக்கிறது என்றே புரியாமல் புத்தி பேதலித்து நின்றான். சுய உணர்வு தட்டுவதற்கு முன்பே, ஈரத் துணியுடன், முத்துப் பிள்ளை படுத்திருக்கும் மறைவிடத்துக்கு ஓடினான். போன வேகத்தில் அவன் உடம்பிலிருந்து தெறித்த மழைத் துளிகள் அவரையும் எழுப்பி விட்டன. அவர் "என்ன, ஏது?" என்று விசாரிப்பதற்கு முன்பாகவே, ஆண்டியப்பன் பேய்க்குப் பயந்து ஓடி வந்தவனைப் போல் வாய் குழறிக் கொண்டே, "மழை! மழை!" என்று புலம்பினான்.

"சரி சரி" என்று சொல்லிவிட்டுச் சும்மா இருந்தார் முத்துப் பிள்ளை.

அவர் குரல் கேட்ட பிறகுதான் அவனுக்குச் சுய உணர்வு வந்தது. சிறிது நேரம் நின்று கொண்டேயிருந்தான். பிறகு, கட்டியிருக்கும் கந்தையைப் பிழிந்தான்.

"தாத்தா! ஒரு துண்டு இருந்தால் கொடுங்கள், காலையில் அதைத் துவைத்துக் கொடுத்து விடுகிறேன்" என்று ஆண்டியப்பன் கேட்டான்.

முத்துப் பிள்ளை, "என்னது?" என்றார்.

"ஒரு துண்டு இருக்குமா?"

"துண்டு இல்லை...இந்தா, இதைக் கட்டிக்கோ" என்று ஒரு பழைய துணியைக் கொடுத்தார் கிழவர்.

ஆண்டியப்பன் அதை வாங்கிக் கட்டிக் கொண்டு, அவருக்குப் பக்கத்திலேயே படுத்தான். அவருடைய துப்பட்டியின் ஒரு பகுதியைத் தூக்கத்திலேயே எப்படியோ இழுத்துத் தன் உடம்பின் ஒரு பகுதியை மூடிக்கொண்டான். புயல் காற்றின் ஓலம் தொடர்ந்து கேட்டுக் கொண்டேயிருந்தது. பத்தும் பதினைந்து நிமிஷங்கள் கழிந்தது. "நீ யாரு?" என்று முத்துப் பிள்ளை கேட்டதும், அவனுக்கு அந்தக் கஷ்ட நிலையிலும் சிரிப்புத்தான் வந்தது.

'ஊர்க்காரர்கள் இவரைப் பைத்தியக்காரக் கிழவன் என்று சொல்வதில் தப்பில்லை. நேற்றுச் சாயங்காலம்தான் நம் கதை முழுவதையும் சொன்னேன். அதற்குள் இன்று திரும்பவும் யார் என்று கேட்கிறாரே?' என்று எண்ணி உள்ளுக்குள் சிரித்துக் கொண்டான். பின்னை, மறுபடியும் அந்தக் கேள்வியைக் கேட்டால் பதில் சொல்லலாம் என்று நினைத்தான். ஆனால் அவரிடமிருந்து அப்புறம் வார்த்தை வரவில்லை; குறட்டைதான் வந்து கொண்டிருந்தது. குறட்டை ஒலி கேட்டு ஆண்டியப்பன் வாய் விட்டுச் சிரித்தான். 'அப்பாவி, பாவம்!' என்று அவருக்கு இரக்கம் காட்டவும் செய்தான். அனாதைக்கு அனாதை உதவுவது, உதவிய அனாதைக்கே உதவியைப் பெற்றுக் கொண்ட அனாதை இரக்கம் காட்டுவது! இப்படிப்பட்ட ஒரு நம்ப முடியாத நாடகத்தை நிகழ்த்தின அன்றைய இரவின் மழையும் புயலும்!

## 2

முத்துப் பிள்ளை பத்து வருஷங்களாகவே பைத்தியக்காரக் கிழவராக, அப்பாவியாக வாழ்ந்து வருகிறார். ஆனால் அவர் நாலு



பேரைப்போல் வாழ்ந்த காலமும் உண்டு. அது இந்தத் தலைமுறையினருக்குத் தெரியாது; முந்திய தலைமுறையினர், அவருக்குச் சமமான வயதுடைய சிலர் அறிவார்கள். ஆனால் அவர்கள் அந்தக் காலத்தையே இப்போது மறந்து விட்டார்கள். அதனால் முத்துப் பிள்ளை பிறக்கும்போதே இப்படி அறுபது வயதுக் கிழவராக, அப்பாவி மனிதராகப் பிறந்து, பிறந்த நாள் முதல் மளிகைக் கடை ஆறுமுகம் பிள்ளையின் வீட்டுத் திண்ணையிலேயே வசித்து வருவதுபோல் எல்லோருக்கும் தோன்றியது.

பத்து வருஷங்களுக்கு முன் முத்துப் பிள்ளையின் பூர்வாசிரமம் விட்டகுறை தொட்டகுறையின்றி முடிவடைந்து விட்டது. மனைவி



**அவர்: இதுமாதிரி யெல்லாம் ஆகும்னு தான் நான் மகான்களை யெல்லாம் ஸ்டாம்புகளில் போடப்படாது என்று சொல்லிண்டு வந்தேன். பாரு... பாரு... அவன் என்ன பண்ணுறான்னு பாரு!**

---

யும், மக்களும் காலமாகி விட்டார்கள். மூத்த மகனின் மகள், தன் தாயோடு, தாயின் பிறந்த வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தாள். கடைக்குட்டி மகன் வறுமையைத் தாங்க முடியாமல் வீட்டை விட்டுச் சொல்லாமல் கொள்ளாமல் எங்கோ போனவன்தான், அப்புறம் ஊர் திரும்பவே இல்லை. இவ்வளவும் ஐம்பது வயதுக்குள் நடந்து முடிந்து விட்டன. கடைசியில் குடியிருந்த மண் வீட்டை - தம்முடைய ஒரே சொத்தை - மளிகைக் கடை ஆறுமுகம் பிள்ளையின் ஆதீனத்துக்கு விட்டுவிட்டு, அவர் திண்ணையில் வந்து தமக்குப் புகலிடம் தேடிக் கொண்டார் மூத்துப் பிள்ளை.

ஆறுமுகம் பிள்ளை, அந்தக் கிழவருடைய அத்தையின் மகன் வயிற்றுப் பேரன். அவர் கொஞ்சம் நிலம் நீச்சு வைத்துக் கொண்டிருக்கிறார்; ஒரு மளிகைக் கடையும் நடந்து வருகிறது. அவரும் அவர் மனைவியும் அனாதையாக வந்து சேர்ந்த கிழவருக்குத் தம்முடைய வீட்டுத் திண்ணையில் இடம் கொடுத்தார்கள்; அவர் அன்றாடம் கூலி வேலைக்குப் போய்ச் சம்பாதித்துக் கொண்டு வரும் காசை வாங்கிக் கொண்டு சாப்பாடு போட்டார்கள். அவரால் அந்தக் குடும்பத்துக்கு எந்த விதமான நஷ்டமும் இல்லை; கஷ்டமும் இல்லை. ஆனால் கொடுமைப் படுத்துவதற்கு நஷ்டமோ கஷ்டமோ காரணமாக இருந்தாக வேண்டும் என்ற அவசியம் ஏதாவது உண்டா?

காசு கொடுத்துச் சாப்பிடுகிறவர்தான் என்றாலும், வலிய வந்தவர்; வேறு கதியில்லாதவர். ஒருவனைக் கொடுமைப்படுத்துவதற்கு இந்தக் காரணங்களே போதும் என்று ஆறுமுகம் பிள்ளையும் அவர் மனைவியும் நினைத்து விட்டார்கள். மூத்துப் பிள்ளை சாப்பிட வரும்போதெல்லாம் வசைமாரிதான். 'பேய்த் தீனி தின்கிறார்' என்பதிலிருந்து, 'எதிரே வந்தால் சகுனத் தடை' என்பது வரை எத்தனையோ நிஷ்டூர வார்த்தைகள். தண்ணீர் கொடுக்கும் பாத்திரம் தரையில் வைக்கப்படும்போது ஏழு வீட்டுக்குச் சத்தம் கேட்கும்; பாதித் தண்ணீர் கீழே சிந்திப் போகும். மறுதடவை தண்ணீர் கேட்டுவிட்டாலோ மீண்டும் ஒரு மணி நேரத்துக்கு வசை மாரிதான்.

இத்தனை அவமானங்களைச் சகித்துக் கொண்டு அங்கே கிடக்க வேண்டிய அவசியம் எதுவுமில்லை. அங்கே கொடுக்கும் காசை வேறு இடத்தில் கொடுத்தால் நல்ல சாப்பாடுபோடுவார்கள் என்பதும் உண்மைதான். இது சிறு குழந்தைக்கும் தெரியக்கூடிய சர்வ சாதாரணமான விஷயமே. ஆனால், இவ்வளவு தூரத்துக்கு அவரால் சிந்திக்க முடியவில்லை. கஷ்டமோ நஷ்டமோ உறவு முறைக்குள் கிடந்தால்தான் மரியாதை என்று ஆரம்பத்தில் நினைத்துக்கொண்டு வந்து சேர்ந்தாரே, அந்த முடிவு அவரை அப்படியே தளையிட்டு நிறுத்திவிட்டது. பொறியும் புத்தியும் கலங்கி வந்த மனிதனைக் கொடுமையும் கொல்லும் சொற்களும் சேர்ந்து அறவே பைத்தியமாக்கி விட்டன. விரட்டினாலும் போகாமல், விளக்கிலேயே வந்து விழும் பூச்சியாக மாறிவிட்டார் மூத்துப் பிள்ளை. இதை நன்றாகவும் தெள்ளத் தெளிவாகவும் அறிந்து கொண்டார்கள் ஆறுமுகம் பிள்ளையும் அவர் மனைவியும். என்றாவது ஒரு நாள் ஒரு வார்த்தை அன்பாகப் பேசிவிட்டால்--அப்படியெல்லாம் அவர்களால் பேசவும் முடியாது -- மூத்துப் பிள்ளை புத்தி சுவாதீனம் அடைந்து வீட்டை விட்டுப் போய்விடுவார், அவர் வருமானத்தின் மூலம் மாதா மாதம் மிஞ்சும் பத்துப் பதினைந்து ரூபாயை இழக்க வேண்டியிருக்கும் என்ற பயம் கூட அவர்களுக்கு உண்டாகி விட்டது. 'அது அதை வைக்க வேண்டிய இடத்தில்தான் வைக்க வேண்டும்' என்று அவர்கள் எத்தனையோ தடவைகள் பரஸ்பரம் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்.

மூத்துப் பிள்ளை நாள் தவறாமல் கூலி வேலைக்குப் போவார். வேலையில்லாத நாட்களில் வீட்டு வேலைகளை ஓய்வொழிச்சல் இல்லாமல் செய்து கொண்டிருப்பார். வேலையே அவரது இயற்கையாக, அவர் உயிரோடு இருப்பதை அவருக்கே காட்டும் சின்னமாக இருந்தது. இப்படிப்பட்ட மனிதர் சேர்ந்தாற்போல் நாலைந்து நாட்கள் கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்கும் படி நேர்ந்துவிட்டது, இந்த அடைமழையினால். இது பத்து வருஷ காலத்தில் அவருக்கு ஏற்பட்ட மிகப் பெரிய சோதனை என்றே சொல்ல வேண்டும். வேலையில்லாமல், வருமானமில்லாமல் பழியாகக் கிடந்து, தண்டச் சோறு சாப்பிடுவதாக ஆறுமுகம் பிள்ளையும் அவர் மனைவியும் அவரை மாற்றி மாற்றி நெருப்பில் வாட்டி எடுத்தார்கள். நல்லவேளையாக அவரை நெருப்பு அதிகம் சுடவில்லை. ஏற்கனவே உடம்பும் மனமும் உணர்விழந்து போயிருந்தது. அவருக்கு அந்தச் சமயத்தில் ஓரளவு பாதுகாப்பாக இருந்து உதவியது.

## 3

ஒரு நாள் இரவு மழை சற்று மட்டுப் பட்டது. சிறு தூறல் மட்டும் இலேசாகத் தூறிக் கொண்டிருந்தது. அமைதியான

## இருமலிலிருந்து
## துரித நிவாரணத்திற்கு

# கஸாபின்

**நம்பகமான இருமல் நிவாரணி**




சில டீ-ஸ்பூன்கள் அளவுள்ள **கஸாபின்** ஜலதோஷத்தையும் இருமலையும் விரைவில் குணப்படுத்துகிறது. பெரியவர்களுக்கும் சிறுவர்களுக்கும் கைகண்ட மருந்து.

# பெங்கால் கெமிகல்

**பம்பாய் - கல்கத்தா - கான்பூர்**

●

சென்னை ராஜ்ய விநியோகஸ்தர்கள்:

**M/s. ஆர். எல். கௌடர் & கோ.,**
59, பந்தர் தெரு, சென்னை

ஆந்திர ராஜ்ய விநியோகஸ்தர்கள்:

**M/s. சத்யநாராயண பார்மஸி**
குமரி தெரு, விஜயவாடா-1 & விஜயநகரம்

# பொங்கல்

**திருநாளை**

## தூய கதராடை அணிந்து

நம் உணவை உற்பத்தி செய்யும் விவசாயக் குடும்பங்களுடன் கொண்டாடுவோம்!

சென்னை ராஜ்யத்தில் 5 லட்சம் கிராம மக்கள் கைராட்டையைக் கொண்டு விவசாயத்தில் கிடைக்கும் சொற்ப வருமானத்தைப் பெருக்கிக் கொள்கிறார்கள்

சென்னை ராஜ்ய
கதர் கிராமத் தொழில் போர்டின்

# காதி

**விற்பனை நிலையங்களில்**

(சென்னை நகரிலும் முக்கிய நகரங்களிலும்)

எல்லோருக்கும் பிடித்த கவர்ச்சிகரமான கதர், கதர்ப் பட்டு ஜவுளிகள்

கதர் ரெடிமேட் (தயாரித்த) ஆடைகள் மெர்ஸரைஸ்டு ஷர்ட்டிங் கோட்டிங் நிஜுககள் குழந்தைகளுக்கான அச்சிட்ட சிட்டிகள் மற்றும் பல கண்கவர் ரகங்கள் கதரில் உள்ளன

சென்னை தேனாம்பேட்டை கதர் கிராமத் தொழில் பொருட்காட்சியில் காதி இலாகா விற்பனை ஸ்டாலுக்கு விஜயம் செய்யுங்கள்

**காதி இலாகா**
சென்னை ராஜ்ய கதர் கிராமத் தொழில் போர்டு

# TALC

## by MAX FACTOR

*keeps you deliciously cool,*
*delightfully fresh*




*Supplies are once more available*

ORIENT COSMETICS PRIVATE LIMITED • BOMBAY • MADRAS

நேரம். பக்கத்தில் ஆண்டியப்பன் தூங்கிக் கொண்டிருந்தான். எப்படியோ விழிப்புத் தட்டி எழுந்த முத்துப் பிள்ளை, சிறிது நேரம் பாயில் உட்கார்ந்து கொண்டிருந்தார். தூங்குகின்ற பையன் யார் என்பது அவருக்கு அப்பொழுது 'பளிச்'சென்று ஞாபகத்துக்கு வரவில்லை. வெகு நேரம் சிரமப்பட்டு யோசித்த பிறகுதான், அவன் யார், எப்படி அங்கு வந்து சேர்ந்தான் என்பதெல்லாம் நினைவுக்கு வந்தன. அவன் மேல் கலைந்து கிடந்த துணியை எடுத்து, நன்றாக விரித்து போர்த்தினார். அந்தச் சமயத்தில் சுவர் மூலையில் ஒட்டுத் தாழ்வாரத்துக்கும் சுவருக்கும் இடைப்பட்ட ஒரு சிறு பொந்திலிருந்து 'சிஜுக்', 'சிஜுக்' என்று குருவிக் குஞ்சு கத்துவது காதில் விழுந்தது. ஒரு பெரிய குருவி பொந்திலிருந்து வெளியே வந்து சிறகடித்துப் பறப்பதும் திரும்பவும் பொந்துக்குள் போவதும் ஒரு நிமிஷத்தில் பலமுறையும் வெளியே வந்து வட்டமிட்டுப் பறப்பதுமாக இருந்தது. அந்த இருட்டு மூலையில் அது கண்ணுக்குத் தெரியாவிட்டாலும் காதில் விழும் சத்தத்தைக் கொண்டு கணிக்க முடிந்தது. ஒரு சமயம், குருவி முத்துப் பிள்ளைக்கு வலது கைப்புறத்தில், வெகு சமீபமாகப் பறந்து வந்து ஐந்தாறு இடங்களில் உட்கார்ந்து விட்டு 'விருட்' என்று பறந்து மேலே பொந்துக்குப் போனது. முத்துப் பிள்ளை அண்ணாந்து பார்த்துவிட்டுத் திரும்பவும் கையைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்தார். குருவிக் குஞ்சுகள் தொடர்ந்து கத்திக் கொண்டேயிருந்தன.

கடைசியாகக் கிழவர் பாயில் படுத்தார். அப்புறம் அவர் தூங்கவில்லை என்பதுடன் ஓரேயடியாகப் பெருமூச்சு விட்டு விம்மவும் தொடங்கி விட்டார். உடம்பெல்லாம் கொதித்தது. குழ்நிலையின் குளிர் உடம்பைத் தாக்கவில்லை. துப்பட்டியைத் தனியே எடுத்து, ஆண்டியப்பனுக்குப் போர்த்து விட்டு வெற்றுடம்புடன் கிடந்தார்.

விடியும் வரையில் மழையும் ஓயவில்லை; குருவிக் குஞ்சுகளின் கத்தலும் நிற்கவில்லை.

மறுநாள் இரவுச் சாப்பாட்டுக்காக வீட்டுக்குள்ளே போன முத்துப் பிள்ளையை, "சாப்பாட்டு மணி அடித்துவிட்டதா? மணிப்பிரகாரம் வயிற்றுக்குப் போடாவிட்டால் உயிரா போய்விடும்? அப்படிப் போகிற உயிர்தான் போகட்டுமே! இருந்து எந்த ராஜ்யத்தை ஆளப் போகிறே?" என்று சொல்லிக் கொண்டே வரவேற்றாள் ஆறுமுகம் பிள்ளையின் மனைவி. இந்த வரவேற்புரை பழைய பல்லவிதான். இதற்குப் பயந்துகொண்டு கொஞ்சம் நேரங் கழித்துப் போனாலோ, "உமக்குக் காத்திருந்து படைக்க இங்கே என்ன கட்டின பெண்டாட்டியா இருக்கிறாள்? உம்முடைய முகத்தில் விழித்தாலும் ஆகாதென்றுதானே அவள் காலா காலத்தில் போய்ச் சேர்ந்துவிட்டாள்?" என்ற வரவேற்புரையைக் கேட்க வேண்டி வரும். அதனால் நேரத்திலேயே போய்ச் சாப்பாட்டுக்கு உட்கார்ந்தார் கிழவர். தட்டில் போடப்பட்ட சாதத்தில் பாதி தரையில் விழுந்தது. அவர் அதை அள்ளி தட்டில் போட்டுக்கொண்டிருக்கும்போதே, தட்டைப் பார்க்காமல் அவருடைய குனிந்த தலையையே வெறுப்போடு பார்த்துக் கொண்டிருந்த அவள் கொதிக்கிற குழம்பை அவருடைய புறங்கையில் ஊற்றிவிட்டாள்.

"ஐயோ!" என்று சூடு பொறுக்காமல் கையை இழுத்தார் முத்துப் பிள்ளை.

"கண் என்ன அவிஞ்சா போச்சு? குழம்புக் கரண்டிகூடவா கண்ணுக்குத் தெரியாமல் போய்விடும்?" என்றாள். அடுத்த நிமிஷம் "அப்படிப் பறக்கப் பறக்க வெறும் சோற்றை எடுத்து விழுங்க, நாள் பூராவும் பட்டினியா கிடந்தீர்? காலையில் ஒரு சட்டியும் மத்தியானம் ஒரு சட்டியும் கொண்டு வந்து நான் தானே கொட்டினேன்?" என்று சொன்னாள்.

அவள் அந்தப் பக்கம் போன பிறகு ஐந்தாறு கவளத்தை எடுத்து விழுங்கினார் முத்துப் பிள்ளை. பாதித் தட்டு காலியானதும் அப்படியே எழுந்து தட்டோடு வெளியே வந்தார். இடது கையால் மடியிலிருந்த ஒரு பழைய காகிதத்தை எடுத்து அதில் மீதியிருந்த சாதத்தைக் கொட்டினார். தட்டைக் கழுவி உள்ளே கொண்டுபோய் வைத்துவிட்டு வெளியே வந்தார். காகிதத்தில் இருந்த சாதத்தைப் பொட்டலமாகக் கட்டி, தாம் படுக்கும் இடத்தில் மாடக்குழியில் கொண்டு போய் வைத்துவிட்டுப் பாயை விரித்துப் படுத்துக்கொண்டார். அப்புறம் ஆண்டியப்பனும் மழையோடு மழையாகத் தலையில் ஒரு துணியைப் போட்டுக் கொண்டு வந்து சேர்ந்தான்.

"தாத்தா! இந்த அடைமழை எப்பத்தான் நிக்கப் போகிறது? கீழத் தெருவிலே நாலு வீடு இடிஞ்சு விழுந்திட்டதாம்" என்று சொல்லிக் கொண்டே அவனும் படுத்தான்.

ஆறுமுகம் பிள்ளை வீட்டுத் தெரு வாசல் கதவு சாத்தப்பட்டது.

மழை இரைச்சலில் குருவிக் குஞ்சுகள் கத்தியது கேட்கவில்லை. தாய்க் குருவியையும் காணவில்லை.

பதினொரு மணிக்கெல்லாம் மழை சற்று நின்றது; வெறித்தது என்றே சொல்ல


**கல்கி**

**சந்தா விகிதம்**

| | ஒரு வருஷம் | ஆறு மாதம் |
|---|---|---|
| | ரூ. ந பை | ரூ. ந பை |
| இந்தியா / இலங்கை | 15—00 | 7—50 |
| பர்மா மலேயா / வெளி நாடுகள் | 18—00 | 9—00 |

தனிப் பிரதி விலை 30 நயா பைசா

*சந்தா தொகை முன்னதாக அனுப்பப்பட வேண்டும் வி.பி.பி. கிடையாது இலங்கை நேயர்கள் மட்டும் வி.பி.பி. மூலம் சந்தா தொகையைச் செலுத்தலாம்.*

மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-10

வேண்டும்; நம்ப முடியாத அதிசயம்போல், வானத்தின் ஒரு பகுதி வெளிவாங்கி, மங்கலாக நிலவொளியும் விரிந்தது. அப்போது, சொல்லி வைத்தது போல் தாய்க்குருவி வெளியே பறந்து வந்தது. குஞ்சுகளின் கூச்சல் தெள்ளத் தெளிவாகக் கேட்டது.

அவ்வளவு நேரமும் தூங்காமல் படுத்திருந்த முத்துப் பிள்ளை அதிவேகமாக எழுந்து உட்கார்ந்தார். தாய்க் குருவி தெருவுக்குப் பறந்து போய், சிறிது நேரத்துக்குப் பிறகு வந்து சேர்ந்தது. திண்ணையின் பல பகுதிகளிலும் சுவரில் இரண்டொரு இடங்களிலும் பூச்சி புழுக்களைக் கொத்துவது போல் எதையோ கொத்தியது. அப்புறம் குஞ்சுகளிடம் சென்றது. தாயைக் கண்டதும் குஞ்சுகளின் கூச்சல் பெரிதாயிற்று.

முத்துப் பிள்ளை மாடக் குழியிலிருந்து பொட்டலத்தை எடுத்துத் திண்ணையின் மறு கோடியில் -- தாய்க் குருவி பயமில்லாமல் வந்து போகக் கூடிய தூரத்தில் -- கொண்டு போய், நன்றாகப் பிரித்து வைத்துவிட்டுப் பாயில் வந்து உட்கார்ந்தார்.

தாய்க் குருவி அம்பைப் போல் சாதத்தை நோக்கிப் பாய்ந்து வந்தது. வாய் நிறையச் சோற்றுப் பருக்கைகளைக் கவ்விக் கொண்டு பொந்துக்குப் பறந்தது. குஞ்சுகளின் கும்மாளமும் படபடப்பும் கூச்சலில் பிரதிபலித்தன. நிமிஷத்துக்கு ஒரு தடவை பொந்துக்கும், பொட்டலத்துக்குமாகக் குருவி பறந்து கொண்டிருந்தது.

முத்துப் பிள்ளை, உட்கார்ந்த நிலையிலேயே இரண்டு கைகளையும் தலைக்கு மேல் உயர்த்திக் குவித்தார். கண்களை மூடிக்கொண்டு, ''அம்மா .... முருகா !'' என்று சத்தம் போட்டுச் சொன்னார். அரைத் தூக்கத்துடன் கிடந்த ஆண்டியப்பன் உடனே விழித்து விட்டான். கும்பிட்ட கையோடு கிழவர் உட்கார்ந்திருப்பதை அந்த மங்கலான நிலவு வெளிச்சத்தில் பார்த்தான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

''என்ன தாத்தா?...'' என்று மெதுவாக விசாரித்தான்.

''முருகா !... முருகா!...'' என்று வாய்க்குள்ளேயே ஜபித்துக்கொண்டு அழுதார் முத்துப் பிள்ளை.

அவருடைய தோளைப் பிடித்துக் குலுக்கி, ''தாத்தா ஏன் அழுகிறீங்க? என்ன சங்கதி?'' என்று அவன் கேட்கவே, ''பாவம்! பத்து நாட்களாய் மழை. அதுதான் என்ன செய்யும்?'' என்று பதிலளித்தார் கிழவர்.

''எதுதான் என்ன செய்யும்? என்ன சொல்றீங்க தாத்தா?''

''எல்லாம் பொடிப் பொடிக் குஞ்சு.... அந்தத் தாய்க் குருவியைப் பாரு, ஆண்டியப்பா!'' என்றார் முத்துப் பிள்ளை.

பையன் திரும்பிப் பார்த்தான். குருவி பறப்பது, குஞ்சுகள் கத்துவது, காகிதத்தில் சாதம் கிடப்பது.....அவனுக்கு விஷயம் புரிந்துவிட்டது. கிழவர்தான் பொட்டலம் கட்டிச் சாதத்தைக் கொண்டு வந்து வைத்திருக்கிறார் என்பதையும் புரிந்து கொண்டான். ஆனால் அவர் எதற்காகக் கும்பிட வேண்டும்? ஏன் அழுகிறார்? அதுமட்டும் அவனுக்குப் புரியவில்லை.

எவ்வளவோ காலத்துக்கு முன், இதே போன்று மழை பெய்து கொண்டிருந்த ஓர் இரவில்தான், திருக்கோவிலூரின் இருமனை யொன்றில், குறுகலான இடைகழியில் நின்று 'பாட்டுக்குரிய பழைய மூவர்' - மூன்று முதலாழ்வார்கள் - அந்தாதி ரூபத்தில் மெய் விளக்கேற்றித் திரிவிக்கிரம மூர்த்தியைத் தரிசித்தார்களாம். ஆனால் இங்கே இப்போது அந்தாதி விளக்கில்லை; பழைய காகிதத்தில் சிறிது சாதம்தான் கிடந்தது. இந்த விளக்கின் முன் அன்பும், சக்தியும், நம்பிக்கையும் தெய்வ சாந்நித்யமும் குஞ்சுக்கு இரையூட்டும் குருவியாகக் கண் காணச் செயல்பட்டுக் கொண்டிருந்தன. இத்தகைய குணங்களும், இத்தகைய இயல்புகளும் இன்னும் உலகத்தில் இருக்கின்றனவா ?

முத்துப் பிள்ளையால் இந்தத் தரிசனத்தைத் தாங்கவே முடியவில்லை. கண்ணீர் விட்டு அழுதார்; கைகளைக் குவித்துக் கும்பிட்டார். 'பைத்தியக்காரக் கிழவன் தன்னையே கும்பிட்டுக் கொள்ளாமல் வேறு எதையோ போய்த் தொழுகிறானே' என்று ஆண்டியப்பனின் அந்தராத்மா எண்ணியதோ என்னவோ, அவரை நோக்கிக் கரங்கூப்பித் தொழும்படி அவனுக்குக் கட்டளையிட்டது.


சந் வைத்தியசாலை (பிரைவேட்) லிமிடெட், நஞ்சன்கூடு
ஆயுர்வேத வித்வான் B. V. பண்டிட் அவர்களின்

பனி கால அவசிய உதவி

I. D. L. நெ 12
காஸ்மஸ்
கஸ்தூரி மாத்திரை

யாவருக்கும் உதவும் குடும்ப சஞ்சீவி

தினம் தாம்பூலத்துடன் உபயோகிக்கலாம் (சுறுமணம்)
சுமார் 200 சிறிய மாத்திரைகள் பாட்டில் 0-40
48 பாட்டில் தபால் மூலம் பிரீ டெலிவரி 18-00
144 பாட்டில் ரயில் பார்சல் மூலம் பிரீ டெலிவரி 52-00
முன் பணம் அனுப்பவும். வி. பி. இல்லை.
வைத்தியர்களுக்கு நன்கு உதவும் 51 மருந்து விபரத்திற்கு எழுதுக.




பாக்கெட்டின் தோற்றம் கவனிக்கவும்; ஏமாற்றம்.
பல் உபாதைகளைத் தடைப்படுத்த
I. D. L. 61, ரெடிமேட்
நஞ்சன்கூடு பல்பொடி டப்பி 0-50

சேல்ஸ் ஏஜண்டு யுனைடெட் கன்ஸர்ன், 51 பந்தர் தெரு, சென்னை-1 (மதுரை) கோவை, மதுரை

# ஒவ்வொரு சோதனையிலும் வெற்றி!

# ஒவ்வொரு வருக்கும் திருப்திதரும் இன்சுவை!

# மார்ட்டன்ஸ்

## லாக்டோபன்பன்ஸ்

லாக்டோபன்பன்ஸ், முழு ஆடைப் பால், வெண்ணை, சர்க்கரைப்பாகு, க்ளுகோஸ் போன்ற ஆரோக்கியத் திறுகந்த கூட்டுப்பொருள்களால் தயாரிக்கப்பட்டவை. அவற்றின் இனியசுவை, அலுப்புச்சலிப்பின்றி அதிகக் கவனத்துடன் செய்யப்பட்ட ஆராய்ச்சியின் விளைவாகும். ஆகவே சுவைகளில் எளிதிலே திருப்தி அடையாதவர்களையும் அவை திருப் திப்படுத்துவதில் ஆச்சரியம் ஒன்று மில்லை!








**ஸி. & இ. மார்ட்டன் (இந்தியா) லிட்**

உயர்தர மிட்டாய்கள் தயாரிப்பாளர்கள்.

# அழகி ஆடிய நாடகம்



"இவர் முதுகுளத்தூர் தங்கச்சாமித் தேவர். இது அவருடைய மனைவி அழகம்மாள் என்ற அழகி" என்று அவர்கள் இருவரையும் எனக்கு அறிமுகம் செய்து வைத்தார் குங்குமப்பொட்டுக் குமாரசாமி.

நான் போனபோது அவர்கள் இருவரும் குமாரசாமியிடம் விடைபெற்றுப் புறப்படும் நிலையிலிருந்தார்கள். நான் உள்ளே நுழைந்த போதுதான் தேவர், "புருஷனுக்கு அடங்கி ஒடுங்கி நடந்துக்கறதுதான் நல்லதுன்னு இவளுக்குப் புத்தி சொல்லுங்க கொஞ்சம்" என்று சொல்லிக் கொண்டிருந்தார்.

அழகம்மாள், "பொஞ்சாதி அடங்கி நடக்கல்லேன்னு போலீஸ்காரர்கிட்ட பிராது பண்ற ஆம்பிளையைப் பாருங்க!" என்று வேடிக்கையாகச் சொன்னாள். அவள் குரலில் அந்தக் கணவன் மனைவியரிடையிலிருந்த அன்பு இணக்கம் நிறைந்திருந்தது.

அவள் சொன்னதைக் கேட்டு தேவரும் குமாரசாமியும் சிரித்தார்கள்.

அவர்கள் விடைபெற்றுச் சென்றவுடன் குமாரசாமி என்னை உட்காரச் சொல்லிவிட்டு வேலைக்காரனைக் கூவி தேவர் கொண்டு வந்து வைத்திருந்த பெரிய வாழைக்காய்த்தார், மொச்சைக்காய், மிளகாய் மூட்டைகள், காய்கறிகளை யெல்லாம் உள்ளே கொண்டு போகச் சொன்னார்.

என் முகத் தோற்றத்திலிருந்து என் சிந்தனைப் போக்கை ஊகித்துக் கொண்டு குமாரசாமி, "அவள் பதினெட்டு வயதை எட்டிக் கொண்டிருந்தபோது, அதாவது ஏறக்குறைய முப்பத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் நான் செய்த உதவிக்காக அவர்கள் வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் வந்து நன்றி தெரிவித்து விட்டுப் போகிறார்கள்" என்றார்.

பிறகு அவராகவே, "என்னைத் தேடி வந்த ஒருவருக்கு நான் எவ்வித உதவியும் செய்ய விடாமல் ஓர் இக்கட்டான நிலைமை அப்போது ஏற்பட்டது" என்று தொடங்கி அந்தக் கதையையும் சொன்னார்.

கருவித் தேவருக்கு அரசமங்கலம் வட்டாரத்தில் நிறைய மதிப்பு. அவருடைய மூத்தமகள் சாந்தாயியை அரியாபுரம் ஜமீன்தார் கூத்தப் பாண்டியனுக்குக் கட்டிக் கொடுத்திருந்தார். இரண்டாவது மகள் திரௌபதியை ராமநாதபுரத்தில் கொடுத்திருந்தார். மூன்றாவது மகள்தான் அழகம்மாள்.

சாந்தாயிக்கு மணமாகி ஏழு ஆண்டுகளாகியும் குழந்தையில்லை. அதைக் காட்டிக் கூத்தப் பாண்டியன் அழகம்மாளையும் தாமே கட்டிக் கொள்ள விரும்புவதாக தேவர் காதுக்கு எட்ட விட்டார். தேவர் அதற்கு இசையவில்லை.

முதுகுளத்தூரிலிருந்து அவளைத் தங்கச் சாமிக்குப் பெண் பேச விரும்புவதாக ஒரு முன்னோடி வந்து சொன்னான். கருவித் தேவர், "அவர்களை வரச் சொல்லு" என்று சொல்லியனுப்பினார்.

அந்தச் செய்தி கூத்தப் பாண்டியனுக்கு எட்டியது. அவன் இரவோடு இரவாக அழகம்மாளைக் கடத்திக் கொண்டு போய்விட்டான். தேவர் மகளைப் பற்றிப் பதறிக் கொண்டிருந்தபோது சாந்தாயியிடமிருந்து தகவல் வந்தது.

அவள், "அழகி இவரைக் கட்டிக்கொள்ள விரும்பவில்லையென்று சொல்லி விட்டாள். இவர், 'உன் வீம்பு எத்தனை நாட்கள் தாக்குப் பிடிக்கும், பார்த்து விடுகிறேன்' என்று சொல்லி என் கண்ணெதிரிலேயே அவளை அறைக்குள் அடைத்து வைத்திருக்கிறார். என்னிடம் இவர், 'இதில் நீ குறுக்கிட்டால் இந்த வீட்டில் கொலை விழும்' என்று மிரட்டுகிறார். தங்கச்சியை உடனே மீட்க வழி செய்யுங்கள்" என்று வாய் மூலம் அனுப்பினாள்.

வலிமை காட்டி மகளை மீட்க முயன்றால் ஏதாவது விபரீதம் நேர்ந்துவிடுமோ, அல்லது ஜமீன்தார் மகளுக்கு முரட்டுத் தாலி கட்டி விடுவாரோ என்ற கவலையில் கருவித் தேவர் குமாரசாமியிடம் வந்தார்.

குமாரசாமி, "நான் யோசித்துச் சொல்லுகிறேன். உங்கள் மருமகன் செய்தது போலவே நாமும் மாற்றுக் கடத்தல் செய்து மீட்பதுதான் ஒரே வழி" என்றார்.

அவர்கள் பேசிக் கொண்டிருந்தபோது உள்ளே ஒரு ஜவான் பரபரப்புடன் ஓடி வந்து, "டி. எஸ். பி. துரை சார்!" என்றான். அவன் பின்னாலேயே



பி.எஸ்.ராமையா

ஜில்லா சூப்பிரண்டெண்டு மிஸ்டர் ஸ்டைபன்ஸ் உள்ளே வந்தார்.

மாவட்டக் கலெக்டர் மிஸ்டர் நிக்கோல்ஸனும், போலீஸ் பெரிய துரையும் கோடைக் கானலில் இருந்தார்கள் என்பது குமாரசாமிக்குத் தெரியும். ஆனால் அவர்கள் பெரிய குளத்துக்கு வரப் போவதாக எவ்வித முன்னறிக்கையுமில்லை.

குமாரசாமி சல்யூட் அடித்து அதிகாரியை வரவேற்றார். நேருக்கு நேர் சந்தித்து விட்டதால் தேவரை அவருக்கு அறிமுகம் செய்து வைக்க வேண்டியது கட்டாயமாகி விட்டது.

தேவர் பெயரைக் கேட்டவுடன் துரை, "உங்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றார்.

கருவித் தேவர் அதோடு விட்டு விட்டுப் போயிருந்தால் ஒரு வம்பும் இல்லாமல் போயிருக்கும். அவர் அவசரப்பட்டு, "என் மூத்த மகளை அரியாபுரம் ஜமீன்தாருக்குக் கட்டி வைத்திருக்கிறேன். மருமகன் வம்பு செய்து விட்டான்" என்று சொல்லிவிட்டார்.

பஞ்ச தந்திரக் கதையில் கேட்பது போல் துரை, "ஜமீன்தார் என்ன வம்பு செய்திருக்கிறார்?" என்று கேட்டார்.

அப்போதாவது தேவர், துரைக்குப் பதில் சொல்லும் பொறுப்பைக் குமாரசாமியிடம் விட்டிருக்கலாம். அவரே தமது மகள் சிறை வெறுக்கப்பட்டதைப் பற்றி விவரமாகச் சொன்னார்.

அன்று இரவு இரண்டு அதிகாரிகளும் அங்கே தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைப் போலீஸ், ரெவின்யூ இலாகாக்கள் இரண்டும் ஓடி ஓடிச் செய்தன.

இரவில் துரைகள் இருவரும் சாப்பிடப் போகு முன்தான் குமாரசாமி அவர்களைப் போய்க் கண்டு விட்டு வந்தார். அப்போது கருவித் தேவர் விவகாரம் பற்றிப் பேச்சே வரவில்லை.

அவர்கள் தங்கியிருந்த பங்களாவில் ஏவல் காவலுக்காக நின்ற ஜவான் இரவு பன்னிரண்டு மணிக்கு வந்து சொன்னதைக் கேட்டுக் குமாரசாமி திகைத்துப் போனார்.

சாப்பிடும் போது இருவரும் என்ன பேசினார்களோ? வடகரை ஜமீன்தார் அனுப்பி வைத்திருந்த சீமைப் புட்டிச் சரக்கு வேலை செய்திருக்க வேண்டும். சாப்பாடு முடிந்தவுடன் கலெக்டர் துரை கருவித் தேவரை அழைத்து வர உத்தரவிட்டார்.

அப்போதாவது கருவித் தேவர், "இது என் குடும்ப விவகாரம். இதில் போலீஸ் அதிகார



முறையில் தலையிடுவதை நான் விரும்பவில்லை. அமைதியான முறையில் தான் இந்தச் சிக்கலை விடுவித்துக் கொள்ள விரும்புகிறேன்'' என்று அழுத்திச் சொல்லியிருந்தால் துரைகளிருவரும் அப்போதைக்கு மனத்தாங்கல் பட்டதோடு தீர்ந்து போயிருக்கும்.

அவர்கள் என்ன சொல்லி மிரட்டினார்களோ, அல்லது என்ன உறுதிமொழி கொடுத்தார்களோ, ஜமீன்தார் வீட்டைச் சோதனை போட்டுப் பெண்ணை மீட்க அதிகார உத்தரவுடன் ஒரு போலீஸ் கோஷ்டியை அனுப்புவதாகச் சொல்லி தேவரை அதற்கு இசைய வைத்து விட்டார்கள்.

அடுத்த நாள் காலையில் குமாரசாமி போன போது சூப்பிரண்டண்டு, ''அந்த ஜமீன்தாரைக் கொஞ்சம் மட்டம் தட்டிவைக்க வேண்டுமென்று நான் கருதுகிறேன். ஆகையால் கருளித் தேவர் மகளை மீட்க இன்ஸ்பெக்டர் வெங்கிடசாமி தலைமையில் ஒரு போலீஸ் படையை அனுப்பப் போகிறேன். நானும் கலெக்டரும் அரியாபுரத்துக்கு அருகில்தான் முகாமில் இருப்போம். அந்த விவகாரத்தைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம்'' என்று சொன்னார்.

அதாவது, 'இதில் தலையிடாதே; நேரடி நடவடிக்கைக்கு உத்தரவிட்டு விட்டேன்' என்று அவர் மறைமுகமாகச் சொல்லி விட்டார்.

அப்போதுதான் குமாரசாமிக்கு அது இன்ஸ்பெக்டர் வெங்கிடசாமியின் கைவேலை என்பது தெரிந்தது. அவர்கள் மேற்கொண்ட வழியில் கருளித் தேவர் தவிர்க்க விரும்பிய கசப்பும், உறவு முறிவும் நேர்ந்துவிடப் போகின்றனவே என்ற எண்ணம்தான் அவர் மனத்தை அலைத்தது.

அரியாபுரம் ஜமீன் 'அரண்மனை' என்ற வீடு ஆற்றின் கரைமேல் அமைந்திருந்தது. வீட்டின் புறக்கடை வாயிலுக்கும், ஆற்றுப் படுகைக்கும் இடையிலிருந்த பகுதியில் பெரிய மாட்டுக் கொட்டில் இருந்தது.

சுவர் வளைவுக்கு அப்பால் கிழக்கே இன்னொரு சிறிய வீடும், அரண்மனை நெற்களஞ்சியமும் இருந்தன. களஞ்சியத்தின் பின்னும் வைக்கோல் போர்களும், சோளத் தட்டுப் போர்களும் அடிக்கப்பட்டிருந்தன.

'கருளித் தேவர் மகளை மீட்கப் போலீஸ் உதவியை நாடி விட்டார்; ஜில்லா பெரிய துரையே உத்தரவிட்டு அதற்காக ஒரு போலீஸ் படை வருகிறது' என்ற செய்தி கூத்தப் பாண்டியனுக்கு முன்கூட்டியே எட்டி விட்டது. அவர், ''ராணுவமே வேண்டுமானாலும் வரட்டும். அவளை விடப் போறதில்லை'' என்று முரண்டு பிடித்து நிமிர்ந்து விட்டார். போலீஸார் முறையாக உத்தரவுடன் வருகிறார்கள், ஆகையால் அவர்களை எதிர்ப்பது தவறு விளைவு விபரீதமாகிவிடும் என்று அவருக்கு எடுத்துச் சொல்ல ஆளில்லை.

அவர் மனைவி சாந்தாயியிடம், ''உங்கள் அப்பன் போலீஸைக் கூட்டிக் கொண்டு வருகிறாராம். உனக்குக் கணவன் உயிரோடு வேண்டுமானால் உன் தங்கச்சியிடம் பேசி அவளை இசைய வைத்துவிடு. இப்போதே ஒரு தாலியைக் கட்டி விடுகிறேன். என் மனைவியை என்னிடமிருந்து மீட்க யாருக்கும் அதிகாரமில்லை. அல்லது அவள் 'நான் சம்மதித்துத்தான் இங்கே வந்திருக்கிறேன்' என்று சொல்லிவிட்டால் போதும். என்னை யாரும் ஒன்றும் செய்துவிட முடியாது'' என்றார்.

பாவம்! அவள் என்ன செய்வாள்? கணவனைப் பெரிய ஆபத்து சூழ்ந்து வருகிறது. அவரோ முரட்டு வீம்புக்காரர். அவள் நடுநடுங்கிப் போய்த் தங்கையிடம் ஓடினாள்.

''போலீஸார் வந்தால் அவர்களிடம் நானாகச் சம்மதித்துத்தான் என் அக்காள் வீட்டில் வந்து தங்கியிருக்கிறேன் என்று மட்டுமாவது சொல்லிவிடு. அவர்கள் போனபிறகு இவரிடம் பேசி உன்னை அப்பா வீட்டுக்குத் திருப்பி அனுப்ப நான் பொறுப்பு'' என்று சொல்லிக் கெஞ்சினாள் சாந்தாயி.

அழகம்மாள், ''இத்தனை வருசம் பழகியும் உன் புருசனைப்பத்தி இப்படிப் பேசறியே. என்னைக் கைதி களவாணி மாதிரிக் கொணர்ந்து பூட்டி வைச்சிருக்கிறவருக்காக நான் ஒரு விரலைக்கூட அசைக்க மாட்டேன்'' என்று சொல்லி விட்டாள்.

சாந்தாயி பதறிப் போய் ஓடித் தன் கணவன் காலில் விழுந்து, ''அவர்கள் வந்தால் ஒன்றும் சொல்லாமல் அவளை ஒப்படைத்து விடுங்கள். உலகத்திலே இவள் ஒருத்திதானா பெண்? நானே தேடி உங்களுக்கு ஒரு நல்ல பெண்ணைக் கட்டி வைக்கிறேன். வம்புக்குத் தலை கொடுக்காதீர்கள்'' என்று கதறினாள்.

கூத்தப் பாண்டியன், ''அடச்சீ! எங்கேயாவது ஒரு மூலையிலே போய் முடங்கிக் கிட. உங்கள் அப்பனுக்குப் பயந்து அவளை அவர் கையிலே திருப்பி அனுப்புகிற பேடிப்பயல் என்று நினைத்து விட்டாயா என்னை?'' என்று சீறித் துரத்தினார்.

வேட்டைக்காக என்று லைசென்ஸ் வாங்கிய துப்பாக்கிகள் மூன்று இருந்தன அவரிடம். அவற்றை எடுத்துக் குண்டு போட்டுக் கெட்டித்தார். அவருடைய அடிபிடிச் சண்டியர் வீரப்பன், சின்னப் பையன் இருவரிடமும் ஒவ்வொன்றைக் கொடுத்தார். சின்னப் பையனை ஆற்றங்கரை வாசலில் நிறுத்தி, ''யாராவது உள்ளே புக முயன்றால் தயங்காமல் சுட்டுவிடு'' என்று உத்தரவிட்டார்.

முன்புற வாசல் இரும்புக் கதவைப் பூட்டி வீரப்பனை அதன் அருகில் துப்பாக்கியுடன் நிறுத்தி வைத்தார். வீட்டின் முன்னால் ஒரு நாற்காலியை எடுத்துப் போடச் சொல்லி அதில் அவர் அமர்ந்தார்.

காலை ஒன்பதரை மணிக்கு இன்ஸ்பெக்டர் வெங்கிடசாமி ஒரு சப்-இன்ஸ்பெக்டர், முப்பது ஜவான்களுடன் வந்து சேர்ந்தார். முன் ஏற்பாட்டின்படி ஜவான்கள் பிரிந்து சென்று வீட்டைச் சுற்றி வளைத்துக் கொண்டார்கள். அவருடன் எட்டு ஜவான்கள் மட்டும் நின்றார்கள்.

வெங்கிடசாமி இரும்புக் கம்பிக் கதவருகில் போய் உள்ளே நின்ற வீரப்பனிடம், ''அரசமங்கலம் கருளித் தேவர் மகள் அழகம்மாளை அவள் விருப்பத்துக்கு மாறாகக் கடத்தி வந்து ஜமீன்தார் இங்கே வைத்திருப்பதாகப் பிராது கொடுத்திருக்கிறார். அரண்மனையைச்



உங்கள்
கேசத்திற்கும்
தலைக்கும்
ஆரோக்கியத்தையும்
போஷாக்கையும் அளியுங்கள்!



கால்கேட் ஹேர் டானிக் லெனோலின் என்ற ஓர் அற்புதமான எண்ணெயுடன் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இது தலையில் இயற்கையாக உண்டாகும் எண்ணெய்களை வற்றாது புதிப்பித்து— கேசத்தை ஆரோக்கியத்துடனும், சேர்த்தியாகவும் இருக்க உதவுகிறது.




புதிய கால்கேட்
ஹேர் டானிக்
லெனோலின் கலந்தது



ரூ. 5/-
சிறந்த சேமிப்பிற்கு
வழி காட்டும்
திறவு
கோலாகும்

பற்றாக்குறையேற்படும் காலே சமாளிக்க இன்றே சேமிக்க ஆரம்பியுங்கள். மெர்கண்டைல் பாங்கில் ஒரு சேவிங்ஸ் அக்கவுண்டு வைத்துக்கொள்ள 5 ரூபாய்களே போதுமானவை. சிறுகச் சிறுக உங்கள் சேமிப்பு பெருகட்டும். உங்கள் பணத்திற்கு 2½ சத விதம் வட்டி உண்டு.

வட்டி விதம் 2½%



மெர்கண்டைல் பாங்க் லிமிடெட்,
16, முதல் லேன் பீச்,
மற்றும்
198, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, சென்னை.

# 'அனஸின்'

இப்பொழுது சுகாதார முறையில் ஸீலிட்ட புதுமாதிரியான ஸெல்லோபேன் பாக்கட்டுகளில் கிடைக்கிறது

**4 மருந்துகள்**

அடங்கியுள்ள

**அனஸின் மிகச் சிறந்தது**








புதுமாதிரியாக சுகாதார முறையில் ஸெல்லோபேன் பாக்கெட்டுகளில் கிடைக்கும் 'அனஸின்' ஒரு டாக்டர் குறித்துக் கொடுக்கும் பாதுகாப்பான மருந்துக்கு ஒப்பாக, இதில் விஞ்ஞான முறையில் நான்கு மருந்துகள் ஒன்றுகலந்துள்ளதால், வலிகளினின்று அதிவிரைவில் பூரண நிவாரணம் அளிக்கிறது. 'அனஸின்' (1) தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, நரம்பு வலி ஆகியவற்றிற்கு அதிவிரைவில் நிவாரணம் அளிக்கிறது. (2) படபடப்பைப் போக்கி, சாந்தமளிக்கிறது—இதனுடன் இதைப்போன்ற பலனைப் பெறுவீர்கள். (3) சோர்வை விரட்டுகிறது. (4) ஜுரத்தைத் தணிக்கிறது. நான்கு மருந்துகள் அடங்கியுள்ள 'அனஸின்' வலியினின்று நிவாரணம் பெற மிகவும் சிறந்தது. வீட்டில் எப்பொழுதும் 'அனஸின்' வைத்திருங்கள்.

32 வில்லைகள் அடங்கிய, மோசடிக்கு இடங்கொடாதவாறு அடைக்கப்பட்ட சீசாக்களிலும் கிடைக்கிறது.

*Registered User:* GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD.

2,41-TAM


---




குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவருக்கும் நல்லது




கிருமி நாசினியான வேப்ப எண்ணெயிலிருந்து தயாரிக்கப்பட்டதும், மனோகரமான மணம் தருவதுமான மார்கோ மிக மென்மைய சருமமுடையவர்களுக்கும் உத்தமமானது. மார்கோ சோப்பின் இளகும் சத்து நிறைந்த நுரை சருமத்தின் துவாரங்களில் ஆழமாகப் புகுந்து சென்று, சருமத்திலுள்ள எல்லா அழுக்குகளையும் போக்கி சுத்தப்படுத்துகிறது. இதன் தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் சோதிக்கப்பட்டுள்ள மார்கோ சோப் உங்களுக்கு அதிக சுகத்தையும், நாள்முழுதும் அதிகத் தூய்மை உணர்ச்சியையும் அளிக்கிறது.

# மார்கோ சோப்

குடும்பத்துக்கு உத்தமமான சோப்

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிட். கல்கத்தா-29

தென்னிந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

சோதனை போடக் கலெக்டர் உத்தரவுடன் வந்திருக்கிறேன். கதவைத் திற" என்று உத்தரவிட்டார்.

வீரப்பன் அவருக்குப் பதில் சொல்லுமுன் ஜமீன்தார் நாற்காலியில் உட்கார்ந்தபடியே, "தெருவிலே போகிற எந்த நாயாவது வந்து என்மேல் பொய்யாக முறையிட்டால் கூடப் போலீஸார் என் அரண்மனையைச் சோதனை போட வந்து விடுவார்களோ? நீங்கள் சொல்லும் பெண் இங்கே இல்லை. ஆகையால் யாரையும் உள்ளே நுழைய விடுவதற்கில்லை" என்று கூறினார்.

வெங்கிடசாமி, "அவள் இங்கே இல்லையென்பதை நானே வந்து பார்த்துக் கொள்ளுகிறேன். கதவைத் திறக்கச் சொல்லுங்கள்" என்று கோரினார்.

கூத்தப் பாண்டியன், "டேய்! வீரப்பா! யாராவது உள்ளே வர முயன்றால் கொஞ்சம் கூடத் தயங்காமல் சுட்டுவிடு" என்று சொல்லிவிட்டு முகத்தை அப்பால் திருப்பிக் கொண்டார்.

வெங்கிடசாமியின் நெஞ்சில் சூடு தட்டி முறுக்கேறியது. அவர், "ஜமீன்தார் ஸார்! உங்களுக்குப் பத்து நிமிஷம் அவகாசம் கொடுக்கிறேன். அதற்குள் வாசலைத் திறந்து விடாவிட்டால் கதவை உடைத்து உள்ளே புகும்படி உத்தரவிடுவேன். அப்புறம் விளைவதற்கு நீங்கள்தான் பொறுப்பு" என்று சொல்லிவிட்டு நின்றார்.

கீழ்ப்புறத்து வீட்டின்முன் சாணம் தெளித்த தரையில் புழுக்கிய நெல்லை உலர்த்தும் வேலை தொடங்கியது. இரண்டு ஆட்கள் குறுக்குக் கொம்பு போட்டுத் தோளில் தாங்கி நெல் புழுக்கிய பெரிய அண்டா ஒன்றைக் கொண்டு வந்து வைத்தார்கள். கிழவன் முனியாண்டித் தேவன் அங்கே நின்று அவர்களிடம் வேலை வாங்கிக் கொண்டிருந்தான்.

ஆட்கள் இருவரும் அண்டாவைச் சாய்த்து நெல்லைத் தரையில் கொட்டச் சித்தமானார்கள். முனியாண்டி, "ஏன்டா வாசலைக் கூட்டிச் சுத்தம் செய்திருக்கான்னுகூடப் பார்க்கமாட்டீங்க? பொறுங்கடா" என்று அவர்களை அதட்டிவிட்டு வீட்டின் புறம் பார்த்து, "ஏ பிள்ளே! முனியம்மா! அந்த மாறை எடுத்தாந்து முன்னே வாசலைக் கூட்டு, கழுதே!" என்று கூவினான்.

அவனுடைய பேத்தி முனியம்மாள் துடைப்பத்துடன் ஓடிவந்து வாசலைக் கூட்டத் தொடங்கினாள். அதனால் எழுந்த தூசி நெடி ஜமீன்தார் மூக்கில் போய்த் தாக்கியது. அவர் எரிச்சலுடன், "ஏய்! முனியாண்டி!" என்று அதட்டிக் கொண்டு நாற்காலியிலிருந்து எழுந்தார்.

அதே சமயம் வெங்கிடசாமியின் உத்தரவின்படி இரண்டு ஜவான்கள் துப்பாக்கிகளை வானத்தை நோக்கிப் பிடித்துச் சுட்டார்கள். அந்த வெடிச் சத்தத்தைக் கேட்டு ஜமீன்தாரும் மற்றவர்களும் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தார்கள்.

அந்த வெடி ஒலியைத் தொடர்ந்து வீட்டுக்குள்ளிருந்து சாந்தாயி வீரிட்டு அலறிய குரல் வந்தது. அதே சமயம் பின் தோட்டத்திலிருந்து, "தீ! தீ! வீட்டிலே தீப்பிடிச்சுக்கிட்டுது" என்று ஒரு கூக்குரலும் எழுந்தது.

ஜமீன்தார் திடுக்கிட்டு வீட்டின்புறம் திரும்பினார். வீட்டின் பின்னால் மாட்டுக் கொட்டிலிலிருந்து புகை அடர்த்தியாக எழுந்து படர்ந்தது. வெளி வாசலுக்கு அப்பால் நின்ற வெங்கிடசாமியும் புகை எழுவதைக் கண்டார்.

முனியாண்டி, "ராணியம்மா!" என்று அலறிக் கூவிக்கொண்டு பெரிய வீட்டுக்குள் பாய்ந்தான். முனியம்மாள் கையில் துடைப்பத்துடன் வீட்டுத் திண்ணைத் தூணோடு தூணாக நின்றாள். மற்ற இருவரும் சின்ன வீட்டுக்குள் ஓடினார்கள்.

ஜமீன்தார், "வீரப்பா! யாரையும் உள்ளே விடாதே" என்று கூவிக் கட்டளையிட்டுவிட்டு வீட்டுக்குள் விரைந்தார்.

அவர் உள்ளே போனவுடன் வெங்கிடசாமி பக்கத்திலிருந்த ஜவானிடமிருந்த துப்பாக்கியை வாங்கி அதைக் கதவின் கம்பிகளின் வழியாக வீரப்பன்மேல் குறி வைத்துப் பிடித்து, "டேய்! துப்பாக்கியைக் கீழே போடு. இல்லாவிட்டால் சுட்டுத் தள்ளி விடுவேன்" என்று அதட்டினார்.

வீரப்பன் அதை எதிர்பார்க்கவில்லை. ஒன்றன்பின் ஒன்றாக வந்து தாக்கிய துப்பாக்கி வெடி ஒலி, பெண் பிள்ளையின் அலறல், தீக் கூக்குரல் எல்லாவற்றையும் கேட்டு அவன் குழம்பியிருந்த நிலையில் வெங்கிடசாமி மின் வெட்டுவதுபோலத் துப்பாக்கியைத் தன் முன் நீட்டியவுடன் திகைத்து விட்டான்.

துப்பாக்கியை அவன்புறம் நீட்டியபோதே வெங்கிடசாமி ஜவான்களுக்கும் சைகை காட்டினார். அவருடன் நின்ற எட்டு ஜவான்களும் சப்-இன்ஸ்பெக்டரும் சட்டென்று பாய்ந்து சுவரின்மேல் ஏறி உள்ளே குதித்தார்கள். வீரப்பன் அப்படி இப்படித் திரும்பிப் பார்க்கக்கூட நேரமில்லை. இரண்டு ஜவான்கள் பின்னாலிருந்து வந்து அவன் கைகளைப் பலமாகப் பற்றிக் கொண்டார்கள். இன்னொருவன் பாய்ந்து அவனிடமிருந்த துப்பாக்கியைப் பறித்துக் கொண்டான்.

அதே சமயம் வீட்டுக்குள்ளிருந்து சாந்தாயியும் வேலைக்காரிப் பெண்களும் அலறிக் கொண்டு வெளியே ஓடி வந்தார்கள். முனியாண்டிதான் எல்லோருக்கும் முன்னால் ஓடி வந்தான். அவன் கீழ்ப்புறத்து வாசலுக்கு ஓடி அங்கிருந்த மரக் கதவைத் திறந்தான்.

கையில் துடைப்பத்துடன் நின்ற முனியம்மாளும் அவளுக்குப் பின்னால் இரண்டு பணிப் பெண்களும் அந்த வாசல் வழி வெளியே பாய்ந்து ஓடினார்கள்.

அந்தக் கதவுக்கு வெளியிலும் ஒரு ஜவான் நின்றிருந்தான். உள்ளேயிருந்து வந்த கூச்சல்கள் கூக்குரல்களைக் கேட்டு அவன் சுவரில் தொற்றி ஏறி எட்டிப் பார்த்தான். முன்புறத்தில் ஜவான்கள் உள்ளே குதித்ததைக் கண்டு அவனும் மதிலேறிக் குதித்தான். வீட்டுக்குள்ளிருந்து ஓடி வந்த பெண்களைக் கண்டு அவன் அப்படியே நின்று விட்டான்.

முனியாண்டி திறந்து விட்ட கதவின் வழி பெண்கள் வெளியே ஓடுவதைக் கண்டவுடன், அவன் அந்த வாசலுக்கு ஓடிக் கதவை இழுத்து அடைத்து மற்றவர்கள் போக முடி-

யாமல் மறித்துக் கொண்டு நின்றான். சாந்தாயியும், மற்றவர்களும் சின்ன வீட்டு வாசலில் கூட்டமாக நின்றார்கள்.

மாட்டுக் கொட்டில் புறத்திலிருந்து துப்பாக்கி வெடித்த ஒலி வந்தது. இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு ஒரு ஜவான் இரண்டு துப்பாக்கிகளையும் தூக்கி வர, சப்-இன்ஸ்பெக்டர் தலைமையில் நான்கு பேர்கள் ஜமீன்தாரையும், சின்னப் பையனையும் நடத்திக் கொண்டு வெளியே வந்தார்கள். அவர்களில் ஒருவரிடமிருந்த சாவியை எடுத்துக் கொண்டு ஓடி இரும்புக் கதவைத் திறந்து விட்டான். வெங்கிடசாமியும் இன்னும் சில ஜவான்களும் உள்ளே பாய்ந்து வந்தார்கள்.

வெங்கிடசாமி, சப் - இன்ஸ்பெக்டரிடம், ''இவர்கள் மூவரையும் அப்படித் தனியே நிறுத்தி வையுங்கள். ஏதாவது வம்பு செய்ய முயன்றால் தயங்காமல் கையில் காலில் சுட்டுத் தள்ளி விடுங்கள்'' என்று உத்தரவிட்டு, ''நாலு பேர் என்னுடன் வாருங்கள். மற்றவர்கள் போய்த் தீயை அணையுங்கள்'' என்று சொல்லி, பெண்பிள்ளைகள் கூட்டமாக நின்ற இடத்துக்கு ஓடினார்.

சாந்தாயியை நடுவில் விட்டு மற்றப் பெண்கள் அவளைச் சூழ்ந்துகொண்டு நின்றார்கள். வெங்கிடசாமி கூட்டத்தைப் பார்த்துப் பொதுவாக, ''இதிலே யார் அழகம்மாள்?'' என்று கேட்டார் அதிகாரக் குரலில்.

பணிப் பெண்கள் எல்லாரும் சாந்தாயியைப் பார்த்தார்கள். வெங்கிடசாமி அதைத் தவறாகப் புரிந்து கொண்டு அவளிடம், ''நீதான் அழகம்மாளா?'' என்றார்.

முனியாண்டி முன்னால் வந்து, ''அவங்க தான் ராணியம்மா எசமான்!'' என்று சொல்லிக் கும்பிட்டான்.

சாந்தாயி, ''முனியாண்டி! அப்படி இங்கே யாருமில்லையென்று சொல்லு'' என்று கூறினாள்.

கீழ்ப்புற வாசலைக் காத்து நின்ற ஜவான் முன்னால் வந்து சல்யூட் அடித்து, ''சார்! இங்கே நடந்த கூச்சல் கலவரத்தில் இந்தக் கிழவன் கதவைத் திறந்து விட்டான். மூன்று பெண்கள் வெளியே ஓடி விட்டார்கள். நான் மற்றவர்களை யெல்லாம் மறித்து நிறுத்தினேன்'' என்றான்.

வெங்கிடசாமி, ''அவர்கள் ஓடும் வரையில் நீ என்ன ஐயா செய்துகொண்டிருந்தாய்? கையாலாகாத கபோதிகள்'' என்று அவன் மேல் சீறி விட்டு முனியாண்டியிடம், ''என்னடா கூழைக் கும்பிடு போடுகிறாய்? போய் மரியாதையாக அந்த மூன்று பெண்களையும் இங்கே இழுத்து வா. தோலை உரித்து விடுவேன். ஏய்! முந்நூற்று ஆறு! நீ இவனுடன் போய் அவர்களைக் கொண்டு வா. உம், ஓடு'' என்று சொல்லி முனியாண்டியின் கன்னத்தில் பளாரென்று அறைந்தார்.

கதவுக் காவல் ஜவானிடம் ''ஏனய்யா, தூண் மாதிரி நிற்கிறாய்? ஒரு குஞ்சு வெளியே போகக் கூடாது. போ அங்கே'' என்று சொல்லி விட்டு மூன்று ஜவான்களுடன் வீட்டுக்குள் விரைந்தார்.

மாட்டுக் கொட்டிலின் மேற்குப் பக்கத்தில் தான் தீப் பிடித்திருந்தது. கொட்டிலிலிருந்த கன்றுகளையும் வண்டி மாடுகளையும் ஆட்கள் அவிழ்த்து ஆற்றுக்குள் ஓட்டி விட்டார்கள். சிலர் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துப் புகை வந்த பகுதியில் கொண்டு போய்க் கொட்டினார்கள். இருவர் கொட்டிலின் மேலே பாய்ந்து ஏறிக் கூரையைப் பிய்த்து இழுத்துக் கீழே தள்ளினார்கள். போலீஸ்காரர்களும் உதவிக்கு வந்து சேர்ந்தார்கள்.

வெங்கிடசாமியும் ஜவான்களும் இரண்டு வீடுகளிலும் அறை அறையாகப் புகுந்து தேடினார்கள். அழகம்மாள் வீட்டுக்குள் இல்லை. நெல் குதிர்கள், மூட்டைகளைக்கூடக் குடைந்து பார்த்து விட்டார்கள். இன்னொரு முறை நன்றாகத் தேடச் சொல்லி விட்டு வெளியே வந்தார்.

முனியாண்டி பேத்தி முனியம்மாளையும் மற்ற இரண்டு வேலைக்காரப் பெண்களையும் கொண்டு வந்து நிறுத்தியிருந்தான். வெங்கிடசாமியிடம் முனியம்மா, ''துப்பாக்கி வெடிச்சாங்க. வீட்டுக்குள்ளாற தீப் பிடிச்சுட்டுது. போலீஸ் குபு குபுன்னு மதிலேறிக் குதிச்சு வந்தாங்க. நான் பயந்து ஓடிட்டேன்'' என்றாள். மற்ற இருவரும் அதையேதான் சொன்னார்கள்.

வெங்கிடசாமி மற்றொரு முறை அந்தப் பெண்களின் கூட்டத்தில், ''அழகம்மாள் யார்? அவள் எங்கே?'' என்று கேள்விகள் கேட்டு மிரட்டினார்.

ஒரு தகவலும் கிடைக்கவில்லை. வீட்டுக்குள் தேடியவர்கள் வெளியே வந்து, ''ஓர் அங்குலம் விடாமல் தேடிவிட்டோம். வீட்டுக்குள் யாருமில்லை ஸார்!'' என்று தெரிவித்தார்கள்.

அப்போதுதான் வெங்கிடசாமிக்குப் பகீர் என்றது. அழகம்மாள் அந்த வீட்டில் இல்லாமலே தவறான நடவடிக்கை எடுக்கப்பட்டு விட்டதோ என்ற ஐயம் எழுந்தது, அவர் மனத்தில். அவர் தமது கலக்கத்தை மறைத்து ஜமீன்தாரிடம் போய், ''உங்கள் மைத்துனியைக் கடத்தி வந்து வைத்திருக்கிறீர்கள். எங்கே அவள்?'' என்று மிரட்டினார்.

கூத்தப்பாண்டியன் நிலைமையை ஊகித்துக் கொண்டார்.

சாந்தாயிதான் ஏதோ சாகசம் செய்து விட்டாள் என்ற ஊகத்தில் அவருக்குத் தெம்பு வந்து விட்டது. அவர் மீசையை முறுக்கி விட்டு, ''அவள் என் வீட்டில் இல்லையென்றேன். மதிலேறிக் குதித்து என் அரண்மனைக்குள் புகுந்தீர்கள். எங்கள் குடும்பத்திலிருக்கும் மனத்தாங்கலைப் பயன்படுத்தி, என் மாமனையே தூண்டி விட்டுப் பொய்ப் பிராது எழுதி வாங்கிப் போலீஸார் என் வீட்டில் புகுந்தார்கள். ஜமீன்தாரிணியை மரியாதைக் குறைவாக நடத்தினார்கள், என்னையும் கைதியைப்போல் நடத்தி அவமானப்படுத்தினார்கள் என்று கவர்னருக்கு மனு அனுப்பப் போகிறேன். அவர் உங்களுக்குப் பதில் சொல்லுவார்'' என்றார்.

வெங்கிடசாமியின் மனம் கடகடத்துப் போய் விட்டது. இருந்தும் அவர் வீர முகம் காட்டி, ''சர்க்கார் அதிகாரியைக் கடமையைச் செய்ய விடாமல் தடுத்தது. துப்பாக்கியைக் காட்டி மிரட்டியது ஆகிய குற்றங்களுக்

காக இவர்கள் இருவரையும் கைது செய்கிறேன்'' என்று கூறி வீரப்பனையும் சின்னப் பையனையும் உடன் அழைத்துக் கொண்டு புறப்பட்டார்.

உசிலம்பட்டியில் முகாம் போட்டிருந்த கலெக்டரும், சூப்பிரண்டண்டும் வெங்கிடசாமி வந்து சொன்னதைக் கேட்டுத் திகைத்துப் போய் விட்டார்கள். அவர்கள் கருவித் தேவரை அழைத்து, ''பொய்ப் பிராது கொடுத்ததற்காக உங்கள் மேல் நடவடிக்கை எடுத்தாலென்ன?'' என்றார்கள்.

ஆபத்து தம் மேலேயே திரும்பிப் பாயப் பார்க்கிறது என்று கண்ட கருவித்தேவரும் திமிர்ந்துவிட்டார். ''நீங்கள்தானே துரைகளே என்னைக் கூப்பிட்டு அனுப்பி அப்படி ஒரு பிராது எழுதச் சொல்லி வற்புறுத்தினீர்கள்?'' என்றார்.

கடைசியில் குமாரசாமிதான் தலையிட்டு அந்தச் சிக்கலைத் தீர்க்க வேண்டியதாயிற்று. அவர் மூன்று தரப்பாருக்கும் சொல்ல வேண்டிய பக்குவத்தில் சொல்லி, அந்த விவகாரத்தை மேலே வளரவிடாமல் அமுக்கி விட்டார்.

அவரைக் கண்டவுடன் கருவித் தேவர் ''வெள்ளைக்காரர்கள் பேச்சைக் கேட்டுக் கெட்டேன். அந்த முரடன் மகளை எங்கே கொண்டு போய்ப் பதுக்கி விட்டானோ, தெரியவில்லை'' என்று புலம்பினார்.

குமாரசாமி, ''அழகம்மாள் இப்போது உங்கள் வீட்டில் இருக்கிறாள். இந்த உண்மை இங்கே யாருக்கும் தெரிய வேண்டாம். நான் சொல்லுவதற்கெல்லாம் சரி சரியென்று தலையை ஆட்டி விட்டுப் போய்ச் சேருங்கள்'' என்றார்.

இந்த இடத்தில் நான் குறுக்கிட்டு, ''ஸார்! புரிந்து விட்டது. சாந்தாயிதான் ஏதோ தந்திரம் செய்து முனியம்மாளுடன் அந்தப் பெண்ணை வெளியே அனுப்பி விட்டாள்!'' என்று உண்மையை ஊகித்துவிட்ட பெருமைக் குரலில் சொன்னேன்.

குமாரசாமி சிரித்து, ''முனியம்மாள்தான் அழகம்மாள்'' என்றார்.

நான் திகைப்புடன், ''அவளா ஜமீன்தாருக்கு எதிரில் மாறு பிடித்து வாசலைக் கூட்டியிருக்கிறாள்!'' என்றேன்.

அவர், ''ஜமீன்தாரின் அப்போதைய மனநிலையில், தலைமயிர் பரட்டை பறக்க ஓர் அழுக்குப் பிடித்த கிழிசல் சேலையை உடுத்திக் கையிலே துடைப்பம் பிடித்து நிற்பவள்தான் ஒரு ஜமீன்தாரையே மணக்க மறுக்கும் அழகம்மாளாக இருக்கும் என்ற ஐயம் தோன்றியிருக்குமா?'' என்றார்.

நான், ''ஒரே தந்திரத்தில் சாந்தாயி தன் தங்கையையும், கணவரையும் இரண்டு வகை இக்கட்டுக்களிலிருந்து காப்பாற்றித் தப்புவித்து விட்டாள் இல்லையா?'' என்றேன்.

குமாரசாமி மறுபடியும் சிரித்து, ''போலீசார் அழகம்மாளை ஜமீன் வீட்டில் கண்டுபிடித்திருந்தால் அதிகாரிகள் நிச்சயமாகக் கூத்தப்பாண்டியன் மேல் கடுமையான நடவடிக்கை எடுத்திருப்பார்கள். ஜமீன்தார்மேல் அவ்வளவு காட்டம் இருந்தது அவர்களுக்கு. என் உதவியை நாடி வந்த கருவித் தேவர் குடும்பத்தில் ஆறாத மனப்புண் பட்டு விடக் கூடாதே என்ற கவலையில் நான் அதில் தலையிட முடிவு செய்தேன். அபாயகரமான முடிவுதான்!

''அன்று காலையிலேயே நான் போய் முனியாண்டியைப் பிடித்தேன். அவனுடைய ஒத்துழைப்பினால்தான் நான் என் திட்டத்தைக் கொண்டு செலுத்த முடிந்தது. சோளத் தட்டுப் படப்பிலிருந்து ஒரு கட்டுக் கட்டி என் தலைமேல் வைத்து அவன் என்னை அரண்மனைக்குள் அழைத்துச் சென்றான். ஜமீன்தார் துப்பாக்கியை எடுத்து வீரப்பனையும் சின்னப் பையனையும் காவலுக்கு நிறுத்தியபோதுதான் அதை எப்படி நடத்தி வைப்பது என்ற யோசனை எனக்குத் தோன்றியது.

''பின்புறத் தோட்டத்திலிருந்த சின்னப் பையனுக்கு என்னை நன்றாகத் தெரியும். அவனை நான் ஒரு தடவை அநியாயமாகச் சிறைக்குப் போகாமல் காப்பாற்றினேன். போலீஸாரால் கைது செய்யப்பட்டு ஜமீன்தார் சிறைக்குப் போவது நல்லதா அல்லது தீ பரவி வீட்டுக்கே சேதம் விளைவது நல்லதா என்று அவனிடம் கேட்டேன். அவன் மறு பேச்சுப் பேசாமல் மாட்டுக் கொட்டிலில் சோளத்தட்டுக் குவியலில் தீ மூட்டி விட்டான்.

''முனியாண்டி அழகம்மாளிடம் பேசி அவள் என்ன செய்ய வேண்டுமென்பதை விளக்கிச் சொல்லி விட்டுத் தன் பேத்தி முனியம்மாளை வீட்டுக்கு விரட்டி விட்டான். ஒரு பழைய கிழிந்த சேலையையும் எடுத்துப் போய் அழகம்மாளிடம் கொடுத்து வைத்தான்.

''நெல் புழுக்கிய அண்டாவைத் தூக்கிய இருவரில் நான் ஒருவன். முனியாண்டி மிக மிகத் திறமையாக நாடகம் ஆடினான். அதை விட மிகுந்த துணிச்சலுடன் அழகம்மாள் ஆடினாள்.

''அந்த விவகாரத்தின் சூடு சிறிது ஆறியவுடன் நான் நேரில் போய்க் கூத்தப்பாண்டியனிடம் பேசினேன். சாந்தாயிதான் தங்கையைக் கடத்தி அனுப்பி விட்டாளென்று அவர் நம்பினார். அவர்தான் அவளை வேறு எங்கேயோ கொண்டு போய்ப் பதுக்கி விட்டதாக அவள் நம்பினாள். அதன் விளைவாக இருவரிடையிலும் மனத்தாங்கல் முற்றிக் கொண்டிருந்தது. நான் போய்த்தான் அதைத் தீர்க்க வேண்டியிருந்தது. ஜமீன்தார், 'சர்க்கார் மனிதராகிவிட்ட மாமன் முகத்தில் விழிக்கவே விரும்பவில்லை' என்று சொல்லி விட்டார். சாந்தாயியை மட்டும்தான் அழகம்மாள் கலியாணத்துக்கு அவர் அனுப்பி வைத்தார்.

''வெள்ளைக்கார அதிகாரிகள் இருவரும் கமுக்கமாக ஒதுங்கிப் போய் விட்டார்கள். வெங்கிடசாமி மட்டும் கருவித்தேவரிடம், 'உங்கள் மகள் எங்கே யிருந்தாள்? எப்படித் திரும்பி வந்தாள்?' என்று சலசலத்தார். தேவர், 'என் மருமகனை அழிக்கச் சூழ்ச்சி செய்து நீங்கள் என்னை வற்புறுத்தி மிரட்டிப் பொய்ப்பிராது எழுதி வாங்கியதை அம்பலப் படுத்த வேண்டுமா?' என்று கேட்டு விரட்டி விட்டார்'' என்று சொல்லி முடித்தார்.

# இதைத்
# தவிர்க்க
# முடியாதா?






## முடியும்.

சரியான சமயத்தில் ஸ்பார்க்
பிளக்குகளை மாற்றுவதால் —




LICENCE BOSCH

## மைக்கோ
## ஸ்பார்க் பிளக்குகளை

ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்



மோட்டார் இண்டஸ்ட்ரீஸ் கம்பெனி லிட்.,
பெங்களூர்.



# எருமைப் பொங்கல்

தி. ஜானகிராமன்

"அப்படி என்ன சார் மட்டமாகி விட்டோம்? எதற்காக இவ்வளவு விஷமம், இவ்வளவு கோணல் உங்களுக்கு? பேச்சென்னமோ வாய் கிழியப் பேசுகிறீர்கள். எல்லோரும் ஒரு குலம், எல்லோரும் ஓரினம் என்கிறீர்கள். அந்த ஹரிஹரய்யர்கூட அர்த்தம் தெரியாமல் பொட்டை நெட்டுருப் போட்டு முணுமுணுப்பாரே தினம் தினம் நாறு செய்யுட்களை, அதிலே வருகிற இந்த வார்த்தைகளைக் கேட்டுக் கேட்டுச் சிரிப்பேன், சிரிப்பேன், எனக்கு மாளாது.

" 'அம்பிகையின்கடாட்சம் பெற்றோருக்குக் காடும் வீடும், பகையும் நட்பும், ஓடும் உதடும் ஒன்றாகத்தான் தோன்றும்.'

"விடிய ஒரு ஜாமத்துக்கு எழுந்து, குளித்து விட்டு இதைச் சொல்லாமல் அவர் ஹோட்டலைத் திறக்கவும் மாட்டார், வியாபாரத்தைத் தொடங்கவும் மாட்டார். என்ன சமரச புத்தி! என்ன விசாலம்! (அவர் இந்தச் சமரச வாதத்தை எப்படி நடைமுறையில் கையாள்கிறார் என்று நீங்களே தெரிந்து கொள்ள முடியும். அவர் ஹோட்டலுக்குப் போய், அந்தக் காப்பியை ஒரு வாய் குடித்துப் பாருங்கள். காடும் வீடும், ஓடும் உதடும் என்று அடுக்கின கவி, பாலும் ஜலமும் என்பதை ஹரிஹரய்யர் பூர்த்தி செய்து கொள்ளட்டும் என்று விட்டு விட்டது தெரியும்... ஏதோ ஞாபகம் வந்தது. சொன்னேன்.)

"நீங்கள்மனிதர்கள். எதையும்சொல்லவோ, செய்யவோ உரிமையுண்டு, வல்லமை உண்டு உங்களுக்கு! எல்லோரும் ஓரினம் என்று சொன்ன நீங்கள்தானே "சிவப்பு ஓர் அழகு. சூடு ஒரு ருசி" என்றும் பழமொழி கட்டியிருக்கிறீர்கள். இன்றைக்குக் காங்கோவில் ரகளைப்படுகிறது இந்தப் பழமொழி கட்டின சொக்கப்பானைதானே சார்! ஜெர்மனி இத்தாலி எல்லாவற்றையும் விட்டு விட்டு ஜப்பான்மீது அணுகுண்டைப் போட்டானே, அதுவும் இந்தச் சொக்கப்பானைதானே. ஆக என்ன ஆயிற்று? பாம்புக்கும் வாலைக் காண்பிக்கிறது. மீனுக்கும் தலையைக் காண்பிக்கிறது! இதுதானே உங்கள் ஆசாரம், தத்துவம், பண்பாடு! பேஷ்! பேஷ்!"

"என்ன பட்டணம்! என்ன இவ்வளவு கோபம் தாபம் எல்லாம் அமர்க்களப்படுகிறது இன்னிக்கி?" கேட்கிறது யார் தெரிகிறதா? வலங்கிமான். அவனும் எங்களவன்தான். என்னை வாங்கின பிறகு, எங்கள் எசமானர் இருக்கிறாரே ராமச்சந்திர சேர்வை, அவர் எனக்கு ஜோடியாக இருக்க வேண்டுமென்று தஞ்சாவூர் ஜில்லா முழுதும் சல்லடை போட்டுச் சலித்து, கடைசியில் வலங்கிமானில் போய் இவனை வாங்கிக் கொண்டு வந்தார். கொம்பு, உயரம், பார்வை, பால் கறவை-எல்லாம் தத்ரூபம் என் மாதிரியே. எங்கள் இரண்டு பேரையும் தனித்தனியாகப் புகைப்படம் பிடித்து உங்களிடம் காண்பித்தால், என்னை அவன் என்பீர்கள்! அவனை நான் என்பீர்கள்! போதுமா? அப்படி அச்சாக இருக்கிறோம். அடையாளம் தெரிந்து கொள்வதற்காக அவனுக்கு வலங்கிமான் என்றும், எனக்குப் பட்டணம் என்றும் பெயர் வைத்தார் சேர்வை.

"கோபம் வராமல் என்ன செய்யும்! இங்கே நடக்கிற காரியம் ஒவ்வொன்றையும் பார்த்தால் எனக்கு மனசு கொதிக்கிறது. கத்துகிறேன்!"

"அப்படி என்ன காரியம் நடந்திருக்க இப்ப....?"

(மன்னித்து விடுங்கள். அவனுக்கு இலக்கணமாகப் பேச வராது. பழக்கம் அப்படி.)

"காரியமா: நீ எருமையிலும் வடிகட்டின எருமையாக இருக்கிறாயே. நீ நல்ல காலத்தையே கண்ணால் கண்டதில்லையோ?"

"அட, சேதியைச் சொல்லுங்கறேன்."

"பால் கறக்கிற எருமையை யாராவது ஏரில் பூட்டுவார்களா? என்னையும் உன்னையும் இந்தக் கதிக்கு ஆளாக்கி விட்டாரே நம் எஜமானர்? என்ன காரிடம் நடந்துவிட்டது என்று கேட்கிறாயே!"

"பூட்டினாலென்ன! நாம என்ன பசுமாடா?"

"ஏன்? நாமும்தான் பசுமாடு மாதிரி பால் கொடுக்கிறோம்."

"அப்படிப் பார்க்கப் போனா ஆடு கூடத் தான் பால் கொடுக்குது. கழுதைகூடப் பால் கொடுக்குது. ஏன் பன்னி கூடத்தான் பால் கொடுக்குது."

"அப்படியானாலும் அவற்றின் பாலையே இந்த மனிதர்கள் சாப்பிடட்டுமே."

"நாம கொடுக்காட்டிப் போனா, அதையும்தான் சாப்பிடப் பழகிக்குவாங்க. மனுசங்களை இலேசுப்பட்டவங்கன்னு நெனைக்காதே. எதுக்கும் துணிஞ்சவங்க."

"எதுக்கும் என்று வெறுமனே சொல்லாதே. எந்தப் பாபத்துக்கும் என்று சொல்லு."

பாவமோ புண்ணியமோ, நான் சொல்றது என்னன்னா, நம்ம நிலைமைக்கு மீறிக் கோசக்கப்படாது. ஆங்காரப்படப் படாது....."

"அதாவது நம்மையே ஏரில் கட்டி உழட்டும். நாம் கழுத்தை நீட்டிச் சேவகம் செய்ய வேண்டும் என்கிறாய்."

"என்ன செய்யறது?"

"அட, பேமானி!"

"அப்படின்னா?"

"மானமில்லாதவனே என்று அர்த்தம்!"

"மறுபடியும் மறுபடியும் நீ அதைத்தானே சொல்லறே! நமக்குத் தலையிலே எழுதினது தானே நடக்கும்."

"அட பேதையே! கஷ்டம்தான் நமக்கு விதித்திருக்கிறது என்று ஒரு முயற்சியும் செய்யாமல் கஷ்டத்தையே கட்டிக் கொண்டு அழுகிற சில மனிதப் பதர்களை நான் பார்த்திருக்கிறேன். நீ அந்த மனிதர்களிலும் கெடு கெட்ட ஆத்மாவாக இருக்கிறாயே...ஹூம்... என்ன செய்வாய்! தாய் வயிற்றிலிருந்து வெளிப்பட்டது முதல் பட்டிக்காடுகளிலேயே சுற்றிச் சுற்றி வாழ்கிறவர்களுக்கு எப்படி ரோசம் வரப் போகிறது? தன்மானம் தெரியப் போகிறது? பட்டணத்தில் தெரு முனைகளிலும் நாற்சந்திகளிலும் நடக்கும் உரிமைப் போராட்டப் பேச்சுகளைக் கேட்டிருந்தால், நீ இப்படிப் பேசுவாயா? உனக்கு எங்கே அந்தப் பாக்கியம் சித்திக்கப் போகிறது இந்த ஜென்மத்தில்? நீதான் பட்டணம் என்றால் பிண்ணாக்குமாதிரி இருக்குமா, கழுநீர் மாதிரி இருக்குமா என்று கேட்கிறாயே."

"நான் பட்டிக்காடுங்கறதுதான் தெரிஞ்சிருக்கே. அது கிடக்கட்டும், என்ன செஞ்சா கஷ்டம் விடியுங்கறே! அதைத்தான் முதலில் சொல்லேன். கேக்கிறேன்!"

"சண்டித்தனம் பண்ண வேண்டும். பிடிவாதம் பண்ண வேண்டும். முரட்டுத்தனம் செய்ய வேண்டும். ஏரைக் கழுத்தில் வைத்தால் எகிறிக் குதித்து எம்ப வேண்டும்."

"சமத்தியா ஒதை உழுவும், தெரிஞ்சுக்க."

"உடம்பு சரியாயில்லாததுபோல் பாசாங்கு செய்ய வேண்டும்."

"செஞ்சா?"

"நம்மை வேறு யாருக்காவது விற்றுவிடுவார் சேர்வை."

"அந்த இடமும் இப்படியே இருந்தா?"

"மறுபடியும் முயற்சி, முரட்டுத்தனம்."

"நீ இப்ப பேசுகிறதைப் பார்த்தா, ஏன் மாட்டுப் பொங்கல் மாதிரி எங்களுக்கும் எருமைப் பொங்கல்னு கொண்டாடவேன்னு கேட்டிருவே போலிருக்கே."

"போலிருக்கிறதா? கேட்டே ஆயிற்று, தங்கச்சி!"

"கேட்டே விட்டியா? அட!"

"ஆமாம்."

"எங்கே?"

"போன எஜமானரிடத்தில்."

"பட்ணத்திலியா?"

"ஆமாம்."

"அவங்க கிட்ட போய் எதிர்க்க நின்னு கேட்டியா, ஏன் எருமைப் பொங்கல் கொண்டாடவேன்னு?"

"அப்படிக் கேட்பேனா? அப்படிக் கேட்டால் இந்த மனிதர்கள் மசிவார்களா? காரியத்தில் காண்பித்தேன்."

"நல்லாச் சொல்லு. நானும் இஞ்ச வந்து பதினஞ்சுநாளாச்சு. உன்னைப்பத்தி தெரிஞ்சுக்கணும்னு ஆசை. பட்ணத்திலே யாருகிட்டல்லாம், எப்படி இருந்தே, ஏன் இந்த ஊருக்கு வந்தே - எல்லாத்தியும் இப்ப சொல்லு. கேக்கறேன்."

"அப்படி ஒன்றும் பிரமாதமாக என்னைப் பற்றித் தெரிந்து கொள்வதற்குச் சங்கதி ஏதுமில்லை. பிறந்தது செஞ்சியில் (அந்த மண்வாகோ என்னவோ, இல்லாவிட்டால் இவ்வளவு துணிச்சல் எங்கே வரப்போகிறது எனக்கு!). பிறந்து இரண்டு மாதங்களுக்கெல்லாம் திருவண்ணாமலையில் யாருக்கோ என்னை விற்று விட்டார்கள். அவர் மறுபடியும் விற்றார். திண்டிவனம் ரெட்டியார் ஒருவரிடம் வந்தேன். அப்புறம் கைமாறி மாறி மதுராந்தகம், பல்லாவரம் என்று படிப்படியாகப் பட்டணத்துக்கே வந்து விட்டேன். பல்லாவரம் ஏழுமலை ஏகப்பட்ட ஆகாரங்களைப் போட்டு என்னை வளர்த்தார். ரொம்ப நல்ல மனிதர் என்று வாழ்த்திக் கொண்டேயிருந்தேன். திடீர் என்று அவர் சாயம் வெளுத்து விட்டது. நூறு ரூபாய் லாபத்துக்காகத்தான் இந்தப் பரிவு, கரிசனம் எல்லாம். அவர் கையிலிருந்து பட்டணம் ஹரிஹரய்யரிடம் வந்தேன். ஜார்ஜ் டவுனில் ஒரு ஹோட்டல் நடத்திக் கொண்டிருக்கிறார் அவர். ரொம்ப ஆசார சீலர். கரிச்சான் குருவியோடு எழுந்து, குளித்து, ஜபம் செய்து அம்பாளை ஆராதித்து விட்டுத்தான் ஹோட்டலைத் திறக்கிற வழக்கம். ஆனால் இதனால் எல்லாம் ஞானம் வந்து

# உங்கள் வீட்டிற்கு உகந்த ப்ருக் பாண்ட்

# ஸ்பெஷல் ஹோட்டல் ப்ளெண்ட்

## டஸ்ட் தேயிலை

தோட்டத்திலிருந்து துரித
மாக வரும் புத்தம் புதிய
ப்ருக் பாண்ட் ஸ்பெஷல்
ஹோட்டல் ப்ளெண்ட்
டஸ்ட் தேயிலையை
அருந்தி ஆனந்தம்
அடையுங்கள். நீங்கள்
ஒவ்வொரு பாக்கெட்
டிலிருந்தும் அதி
கப்படியான கோப்பை
கள் நல்ல தேநீர்
அடைகிறீர்கள்.

SPECIAL HOTEL
BLEND

BROOKE BOND

மூன்று
அளவுகளில்
கிடைக்கிறது

1 lb.,
4 oz.,
2 oz.

**இன்றே ஒரு பாக்கெட்
வாங்குங்கள்**

ப்ருக் பாண்ட் இந்தியா பிரைவேட் லிமிடெட்

JWTBB 351B

## வேலைக்கு முன்பும் விளையாட்டிற்கு பின்பும்...

# காவேரி சூபர்

எப்பொழுதும் நீங்கள் சுத்தமாக இருக்க காவேரி சூபர் சோப்பின் ஸ்னானம் முக்கியம். குளித்துப் பாருங்கள்!

ஔஷதகுணம் நிறைந்த சால்மூக்ரா தைலம் கலந்தது. தேக ஆரோக்கியத்திற்கு அத்யாவசியமானது காவேரி சூபர் சோப்!










*தயாரிப்பு:*

**மேட்டூர் கெமிகல் & இண்டஸ்ட்ரியல் கார்ப்பொரேஷன் லிட்.**

மேட்டூர் அணை R. S.    சேலம் ஜில்லா.

*மானேஜிங் ஏஜெண்ட்ஸ்:*

**சேஷசாயி பிரதர்ஸ் பிரைவேட் லிமிடெட்**

MC-644



விடுமா இந்த மனிதர்களுக்கு! கொட்டிலுக்குள் நுழைந்ததுமே எனக்கு என்னமோ போலிருந்தது. நம்மவர்கள் யாருமே இல்லை. நாலு பசுமாடுகள் ஒய்யாரமாக நின்று கொண்டிருந்தன. ஆந்திர தேசத்து ஆத்மாக்கள், ஓங்கோலாம். என்னைப் பார்த்ததுமே, ஒன்று தலையைக் கூட அகம்பாவமாக ஆட்டியது. எனக்கு என்னமோ போலிருந்தது. முதல் சந்திப்பே இப்படி இருக்கிறதே. போகப் போக எப்படி யிருக்குமோ என்று ஒரு சிறு கவலை ஏற்பட்டது. பரவாயில்லை. நாம் யார் வம்புக்கும் போகாமல் இருந்து விட்டால் போகிறது என்ற தீர்மானத்துக்கு வந்துவிட்டேன்.

''சத்யமாகச் சொல்கிறேன் வலங்கிமான்! வஞ்சனையில்லாமல் கொடுத்தேன். ஹரிஹரய்யர் கறந்தாலும் சரி, அவர் மனைவி கறந்தாலும் சரி, இல்லை அவர் வீட்டு ஆள் என்று பேர் சொல்லிக் கொண்டு யார் வந்தாலும் சரி, ஒரு பக்கெட் பால் கொடுத்துவிடுகிறது. ஆனால் என்ன ஆயிற்று? இரண்டு மாசமாகப் பார்த்துக் கொண்டிருந்தது வெறும் வஞ்சனை என்று வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது. நான் அடியெடுத்து வைத்த அன்று மாலை நாலு கட்டு புல் வந்தது. நிமிர்ந்து பார்த்தேன். கட்டுக்களைப் பறித்துப்போட்ட ஆள் எல்லாவற்றையும் ஓங்கோல்களுக்கே போட்டு விட்டுப் போய்விட்டான். ஒரு கட்டு வைக்கோலைத் தின்றுவிட்டு முன்னையைப் பார்த்துக்கொண்டே மத்தியானமே பிடித்து நிற்கிறேனே நான். திரும்பிப் பார்த்தாங்களா! இல்லை. ஆனால் சமாதானம் செய்து கொண்டேன். புதிதாக வருகிறவர்களைப் படிமானமாக இருப்பார்களா என்று சோதனை செய்கிற வழக்கம்தானே. அப்படியிருக்கும் என்று நினைத்துக் கொண்டேன். ஒரு வாரமாயிற்று. இரண்டு வாரமாயிற்று. ஒரு மாசமாயிற்று. இன்னும் அதே இரண்டு பிரி வைக்கோலைத் தவிர கவனிக்கு ஒன்றுமே வருவதாகத் தெரியவில்லை. இரண்டு பிரி வைக்கோல் நமக்கு எம்மாத்திரம்? வயிற்றுச் சுவரிலேயே பூசிக்கொண்டு விடும். ஒரு மாசம் கழித்துத் தான் எனக்குப் புலனாயிற்று. இது சோதனையில்லை, நாசகார வஞ்சனை என்று. முழுகிக் குளிக்கக் கூட நாதியில்லாத ஊரில் வந்து இந்த உன்னதத்தைப் பாராட்டாமல், நம்முடைய பிறவித் தேவைகளைக் கூடச் சட்டை செய்யாமல் உழைக்கிற நமக்கு அந்தப் புல்லில் கொஞ்சம் போட்டால்தான் என்ன? என்ன படித்தாலும், மனிதன் மனிதன்தானே. வெள்ளைத் தோலைக் கண்டு மயங்குகிறவன் அவன். பொய்யில்லை. எம். ஏ. படித்திருப்பான், ஐ. நா. சபையில் பேசுவான். ஆனால் பெண்டாட்டி கறுப்பாக இருக்கக் கூடாது. கறுப்பு ஒரு வர்ணமில்லையா? முகத்தைச் சுளிக்கும்படியாக என்ன இருக்கிறது, இந்தக் கறுப்பில்? படித்தவர்களுக்குக்கூட இந்தச் சாதாரண விஷயம் ஏன் தெரியவில்லை என்று யோசித்து யோசித்துப் பார்த்தேன். புரியவில்லை. மனுஷனுக்கு இந்த இனப்பற்று ரொம்ப அதிகம். ஓங்கோலிலேயே ஒரு கறுப்புப் பசுவாக இருந்தாலும் விட்டுக் கொடுக்க மாட்டான். ஏதோ தவறிப் பிறந்துவிட்டது என்று உபசாரம் எல்லாம் அங்கேதான் செய்வானே ஒழிய நம் பக்கமே திரும்ப மாட்டான். காடும் வீடும் ஓடும் உதடும் என்று அபேதவாதத்தை முணுமுணுக்கிற ஹரிஹரய்யரும் இதற்கு விலக்கில்லை என்று நன்றாகப் புரிந்துவிட்டது. வேலை கற்றுக் கொடுக்கிறேன், கற்றுக் கொடுக்கிறேன் என்று சம்பளமில்லாமலே புது மனிதர்களை வருஷக் கணக்கில் வேலை வாங்குகிற நீசத்தனம் மனிதர்களுக்கு உண்டு. அதையேதான் இவரும் செய்கிறார் என்று புரிந்து விட்டது.

''அப்புறம் கோபப்பட ஆரம்பித்தேன். கசப்பு வந்துவிட்டால் என்ன செய்ய முடியும்? எதைக் கண்டாலும் வெறுப்பு! எங்கேயாவது ஓடிப் போய்விட வேண்டுமென்று சதா ஓர் ஏக்கம்! இந்தச் சமயத்தில்தான் பொங்கல் பண்டிகை வந்தது. ஓங்கோலுக்கு ஏகப்பட்ட உபசாரம். கொம்பு சீவினார்கள். உடம்பைத் தேய்த்தார்கள். குளிப்பாட்டினார்கள். மஞ்சள் பூசினார்கள், குங்குமமிட்டார்கள். வாழைப் பழமாகக் கொடுத்தார்கள். பொங்கல் படைத்தார்கள், தூபம் காட்டினார்கள், கற்பூரம் காட்டினார்கள், மணியடித்தார்கள், நெட்டிமாலை போட்டார்கள்.

''நான் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு நின்றேன். ஏன்! எனக்கு இதற்

கெல்லாம் உரிமை கிடையாதா? நான் உழைக்க வில்லையா? கொடுக்கவில்லையா! கைம்பெண்ணைப்போல் ஒதுக்கி விட்டார்கள். மனிதர்களில் கூடக் கைம்பெண்ணை அப்படியெல்லாம் இக்காலத்தில் செய்ய முடியாது.

ஓங்கோல்களைப் பச்சைப் பட்டு, ஜரிகை முகபடாம் எல்லாம் போட்டு, கொம்புக்கு ஊதுவத்தி வைத்து ஊர்வலம் விட்டார்கள். 'பொங்கலோ பொங்கல்' என்று கத்தினார்கள்; தாம்பாளத்தைத் தட்டினார்கள்.

"எனக்கு அசூயை ஒன்றுமில்லை. பிறருக்கு சம்பத்து வருவதைப் பார்த்து நான் என்றுமே எரிந்தது கிடையாது. ஆனால் நானும் கூட நிற்கிறேனே. உழைக்கிறேனே. ஏன் என் பக்கம் திரும்பக் கூடாது?

"எருமைப் பொங்கல்கூடக் கேட்டிடுவ போலிருக்கு என்று சொல்கிறாயே. ஏன் கேட்கக் கூடாது? நாம் எதில் மட்டமாகப் போய்விட்டோம்? ஒருநாள் நமக்காக ஒதுக்கினால்தான் என்ன? கௌரவக் குறைச்சலா யிருந்தால் வெள்ளைக் காளை, பசுவோடு நிறுத்த வேண்டாம், அன்று கொண்டாட வேண்டாம். மறுநாளைக்குக் கொண்டாடலாமல்லவா?

"உன்னிடம் இப்போது பேசுகிறேனே. இதே ஆத்திரம்தான் அன்றும் வந்தது. திமிர் முட்ட முடியுமா? அடிப்பார்கள். சமயம் வரும் என்று பொறுத்துக் கொண்டேயிருந்தேன்.

"என்ன ஆச்சரியம்! ஏழைக் கண்ணீர் வீணாகாது. அன்றிரவு ஹரிஹரய்யர் குழந்தைகள்-சம்சாரத்துடன் சினிமா பார்க்கப் போய்விட்டார். அந்த அம்மாள் எனக்குப் பக்கத்தில் சுவரில் கட்டியிருந்த புடவையை வாங்கி வைக்கமறந்துவிட்டாள். பார்த்தேன். கொல்லைத் தெரு வெளிச்சத்தில் இலேசாகத் தெரிந்தது. பனாரஸ் புடவை. புடவை விலை இருநூறு ரூபாய் இருக்கும். போன தீபாவளிக்கு வாங்கினதாம். அதற்குக் கீழே டிஷ்யூப் புடவை. இந்தப் புடவை நானூறு ரூபாய். என்னைப் பட்டுவிட்டது என்றோ என்னவோ நினைத்து விட்டார்கள். உலர்த்தியிருந்தார்கள். பனாரஸ் புடைவை கண்ணைப் பறித்தது. ஏன் பத்திரமாக வாங்கி வைக்கவில்லை? வீட்டில் திருட்டுப் பயம் கிடையாது. கொல்லைக் கதவு கிடையாது. சுவர்தான். அந்தத் தைரியத்தில் தான் அவர்கள் பேசாமல் போய்விட்டார்கள்.

"ஓர் அகத்திக் கீரைக் கட்டு, ஒரு புல்லுக் கட்டு போட்டதுண்டா நமக்கு. இந்த அபேதவாதி! சம்சாரத்துக்கு அறுநூறு ரூபாய்க்குப் புடவை வாங்குகிற, காடும் வீடும் என்னும் சுலோகம் சொல்கிற அபேதவாதி! கீரைக் கட்டு ஓர் அணா, பனாரஸ் புடவை இருநூறு ரூபாய். புல்லுக் கட்டு நாலணா, டிஷ்யூ புடவை நானூறு ரூபாய். எனக்கென்ன? நான் வெள்ளைக்கார ஜாதி இல்லையே! கறுப்பு மட்டத்திலும் சர்வ மட்டம்! சாப்பாட்டு விஷயத்தில் நான் அபேதவாதி! அப்படிச் செய்ததும் மனிதர்கள்தான்.

"பல்லால் பிடித்து ஓர் இழு இழுத்தேன். டர்ர்ர்ர்.... பனாரஸ் புடவை கிழிந்தது. பிறகு டிஷ்யூ புடவையும் கிழிந்தது. அரை நாழிகைதான் ஆயிற்று. சுவரில் ஆணிதான் பாக்கி. இரண்டு மாசமாக நிரம்பாத வயிறு நிரம்பிற்று.

"காலையில் அந்த அம்மாள் வந்தாள். நமக்கே உண்டே ஒரு பார்வை — பெருமையுடன் திரும்பிப் பார்க்கிற பார்வை - அதை வீசினேன். உள்ளுக்குள்ளே சிரிப்பு! அடக்க முடியாத சிரிப்பு. அவ்வளவு சிரிப்பை அப்படி மறைத்ததே இல்லை நான்.

"அம்மாள் முகத்தில் ஒரு கிலி.

"அரை மணிக்குள் வீடு ரகளைப்பட்டது.

"என்னை முளையில் நெருக்கமாகக் கட்டி, ஹரிஹரய்யர், அந்த அம்மாள், அவர்களுடைய பெண், வேலைக்கார ஸ்ரீதரன் நாயர் எல்லோரும் ஸஹஸ்ரநாம அர்ச்சனை செய்தார்கள். மட்டையால் விசிறிக்காம்பால், கரண்டியால் அடித்தார்கள். முகத்தில் அடித்தார்கள். 'நாசமாய்ப் போக! கரியாய்ப் போக,' எத்தனை வசவுகள்! இட்ட ஆரம்பித்தால் இந்த மனிதர்களுக்குத்தான் எவ்வளவு கற்பனை! எவ்வளவு சொல்நயம், புதுமை, வேகம்!

"நாலாம்நாள் என்னை விற்றுவிட்டார்கள். பால் எத்தனை கொடுத்தால் என்ன? கெட்ட பேர் வாங்கினதற்காக! திருட்டுத் தீனி தின்றதற்காக. என்னை கட்டை வண்டியில் போட்டு இங்கே அனுப்பிவிட்டார்கள். தஞ்சாவூர் ஜில்லாவை முன்பின் நான் பார்த்ததில்லை. பச்சையும் சோலையும் பார்க்கப் பார்க்கப் பரவசமாயிருந்தது. ஆனால் இப்போது......? அந்த எஜமானே தேவலை போலிருக்கிறது!

"இதைப் பாரு! நீ அடங்கி ஒடுங்கிச் சாதுவாக இரு, என்னால் அப்படி இருக்க முடியாது. நான் பட்டணத்திலே வளர்ந்தவள்.

"எருமைப் பொங்கல் ஏன் கொண்டாடக் கூடாது என்று ஜாடைமாடையாகவும் பகிரங்கமாகவும் செய்து காண்பிக்கத்தான் போகிறேன்.

"நான் மஹிஷி! மனுஷி இல்லை. ஞாபகம் இருக்கட்டும்!"





# துயரில் ஆழ்ந்த நாடு

பல நூற்றாண்டுகளாக இந்தப் புராதன நாட்டின் மக்கள் சொல்லொணுத் துயரில் ஆழ்ந்திருந்தனர். சுதந்திரோதயத்திற்கு ஒரு சில ஆண்டுகளுக்கு முன்னர் கூட நம் மக்களில் லட்சக்கணக்கானவர் ஒரு பிடி சோறுக்கும் வழியின்றி மாண்டனர். சுதந்திரத்திற்குப் பின் துரிதமான தொழில் வளர்ச்சியில் நவ பாரதம் மெதுவாக உருவாகி வருகிறது. பிற்பட்ட நிலையிலுள்ள பாரத சமுதாயம் உய்வடைய நம் நாட்டில் கூடிய சீக்கிரத்தில் தொழில் அபிவிருத்தி ஏற்பட வேண்டும்.

## மீண்டும் வளம் கொழிக்கும்

இந்தியாவில் முதன்முதலாக எஃகு நெடுங் குழாய்களேயும், குழல்களேயும் உற்பத்தி செய்து, வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்து சிரேஷ்டமான அந்நியச் செலாவணி சம்பாதித்த பெருமை களிங்கா ட்யூப்ஸைச் சார்ந்தது. கம்பெனியின் விஸ்தரிப்புத் திட்டம் நன்கு அமுலாகி வருகிறது. 1960க்குள் தற்போதைய வருஷாந்திர உற்பத்தி அளவான 40,000 டன்கள் 1,00,000 டன்களுக்கும் அதிகமாகப் பெருகும். பிரதி வருஷமும் 3,00,000த்துக்கு மேற்பட்ட கம்பங்களே உற்பத்தி செய்யவும் கம்பெனி எதிர்பார்க்கிறது.

**களிங்கா ட்யூப்ஸ் லிமிடெட்,**
**33, சித்தரஞ்சன் அவென்யூ, கல்கத்தா-12.**
**ஆலேகள்:**
**சௌத்வார், கட்டாக், ஒரிஸ்ஸா.**








அத்தியாயம் 25

# அழியாக் காதல்

சரியாகப் பகல் இரண்டு மணிக்குக் கமலபதியின் வீட்டு வாசலில் பால்ராஜின் மோட்டார் நின்றது. ஒரே ஒரு முறை, தாம் வந்து விட்டதற்கு அடையாளமாக 'ஹாரனை' அழுத்தினர் அவர். நளினியும் கமலபதியும் வீட்டைப் பூட்டிக் கொண்டு வண்டியில் ஏறினர்கள். பால்ராஜுக்குப் பக்கத்தில் அமர்ந்த நளினி, பின் புறத்திலிருந்த அவருடைய பேரக் குழந்தைகள் ஜார்ஜையும் மேரியையும் பார்த்து விட்டு, "உங்கள் மகளையும் பின்னேடு அழைத்துக் கொண்டு வருவீர்களென்று நினைத்தேன்" என்ருள்.



"என்னைத் தவிர மற்ற அனைவரும் வீட்டைக் கிறிஸ்துமஸுக்காக அலங்கரிப்பதில் ஈடுபட்டிருக்கிருர்கள். அதற்கு இடைஞ்சலாக இவர்கள் இருவரும் கூத்தடிப்பார்களென்றுதான் தாத்தாவின் தலையிலே கட்டி விட்டார்கள். காம்பாக்கத்துக்கு 'பிக்நிக்' கிளம்பி விட்டால் போதுமா? இவர்களைக் கட்டி மேய்க்க வேண்டுமே? கமலபதியின் உதவியை நான் நாடினேன். தன்னுல் அவர்களைத் தனியாகச் சமாளிக்க முடியாதென்று உன்னையும் இழுத்துக் கொண்டு வந்திருக்கிறுன் அவன். மொத்தத்தில் இந்த

வானரங்களைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை யாருமே ஏற்றுக் கொள்ளத் தயாரா யில்லை!'' காரை ஓட்டிக் கொண்டே பால்ராஜ் பேசியதைக்கேட்டு மற்ற இருவரும் சிரித்தார்கள்.

உல்லாசமாக அளவளாவியவாறே சென்னை-நெல்லூர் சாலையில் போய்க் கொண்டிருந்தார்கள் அவர்கள். பசுமை யான வயல்களையும், ஏரிகளையும் கண் குளிரப் பார்த்து ரசித்தபடியே 'தடா' வென்ற ஊரை வந்தடைந்தார்கள்.

"இங்கேதான் இடது பக்கத்தில் எங் கேயோ திரும்ப வேண்டும்'' என்று நெற்றியைச் சுருக்கிக் கொண்டு சுற்று முற்றும் நோக்கினர் பால்ராஜ்.

அருகில் நின்ற போலீஸ்காரர் ஒரு வரை வழி விசாரித்தார்கள். திசையைச் சுட்டிக் காட்டிவிட்டு, "சில நாட்களுக்கு முன்னால் பெய்த பெரு மழையில் ரோடெல்லாம் பழுதடைந்திருக்கிறதே? நீங்கள் எப்படிப் போவீர்கள்?'' என்று கேட்டார் அவர் அக்கறையுடன்.

"ஓ மை காட்! இவ்வளவு தூரம் வந்த பிறகு இப்படி ஒரு தடங்கலா?'' என்ற பால்ராஜ் வந்தது வரட்டும் என்று துணிந்து காரைச் செலுத்தினர்.

போகப் போக வழி மோசமாகிக் கொண்டே வந்தது.

அசட்டுப் பிடிவாதத்துடன் சென்று கொண்டேயிருந்தால் காருக்கே வந்து விடும் ஆபத்து: அப்புறம் இரவு சென்னையை அடைவதென்பது இயலாத காரியமாகிவிடும் என்பது தெளிவா யிற்று. குழந்தைகளுக்கு ஏமாற்றத்தை அளிக்கவும் பால்ராஜுக்கு மனமில்லை.

ஓரிடத்தில் வண்டியை நிறுத்தி, "வந்து விட்டோம், காம்பாக்கத் துக்கு'' என்றார் அவர். யுக்தி பலித் தது. துள்ளிக் குதித்தார்கள் ஜார்ஜும் மேரியும் சந்தோஷம் தாங்காமல்.

அவர் தேர்ந்தெடுத்த இடமோ கண் கவர் வனப்புடன் திகழ்ந்தது. எதிரில் தென்பட்ட சிற்றூற்றில் அதிகமான நீரோட்டமில்லை. கல்யாணம் நிச்சயம் ஆன பெண்ணொருத்தி யதேச்சையாக வருங்காலக் கணவனைச் சந்திக்க நேரும் போது, வெட்கப்பட்டுக் குனிந்த தலை நிமிராமலே கடைக்கண்ணால் அவனை நோக்கியவாறு ஓரமாக ஒதுங்கிச் செல் வது போல் அடக்கமாகச் சலசலத்துப் பாய்ந்து கொண்டிருந்தது தண்ணீர். அதன் இரு புறங்களிலும் விசாலமான வெண் மணல் பரப்பு.

ஆற்றங்கரையிலிருந்த ஆலமரத்தின் விழுதுகள் குழந்தைகளை ஊஞ்சலாட அறைகூவி அழைத்தன. இங்குமங்கு மாகச் சில காட்டு மலர்கள் அவர்களு டைய குதூகலத்தில் கலந்து கொண்டு மகிழ்ந்தன. திடீரென்று விஜயம் புரிந் திருக்கும் விருந்தினர்களை வரவேற்கும் பாணியில் மீன்கள் ஓடையில் மேலே எழும்பி விழுந்தன. பட்சி ஜாலங்கள் மதுர கீதம் இசைத்தன.

ஏகாந்தமான அந்த இடத்தில் மண லில் கூட்டமாக உட்கார்ந்து கொண்டு மூட்டையை அவிழ்த்தார்கள். கேக்கும் ரொட்டியும், பன்னும், பிஸ்கட்டும், முந் திரிப் பருப்பும், சாக்கலேட்டும் கால்மணி நேரத்துக்குள் கபளீகரமாயின.

பிரயாணக் களைப்புத் தீரவும் உண்ட களைப்பு நீங்கவும் ஆலமரத்தினடியில், நிழலில் அமர்ந்தார் பால்ராஜ். அலுப் புத் தீரக் கால்களை நீட்டிக்கொண்டு அடி

# நெஞ்சில் நிறைந்தவள்

கி. ராஜேந்திரன்

மரத்தில் முதுகைச் சாய்த்தார். தொப்பியை முன்னுக்கு இழுத்து முகத்தை மூடிக் கொண்டார்.

"குட் பை!" என்ற குரலொலி தொப்பிக்குக் கீழேயிருந்து எழுந்தது. "குழந்தைகளை உன்னிடம் ஒப்படைத்துவிட்டேன்! நான் தூங்கப் போகிறேன்!" என்று அதற்கு அர்த்தம்!

நிம்மதியாக அவரைத் தூங்க விட்டுத் திரும்பிய கமலபதியின் கண்கள் மணல் திட்டில் உட்கார்ந்திருந்த நளினியின் மீது நிலைத்தன. அவள் முகவாயைத் தாங்கிய முழங்கால்களை இறுக அணைத்திருந்தன பொன் கரங்களெனத் திகழும் இரு மென்கரங்கள். ஆற்று நீர் அவள் பட்டுப் பாதங்களை முத்தமிடும் பாக்கியம் பெற்றதில் களிப்பெய்திச் செருக்குடன் பாய்ந்தோடியது. பூங்காற்று அவள் கருங் கூந்தலை அலைத்து இரண்டொரு இழைகளைக் குருதிச் சிவப்பான அதரங்கள் மீது நெளியச் செய்தது. எழிலோவியமாகத் துலங்கும் அவளை நோக்கி நடந்தான் கமலபதி.

காதல் என்ற அந்தத் தத்துவம் தான் வசிப்பதற்கு ஓர் இடமில்லாமல் தவித்துத் தேடி அலைந்து கடைசியில் இந்தப் பெண்ணுருவத்தினிடம் தஞ்சமடைந்து விட்டதாகத் தோன்றியது அவனுக்கு. அழகு கொழிக்கும் அவள் அங்கங்களில் குடிபுகுந்தபிறகு உருவமில்லாத அந்தக் காதலுக்குப் புதுப் பொலிவும் மெருகும் உண்டாகிச் சோபிப்பதாக அவன் மனத்துக்குப் பட்டது!

அடி மேல் அடி எடுத்து வைத்து அவன் அருகில் நெருங்குவதைஅறியாமல் நளினியின் கண்கள் சற்றுத் தொலைவில் ஈரமான மணலைக் கொண்டு கோட்டை கட்டும் குழந்தைகளை வட்டமிட்டன.

தச்சனின் இழைப்பு உளியிலிருந்து வெளி வரும் மெல்லிய மரச் சருகு போன்ற நிறம் கொண்ட சுருள் சுருளான கேசம் ஜார்ஜுக்கு. கொழுகொழு வென்றிருந்த கைகால்களால் மேரி கஷ்டப்பட்டு உருவாக்கியிருந்த கோட்டையை இடித்துத் தகர்த்தான் அவன். நீலக் கோலிக்குண்டு விழிகளால் அவனைச் சாம்பலாக்க முயல்வது போல் முறைத்தாள் மேரி. ஒருவரை யொருவர் துரத்தினார்கள், சண்டை பிடித்தார்கள், சமாதானம் செய்து கொண்டார்கள்,மீண்டும் ஒன்றுகூடி உறவாடினார்கள்.

நளினி சிரித்தாள்.

நல்முத்தும் பவழமும் வெள்ளிக் கிண்ணத்தில் கலந்து குலுங்கின.

பக்கத்தில் அமர்ந்த கமலபதியை அவள் தலையில் சூடியிருந்த கதம்பத்தின் மணம் சூழ்ந்தது.

மறுபடியும் நளினி வாய்மூடி மௌனியானாள். இன்பக் கற்பனைகளை அவளிடம் கிளர்ந்தெழச் செய்கிறார்களா மேரியும் ஜார்ஜும்?

"என்ன பலமான யோசனை, நளினி?"

"ஒன்றுமில்லை." சிந்தனை கலந்து அவனை ஏறிட்டு நோக்கிய நயனங்களில் ஏக்கம் எட்டிப் பார்ப்பதை அவன் கண்டு கொள்ளாமல் மறைக்கவா முடியும்?

"எல்லாம் எனக்குத் தெரியும்!" என்றான் கமலபதி.

செம்மை படர்ந்த வதனம் கீழே தாழ்ந்தது.

"நான் சொல்லவா, நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாயென்று?"

கமலபதியின் விரல் அவள் நெற்றியின் நடு மையத்தில் பதிந்து புருவ வளைவிலே கீழிறங்கிக் கதுப்புக் கன்னம் வழியாக வெண் சங்கையொத்த கழுத்தை அடைந்து முகத்தை உயர்த்தியது. நளினியின் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் ஒரு குறுகுறுப்பு ஊடுருவியது.

உண்மையை உரைக்க அவளுக்கு உள்ளபடியே சக்தியில்லை. விதியை நொந்து வேதனையுறுவதை இறுக மூடிய இமைகள் உகுத்த கண்ணீர்த்துளிகள் புலப்படுத்தின.

"இரண்டா, மூன்று நளினி? எத்தனை குழந்தைகள் பிறக்கப் போகின்றன நமக்கு?" என்றான் கமலபதி.

நளினியின் உடல் தண்ணீராக உருகியது; நெருப்பாகப் பற்றி எரிந்தது; காற்றாகி ஆகாயத்தில் ஆனந்தமாக மிதந்தது.

வன தேவதையாக விளங்கி அவள் காட்டு மலர்கள்மீது அற்புதமாக ஆடினாள். மச்சகன்னியாக உருமாறி ஆற்று நீரிலே ஒய்யாரமாக நீந்தினாள்.

இவ்வளவுக்கும் இடையில் சோகப் பண் ஒன்றை இதயம் இசைத்துக்கொண்டிருந்தது. உள்ளத்தின் அடிவாரத்திலிருந்து எழுந்த அதை அடியோடு அலட்சியப்படுத்திவிட்டுப் பெருமூச்சிலே நெஞ்சு விம்மச் சாய்ந்தாள். கமலபதியின் பரந்த மார்பு அவளை விரும்பி ஏற்றுத் தாங்கியது.

தன்னைச் சுற்றி வளைத்த கரங்களைப் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டாள் நளினி. ஏனோ அழுகையைக் கட்டுப்படுத்தவே முடியவில்லை அவளால்.

"நளினி! நளினி! என்ன இது?"

விம்மலுக்கிடையே வெளிவந்தன வார்த்தைகள்: "உங்களுக்குப் புது அன்பு பிறந்திருக்கும்போது நான் பழைய அழகையெல்லாம் இழந்து விட்டேன். மரப்பாச்சிப் பொம்மையைப் போல

விகாரமாகி விட்டேன். எனக்கே என்னைப் பிடிக்கவில்லையே!"

"அதெல்லாம் ஒன்றுமில்லை, நளினி! காயலாகக் கிடந்ததால் சற்றுத் தேகம் மெலிந்திருக்கிறது; அவ்வளவுதான். அதனுலென்ன? நளினி! அறிவை இயக்கி ஆராய்ந்தால் உன்னிடம் எத்தனையோ குறைபாடுகளைக் கண்டுபிடிக்கலாம். ஐம்புலன்களைக் கொண்டு உணர முற்பட்டால் உன்னை நேசிக்காமலிருக்கக் காரணங்களைச் சுலபமாக விரல்விட்டு எண்ணலாம். உன்னிடம் காதல் கொண்டது என் அறிவுமல்ல, புலன்களுமல்ல. உன்னைக் காதலிப்பது என் மனம், நளினி! என் மனம்!"

நளினிக்கு உண்டான பரவசத்தில் உடல் நடுக்கமுற்றது. 'இத்தனை நாட்களாக அந்த மனம் கல்லாயிருந்தது ஏன்?' என்று அவள் வினவவில்லை. கேட்க அவளுக்குப் பயம்! கருணையற்ற கடந்த காலத்துக்குப் போய் அந்த மனம் மறுபடியும் கடினமாகி விட்டால்? அது கரைந்தது எப்படி என்று தனக்குத் தெரிய வேண்டிய அவசியம்தான் என்ன? அன்பை அவர் சொரிந்து கொண்டே இருந்தால் போதாதா?

கமலபதி தாகைவே தொடர்ந்தான்: "நளினி! நம்மிடையே உள்ள அந்த அசைக்க முடியாத காதல்தான் இத்தனை சோதனைகளுக்கும் நம்மை ஆளாக்கியது என்பது உனக்கு விளங்குகிறதா? அந்தச் சோதனைகளில் வெற்றி காணவும் அதே காதல்தான் உதவி யிருக்கிறதென்பதை உணருகிருயா?

"இதை ஒருத்தி புரிந்து கொள்ளாமல் பித்துப் பிடித்துத் தாறுமாருக உன்னைப் பழித்தாள்!

"சூரியக் கிரணங்கள் உன் கண்களின் ஒளியைக் காட்டிலும் பிரகாசமானவை தான். ரோஜா இதழ்கள் உன் சருமத்தைக் காட்டிலும் மென்மையானவை தான். பாடும் குயிலின் இசை உன் குரலை விட இனிமையானதுதான். ஆனும் இவை எல்லாவற்றையும்விட என் காதல் உயர்ந்ததாயிற்றே!

"அதை, பாவம்! அந்தப் பெண் அறியவில்லை. உன்னைப் பற்றி இழிவாகப் பேசி ஏசினுள். ஆனுலும் அவளுக்கு என்றென்றும் நன்றிக் கடன் பட்டிருக்கிறேன் நான். அவள் உன்னைத் தூற்றியபோது உன் தூய தன்மையைத்தான் எடுத்துக் காட்டினுள் எனக்கு. உன்னைக் குறித்துக் கண்டபடி அவள் உளறிக் கொட்டிய போது உறங்கிக் கொண்டிருந்த என் உள்ளம் விழிப்படைந்தது. மதிப்பில்லாத என் மாணிக்கத்தை மண்ணில் எறியக் கூடாது, மார்பில் அணிய வேண்டும் என்று தீர்மானித்தேன். அணிந்து கொண்டு விட்டேன்!"

தன் நெஞ்சில் புதைந்துகொண்டிருந்த அவள் சிரத்தை வருடிக் கொடுத்தான் கமலபதி. மேகக்குவியலை வானவூர்தியாக்கி எங்கோ மேலே மேலே முடிவில்லாமல் சென்று கொண்டே யிருந்தாள் நளினி. சொர்க்கத்தையே அடைந்து விட்டோமா என்று நிச்சயப்படுத்திக் கொள்ள அண்ணுந்து பார்த்தாள்.

அவளுடைய கன்னிக் கண்கள் கமலபதியின் முகம் முழுதும் படர்ந்தன, பதிந்தன. காதல் தெய்வம் தன் கரங்களாலேயே வடிவம் கொடுத்திருந்த அவள் இதழ்கள் அழியாக் காதலுக்கு முத்திரையிட்டன.

## அத்தியாயம் 26

# நெஞ்சில் நிறைந்தவள்

'வீட்டு வாசலிலேயே இறக்கி விடுகிறேன்' என்ற பால்ராஜிடம் வேண்டாமென்று கேட்டுக் கொண்டார்கள் நளினியும் கமலபதியும்.

"எவ்வளவு நேரமானுலும் மாலையில் தாங்கள் நான் தவருமல் உலாவச் செல்வது வழக்கம். இப்போது மணி ஏழு தானே ஆகிறது?" என்று கூறிச் சற்றுத் தூரத்திலேயே வண்டியை நிறுத்தச் சொல்லி அவர்கள் இருவரும் விடை பெற்றுக் கொண்டார்கள்.

கரம் கோத்து நடந்தபோது அவர்களிடம் இத்தனை நாட்களாக இல்லாத ஒரு நிம்மதி நிலவியது.

"வீட்டுக்குப் போவதற்கு முன்னுல் எனக்குக் கை நிறைய முல்லைப் பூ வாங்கித் தரமாட்டீர்களா?" என்று கேட்டாள் நளினி ஆசையோடு.

சுற்றுப்புறத்தைப் பற்றிக் கவலைப்படாமல் செல்லமாக அவள் கன்னத்தில் தட்டிவிட்டு, பூக்கடையில் பேரம் பேசிப் பெரிய பந்தாக வாங்கி வந்தான் கமலபதி. "போதுமா இது?"

"இன்னென்று கேட்பேன், இல்லை என்று சொல்லக் கூடாது!"

"ஏது, அதிகாரம் பலமாயிருக்கிறதே, இன்றைக்கு?" என்ருன் கமலபதி மலர்ப் பந்தை முகர்ந்தவாறே.

உடலுக்கு ஊட்டமளிப்பதன் மூலம் தன்னை அறிய முயல்பவன் ஆற்றைக் கடக்க விரும்பி முதலையைப் பிடித்துக் கொண்டவனைப் போன்றவனே.

-ஸ்ரீ ஆதி சங்கரர்: விவேக சூடாமணி

"மாலதி அக்காளைக் குறித்துக் கொஞ்சம் சிரத்தை எடுத்துக் கொள்ளக் கூடாதா நீங்கள்?"

"அவள் பேச்சையே எடுக்காதே, நளினி! பொறாமைப் பேய் அவளை ஆட்கொண்டிருக்கிறது. மாலதி மனம் திருந்தியதாக எனக்குத் தெரிய வந்தாலன்றி அவளுக்காக நான் எதையும் செய்யத் தயாராக இல்லை!"

"உங்களிடம் மாலதிகொண்டுள்ள அளவற்ற அன்புதானே ஆட்டிப் படைக்கிறது அவளை. அந்த அன்புக்கு இடையூறாக, குறுக்கே நான் வந்து சேர்ந்தேன். அதற்காகப் பல தடவைகளில் என்னை நானே சபித்துக் கொண்டதுண்டு."

"அது உன் தவறு. உன்னை நான் சந்திப்பதற்கு முன்பாகவே அவள் அன்பை ஏற்றுக்கொள்வதற்கில்லை என்று தெளிவுபடுத்திவிட்டு வந்தேன். அவள் எண்ணம் ஈடேறவில்லையானால் அதற்குக் காரணம் நீயல்ல...."

"யாராயிருந்தாலென்ன? மாலதி அக்காள் பேசியதையெல்லாம் மறந்து மன்னித்து விடுங்கள். தயவு செய்து அவளிடம் நல்லபடியாக எடுத்துக் கூறி ராஜுவைக் கல்யாணம் செய்துகொள்ளச் சம்மதிக்க வையுங்கள்."

கமலபதி யோசித்தான். அவள் கூற்றிலும் நியாயம் இருப்பதாகவே தோன்றியது அவனுக்கு. திருமணமாகாமலே காலத்தை ஓட்டுவதைப் போல் ஒரு பெண்ணுக்குச் சாபக்கேடு வேறென்ன இருக்க முடியும்? அன்புக்கு மாலதி என்றேனும் அடிமையாகக் கூடியவள்தான். பிரேமகீதம் அவள் செவிகளுக்கு எட்டியிருக்கிறது. மீண்டும் அதனை அடையாளம் கண்டுகொள்ளவும் அவளால் முடியும். ஒரு விதத்தில் நளினியைவிட அவள் அதிர்ஷ்டக்காரியும்கூட. காதலின் துன்ப இசையை முதலில் உணர்ந்து விட்ட அவளுக்கு இன்ப கீதத்தை அனுபவிக்க ஒரு வாய்ப்பிருந்தது. அந்த வாய்ப்பை அவள் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இப்படி எண்ணிய அவனது மனம் ராஜுவுடன் அவ முடிபோட்டுப் பார்த்தது. ராஜை கொஞ்சம் பணப்பித்து பிடித்தது என்பதைத் தவிர, அவனைப் பற்றி மலினமாக நினைப்பதற்கும் ஒன்றுமில்லைதான். உலகில் குற்றம் குறைகள் இல்லாத மனிதர்கள் யார்? மாலதி கெட்டிக்காரி. அவனுடைய அன்பைப் பூரணமாகச் சம்பாதித்து நல்வழிப்படுத்தும் ஆற்றல் அவளுக்குண்டு.

"மாலதி சௌக்கியமாக, சந்தோஷமாக வாழ வேண்டும் என்பதுதான் என் விருப்பம், நளினி! ஆனால் தன் எதிர்காலத்தை நிர்ணயிக்க வேண்டியது அவள் பொறுப்பு. எதற்கும் சொல்லிப் பார்க்கிறேன் நான்."

அவர்களுடைய சின்னஞ் சிறிய இல்லம் என்றுமில்லாதபடி இன்றைக்கு ஒளிர்ந்தது! வெறும் செங்கற்களாலும் கண்ணாம்பினாலும் அமைக்கப்பட்டதாகவே அவர்களுக்குத் தென்படவில்லை. நவரத்தினங்கள் இழைத்து எழுப்பப் பெற்ற சலவைக் கல் மாளிகை அது! காதல் மாளிகை!

"இதோ வந்து விட்டேன்" என்று கூறித் தன் அறைக்குள் சென்ற நளினி இரண்டு மணி நேரமாகியும் திரும்பவில்லை. பொறுமையுடன் கமலபதி காத்திருந்தது வீண் போகவுமில்லை. கதவு திறந்தது. நளினி வெளிப்பட்டாள், சர்வாலங்கார பூஷிதையாக. அவனை நிமிர்ந்து நோக்க வெட்கித் தரையைக் கீறும் கால் கட்டை விரலைப் பார்த்தவாறு நின்றாள்.

காலைக் கதிரவனின் ஒளி வெள்ளம் பசுமையான வயல் பரப்பைத் தழுவுவது போல, தகதகக்கும் மஞ்சள் நிறத்தில் சேலையும், அதன் பார்டருடன் ஒத்துப் போகும் கிளிப் பச்சை வர்ணத்தில் ஜாக்கெட்டும் அணிந்திருந்த அவள் கடந்து போன ஓர் இரவை நினைவூட்டினாள். அதனை இரக்கமற்றதாக எண்ணவில்லை கமலபதி; இன்பம் நிறைந்ததாகக் கருதினான்.

தலை கொள்ளாமல் முல்லைப் பூ; நெற்றிச் சுட்டி; கை நிறைய வளையல்கள்; காதிலே மாட்டல்; செம்பஞ்சுக் குழம்பு தீட்டப் பெற்ற கால்கள்....

"ரோஜா மாலைகள் இரண்டு வாங்கி வரவா? அலங்காரம் பூர்த்தியாகும்!"

அடக்க முடியாமல் அழகாகச் சிரித்தபோது நளினியின் தேகம் இலேசாகக் குலுங்கியது.

அதே சமயத்தில் "நளினி! நளினி!" என்று குரல் கொடுத்தவாறே கதவைத் தட்டினார் நடேசன்.

ஆர்வத்துடன் குதித்தோடி அவரை வரவேற்றாள் நளினி. "வாருங்கள், அப்பா, வாருங்கள்!"

மகளுடைய கல்யாணக் கோலத்தைக் கண்டு பிரமித்து நின்றார் நடேசன்.

ராஜா
ஸ்னோ






ராஜா
ஹேர் ஆயில்

USE RAJA KASTURI SOAP FOR LUXURY BATH RAJA BAR SOAP FOR EASY WASHING
MFRS: MANYAM & CO., BANGALORE-20.



அப்படியே எடுத்துக் கொண்டு இருங்கள் என சிறுவர்கள் மீது குறைகூற முடியாது......

சிறுவர்கள் தூங்கும் சமயத்தில் பெரியவர்கள் ருசிப்பதையும் குறைகூற முடியாது....

நீங்கள் யாரையாவது குறைகூற விரும்பினால், எங்களைத்தான் குறைகூற வேண்டும். ஏனெனில் அடக்க முடியாத ஆவலைத் தூண்டுவது ருசி மிகுந்த நியூட்ரைன்.....

Nutrine

மிட்டாய்கள்



நியூட்ரைன் கன்பெக்‌ஷனரி கம்பெனி
பிரைவேட் லிமிடெட்
சித்தூர். (ஆந்திர பிரதேசம்)

NC-60

# ஓரணா மிச்சம்

அவசாம அதனுலதான் தந்தி அனுப்புகிறோம். அதில் முழு விலாசம் கொடுத்தாலல்லவா சீக்கிரம் போயச் சேரும்

விலாசம சரிவர இல்லா விடடால் தந்தி தாமதமாய்க கிடைக்க நேரிடும்.

காசையும் மிச்சபபடுத்தி, தந்தியை துரிதமாயும் அனுப்ப ஒரு வழியுண்டு. அதுதான் டெலிபோன் நெமபருக்கு விலாசமிட்டு அனுப்புதல். உதாரணம் 'பானர்ஜி, TF 31670, புதுடில்லி' தந்தி டில்லி போய்ச்சேர்ந்தவுடன் அவருக்கு போன் மூலமே தகவல் தெரிவிக்கபபடும்.



"TF 31670" என்பது ஒரே வார்த்தை

உங்களுக்கு

சிறந்த முறையில் சேவை செய்ய

எங்களுக்கு உதவுங்கள்

தபால் தந்தி இலாகா

DA 60/539

தாங்கவொண்ணுத சந்தோஷத்துடன் அவரை நமஸ்கரித்து "ஆசிர்வாதம் செய்யுங்கள் அப்பா!" என்ருள் நளினி.

"என் ஆசிர்வாதம் என்றைக்கும் இருக்கிறதம்மா உனக்கு" என்ருர் அவளைப் பற்றி எழுப்பிய நடேசன். "இன்றைக்கு என்ன விசேஷம்?"

"விசேஷம் ஒன்றுமில்லே, என்னவோ சிங்காரித்துக் கொள்ளவேண்டும் என்று பட்டது." மூடி மழுப்பிய நளினி, "போகட்டும், அப்பா! எனக்கொரு வாக்குறுதி தர வேண்டும் நீங்கள்!" என்று கோரினுள்.

"வாக்குறுதி எதற்கு? நீ எதைக் கேட்டு நான் இல்லே என்றிருக்கிறேன்? என்ன வேண்டும் சொல்லு!"

"மாலதி அக்காளுக்கும் ராஜுவுக்கும் நீங்கள் முன்நின்று கல்யாணம் நடத்தி வைக்க வேண்டும்!"

"மாலதியா? யார் அது?"

"என்னப்பா ஒன்றுமே தெரியாதது போல நடிக்கிறீர்கள்?" என்ருள் நளினி செல்லமாக. "ஒரு வாரமாக இங்கேயே தங்கி யிருந்தாளே! இவருடைய ஊரைச் சேர்ந்தவள் என்று எத்தனே தடவைகள்தான் ஞாபகப்படுத்துவது உங்களுக்கு?"

சட்டென்று விகாரமாக மாறியது நடேசனுடைய முகம். சம்பாஷணையில் கலந்து கொள்ளாது நின்ற கமலபதியின் பக்கம் திரும்பிக் கண்களையும் புருவங்களையும் சுருக்கினுர். "மாப்பிள்ளே ஸாரின் போதனையின்பேரில்பேசுகிருயா நளினி?"

"அவருக்கும் இதில் இஷ்டம்தான், அப்பா!"

"இருக்கும், இருக்கும்!" ராட்சஸச் சிரிப்புக் கிளம்பியது நடேசனிடமிருந்து. "அப்பனே! என் பெண் ரொம்பச் சாது. கள்ளம் கபடமில்லாத அவள் கண்களைக் கட்டி விடலாம். ஆனுல் என்னே ஏமாற்ற முடியாது. ராஜு என் மருமகன்!"

"இருக்கட்டுமே, அதனுலென்ன?" என்ருன் கமலபதி. "மாலதி அவனுக்கு எந்த விதத்திலும் குறைந்தவளல்ல; தகுதியானவள்தான்!"

"தகுதியைப் பற்றிப் பேசவே உனக்கு அருகதையில்லே" என்று ஆங்காரத்துடன் கூறினுர் நடேசன். "என் வீட்டு வேலேக்காரியாகக்கூட வைத்துக்கொள்ள மாட்டேன் அவளே!"

"நிறுத்துங்கள்!" என்று பதறினுன் கமலபதி.

நடேசன் நிறுத்தவில்லே. "உன்னுடைய நேர்மைப் பிரசாரமெல்லாம் வெறும் வெளி வேஷம் என்பது பஞ்சத்தில் அடிபட்ட நாய்போலப் பால்ராஜிடம் வாலேக் குழைத்துக் கொண்டு போனபோதே அம்பலமாகி விட்டது. ஊரைவிட்டு ஓடி வந்தவளே வெட்கங்கெட்டு நீ உன் வீட்டிலே விருந்தாளியாக உபசரிக்கலாம். நடத்தை கெட்டுப் போனவளே நான் என் மருமகனுக்கு மனைவியாக்கிக் கொள்வேன் என்று நினைக்கிருய்?"

பயங்கரமான மௌனம் நிலவியது, அங்கே நீண்ட நேரத்துக்கு. தங்கள் தங்கள் வாழ்க்கையில் செய்த நற்பணிகளையும் தீய காரியங்களையும் மனத் தராசில் எடை போட்டு, தாழ்ந்து போகும் தட்டைக் கண்டு துன்பப்படும் அளவுக்கு அனைவருக்கும் நேரமிருந்தது. இனி நேரப் போவதை நிர்ணயிக்கும் நிசப்தம் அது. அதன் முடிவில் -

காரி உமிழ்ந்தான் கமலபதி.

வருஷக்கணக்காகத் தான் சேமித்து வைத்திருந்த வெறுப்பையெல்லாம் வெளிக் கொணர்ந்து அவர் முன்னே கொட்டினுன்.

"நளினி!" என்று அலறியபோது, கோபத்தில் அவன் குரல் நடுங்கியது. நெற்றி நரம்புகள் புடைத்துக் கொண்டன. "விஷ உள்ளம் படைத்த இந்த... இந்த... நீசன் இந்த வீட்டுக்குள் வருவதை அடியோடு நிறுத்தினுலொழிய என்னுல் இங்கே வசிக்க முடியாது. இந்தப் பாவியைச் சந்திப்பதை நீ விட்டொழித்தாலன்றி உன்னேடு சேர்ந்து வாழ என்னுலாகாது!"

ஒரே பாய்ச்சலில் அட்டை போலத் தன்னிடம் வந்து ஒட்டிக் கொண்ட நளினியைப் பற்றி இழுத்துப் பிடுங்கி எறிந்து விட்டுக் கமலபதி வீதியில் இறங்கி விரைந்தான்.

"தாத்தா! பழைய நாட்களைப் போல எனக்கு ஓர் அறை வேண்டும்!" அதட்டிக்கேட்கும் கமலபதியைப் பார்த்துக் கண் சிமிட்டினுர். பழனியாண்டி ஒன்றும் புரியாமல்.

"வீட்டைக் காலி பண்ணச் சொல்லி விட்டாரா சொந்தக்காரர்?"

"தாத்தா! ஓர் அறையை எனக்கு ஒழித்துத் தருவீர்களா, மாட்டீர்களா?

ஒலியால் மானும், ஸ்பரிசத்தால் யானையும், உருவால் விட்டிலும், சுவையால் மீனும், மணத்தினுல் கருவண்டும் கவரப்பட்டு மாய்கின்றன. இவ்வைந்து உணர்வுகளுடனும் பற்றுக் கொண்டுள்ள மனிதனின் நிலே பற்றி என்ன சொல்ல?

**- ஸ்ரீ ஆதி சங்கரர்: விவேக சூடாமணி**

இல்லையென்றால் வேறிடம் தேடிக் கொள்கிறேன்!"

மூக்குக் கண்ணாடியைச் சரிப்படுத்திக் கொண்ட பழனியாண்டி, "அன்னம்! அன்னம்!" என்று அழைத்தார். "கமலபதி வந்திருக்கிறான் பார்! முன் அறையைச் சீக்கிரமாகக் காலி செய்து கொடு அவனுக்கு!"

தாத்தா புத்திசாலி. கோபம் தணியும் வரையில் அவனைத் தம் கண்காணிப்பிலேயே வைத்திருப்பது நலம் என்றறிந்து நல்லபடியாக நடந்து கொண்டார் அவனிடம். இப்போது அவன் கோரிக்கைக்குக் கையை விரித்து விட்டால் பிறகு எங்கே போய் அவனைக் கண்டு பிடிப்பது? அன்னம்மாவிடம் ரகசியமாக அவனிடம் சுமுகமாகப் பழக வேண்டியதன் அவசியத்தை எடுத்துரைத்து விட்டு நடையைக் கட்டினார் அவர். "அசைய விடக்கூடாது அவனை; தேவையானால் வாசல் கதவையும் கேட்டையும் பூட்டிவிடு!" என்ற இறுதி எச்சரிக்கை அன்னம்மாளைக் கலவரத்தில் ஆழ்த்தியது.



நல்ல வேளையாக அவளுக்குத் தொந்தரவு கொடுக்கவில்லை கமலபதி. சாப்பாட்டைக்கூட வேண்டாம் என்று மறுத்து விட்டு அறைக்குள்ளேயே பித்துப் பிடித்தவனாக அலைந்து கொண்டிருந்தான்.

டிங்...டிங்...டிங்...டிங் பதினொரு முறை கடிகாரம் மணியோசை எழுப்புவதற்கு முன்பாகவே அவசரம் அவசரமாகப் படியேறி வந்தார் பழனியாண்டி. "கமலபதி! நளினி ... நளினி...."

"சொல்லுங்கள், தாத்தா!" அவர் தோள்களைப் பற்றி உலுக்கிய கமலபதிக்கு இருட்டிக் கொண்டு வந்தது.

"உன்னைக் காண வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கிறாள், கமலபதி! அது அவளுடைய கடைசி விருப்பமாகவும் இருக்கலாம்! நான் வந்த டாக்ஸி காத்திருக்கிறது உனக்காக."

கமலபதியின் கரங்கள் செயலிழந்து நழுவி விழுந்தன, அவர் தோள்களிலிருந்து. "தாத்தா! நடேசன் இருக்கிறாரா அங்கே இன்னும்?" என்று துக்கம் தொண்டையை அடைக்கக் கேட்டான் கமலபதி.

"நீ இந்தக் கேள்வியைப் போடுவாய் என்று நான் எதிர்பார்த்தேன். அதனால்தான் பழனியாண்டியை அனுப்பி விட்டுப் பின்னாலேயே நானும் புறப்பட்டு வந்தேன்." நடேசன் வாசலில் நின்றார். "நளினியிடம் கடைசியாக விடை பெற்றுக் கொண்டு விட்டேன் நான். இனி உங்கள் வாழ்க்கையிலிருந்தே விலகிக் கொண்டு க்ஷேத்ராடனம் போகிறேன். ஆனால் கமலபதி! உன்னைக் கெஞ்சுகிறேன்; தயவு செய்து என் மகளைக் காப்பாற்று!"

தாரை தாரையாகக் கண்ணீர் தாடைகளில் வழிந்தோட நாத்தழுதழுக்கப் பேசினார் நடேசன்.

வெறி பிடித்தவன் போல் அவர்களை ஒதுக்கித் தள்ளிவிட்டு ஓடிச் சென்று டாக்ஸியில் ஏறினான் கமலபதி.

• • •

தோல் பையைக் கையில் எடுத்துக் கொண்டு கிளம்பிய டாக்டரிடம், "அவள் எப்படி இருக்கிறாள்?" என்று வினவினான் கமலபதி. நல்ல பதிலைக் கூறுமாறு அவன் தேகத்தின் ஒவ்வொரு அணுவும் அவரிடம் மன்றாடிக் கொண்டிருந்தது.

"கடவுளின் விருப்பம் எதுவோ, அது நிறைவேறும்!"

கமலபதியின் சரீரத்தில் எலும்புகளே இல்லாமல் போய்விட்டனவா? நிற்கவும் சக்தியின்றித் துவண்டான் அவன்.

"இளம் வயதிலேயே 'ருமாடிஸ'த்துக்கு ஆளாகி யிருக்கிறாள் உங்கள் மனைவி. இருதயம் பழுதடைந்திருக்கிறது. சமீப காலத்தில் ஒன்றன்பின் ஒன்றாக ஏற்பட்ட அதிர்ச்சிகளைத் தாங்க முடியவில்லை. அதனால்...."

'உன் இருதயம் பழுதடைந்திருந்தது, என் இதயம் பழுதடைந்திருந்தது. இனிமேல் இரண்டுமே சீர்ப்பட்டுவிட வேண்டும், நளினி!'

உள்ளே புக முயன்ற கமலபதியைத் தடுத்து நிறுத்திக் கூறினார் டாக்டர்: "மலர்ந்த முகத்துடன் அவளை அணுக வேண்டும் நீங்கள். கணவர் கண் கலங்குவதைக் கண்டால் அவள் அதைரியமடைவாள். அதுவே முடிவைத் துரிதப்படுத்தியும் விடலாம். ஒருவேளை அவள் இறந்து போக நேரிட்டாலும் மன நிறைவோடு இருக்கட்டும், புரிகிறதா?"

'மன நிறைவு அவனுக்கு ஏது?' கண்களைத் துடைத்துக் கொண்டான் கமலபதி.

பனிக்குச் சிலை ஒன்று மங்கலமான மஞ்சள் ஆடை தரித்துப் படுத்திருந்தது அங்கே. தூங்குகிறாளோ என்று ஐயுற்று அமைதியாக நெருங்கினான் கமலபதி.

வெந்துகொண்டிருந்த அவள் உதடுகள் அசைந்தன. "வந்து விட்டீர்களா?"

"ஆமாம், நளினி!" அவள் மார்புக் கருகே உடலோடு ஒட்டினாற் போல் உட்கார்ந்து கரங்களைப் பற்றினான் கமலபதி. பனிக்குக் கரங்களில் குளுமை இல்லை; அனலாகக் கொதித்தது.

அவன் கரங்களைத் தன் நெஞ்சத்துடன் சேர்த்து அணைத்துக் கொண்டாள் நளினி. "நான் அதிக நேரம் உயிருடன் இருக்க மாட்டேன்."

"உளறாதே, நளினி! இன்னும் எத்தனையோ நாட்கள், மாதங்கள், வருஷங்கள் வாழப் போகிறாய், நீ!"

"வாழ்வேன், உங்கள் மனத்தில்!"

நளினி தனது உறைவிடமா கொள்ளத் தீர்மானித்த நெஞ்சம் வெடித்து விடுவதைக் கமலபதி விரும்பவில்லை. பெரு முயற்சி செய்து அது பிளந்து தகர்ந்து விடாமல் பாதுகாத்துக் கொண்டான்.

"நான் இப்போது எங்கே இருக்கிறேன், தெரியுமா?" மெல்லொலியை உன்னிப்பாகக் காது கொடுத்துக் கேட்டான் கமலபதி. "வெள்ளிப் பனி மலையின் சிகரத்தில் உங்களோடு கரம் கோத்து உலவிக் கொண்டிருக்கிறேன்."

"ஆமாம், நளினி!" என்று ஒத்துப் பாடினான் கமலபதி. "உலகின் உச்சியில் இருந்தவாறு உலகத்துக்கே அறிவிக்கிறேன், நான் உன்னைக் காதலிக்கிறேன் என்று..."

"பேசுங்கள்; பேசிக் கொண்டே இருங்கள்" என்றாள் நளினி.

"இமயம் தகர்ந்தாலும் நம் காதல் அழியாது நளினி!"

'நளினியின் ஆவி பிரிந்து மெதுவாக மேலெழும்பித் தன் நாசிகளின் வழியே புகுந்து நெஞ்சில் நிறைந்துவிட முயலுகிறதா?' நளினியின் தேகத்தை இரு கைகளாலும் சுற்றி வளைத்துத் தாங்கினான் கமலபதி. ரோஜா மொட்டு ஒன்று இதழ்களை விரித்து மனோரம்மியமான மணம் பரப்பியது. "பூவுலகில் ஒரு சொர்க்கம் உண்டானால் அது இதுதான், அது இதுதான், அது இதுதான்!" ரகசியம் பேசிய அந்த இதழ்கள் முதலில் சுவைத்தது, கமலபதியின் கண்ணீரைத் தான். அவனுக்குத் தான் இழைத்து விட்ட கொடுமைகளெல்லாம் அந்தக் கண்ணீரிலே கரைந்து போய்விட்டதாக உணர்ந்தான் கமலபதி.

நளினியின் அதரங்களில் அரும்பிய புன்னகை மாறவில்லை; மறையவில்லை. கைகொள்ளாமல் அவன் வாங்கி வந்த மலர்கள் அவள் மேனிமீது தூவப்பட்டன. மரணம் அவர்களைப் பிரித்து வைக்கவில்லை; ஒன்று சேர்த்தது. ▲

ஆம், அவள் - அவன் நெஞ்சில் நிறைந்தாள்!

(முற்றும்)



# QUINTON HAZELL RANE



## TIE ROD ENDS for AUTOMOBILES

*now manufactured in India!*




**TIE ROD ENDS**

Greatest simplicity and freedom in steering with self-adjusting joints to ensure steering swivelling plus articulation are provided in Quinton Hazell Rane Tie Rod Ends. Replace worn out Tie Rod Ends with Q. H. L.

**RANE (MADRAS) LTD.**
(Manufacturing Division)
MADRAS-2.

சிறுவர் சித்திரத் தொடர்

# மரகதச் சிலை

கதை: வாண்டுமாமா சித்திரம்: வினு




அரசே! யாரோ ஒருவள் கண்ணீரும் கலங்கிய உள்ளமு மாகத் தங்களைக் காணக் காத்து இருக்கிறாள் அரண்மனை வாயிலில், அரச குடும்பத்து மாதாகக் காணப் படுகிறாள்.


அரச குடும்பத்துப் பெண் அரண்மனை வாயிலில்...! உடனே உள்ளே அனுப்புங்கள்...


மன்னர் மன்னவா காப்பாற்ற வேண்டும், காப்பாற்ற வேண் டும். என் பெற்றோரும் சகோதரனும் நிர்க்கதி யான நிலையிலிருக்கிறார்கள்,


பெண்ணே, பதற்றமடை யாமல் உன் துயரத்தைச் சொல். நீ யார்? உன்னை எங்கோ பார்த்தது போல இருக்கிறதே!


இந்த அபாக்கிய வதியை உங்களுக்கு முன்பே தெரி யும். கூட துர்க்கத்தின் மன்னர் ருத்ரசிம்மரின் மகள் நான். என் பெயர் நிர்மலா... மந்திரவாதி நீல கேசியின் சூழ்ச்சியாலே..... அதை எப்படிச் சொல்லுவேன் ஒரு நாள் அப்பாவின் அவைக்கு...


ருத்ரசிம்மரே, நினைத்ததைச் சாதிக்கும் திறமை பெற்ற நீலகேசி யாசகம் கேட்க வந்திருக்கிறேன். சக்தி மகாகாளி உவந்து மகிழத் தனக்கோர் காணிக்கை யாசகம் கேட்கிறாள்.


அப்பா, அந்தப் பணியை எனக்கு அளியுங்கள்.


மகனே ஆதித்தா, உன் வீரத்தில் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆனால் மாந்திரவாதி நீலகேசியைப் பற்றி நான் நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவன் சாமானியனல்ல...


இளவரசே! உங்களுடன் நானும் வருகிறேன். தடை சொல்லாதீர்கள்


ஆதித்தா, இது மகிமை பொருந்திய வாள். இதை வைத்திருப்பவருக்குத் தோல்வியே வராது. நீ மேற்கொண்டிருக்கும் காரியம் மகத்தானது. உன்னோடு இன்னன் காளியையும் அழைத்துச் செல். வெற்றி பெற்று திரும்ப வாழ்த்துகிறேன். சென்று வா.


இளவரசி நிர்மலாவுடன் இன்னன் பின் தொடர ஆதித்தன் தன் பிரயாணத்தைத் தொடங்குகிறான். இவர்கள் செயல்களை எல்லாம் மந்திரக் கண்ணாடி மூலம் பார்த்துக் கொண்டிருக்கிறான் நீலகேசி.


ஹ..ஹா.. ஹஹ..!
வாருங்கள்...
வாருங்கள்!
ஹ..ஹா...
தொடரும்

# நீங்களும் இவ்வணங்கின் அழகிய கேசத்தைப் பெற விரும்புவீர்கள்!

ஓர் திருப்பம், ஓர் பார்வை—அவளுடைய அழகிய கேசம் உங்கள் மனதில் அழியாத இடம் பெறுகிறது. பிறகு, "இவ்வழகிய கேசம் எனக்கிருந்தால்", என்று நினைக்கிறீர்கள். மிகச் சிறந்த மூலதரப் பொருட்களால் தயாரிக்கப்பட்ட 'கேஷா' அபரிமிதமான அழகிய கேசத்தை உங்களுக்கு அளிப்பதுடன், உங்கள் கேசத்திற்கு முற்றிலும் புதிய அழகிய வனப்பை அளிக்கிறது—நீங்கள் விரும்பும் அழகு உங்களை நாடுகிறது. கேஷாவின் மென்மையான நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.




உங்கள் கேச பாதுகாப்பு திட்டத்திற்கு

## கேஷா

லேமா தயாரிப்பாளரின் இன்னும் ஒரு சிறந்த தயாரிப்பு



பூரண ஏஜெண்டுகள்:
எம். எம். கம்பாத்வாலா
அஹமதாபாத்-1

ஏஜெண்டுகள்:
ஸி. நரோத்தம் & கோ.,
பம்பாய்—2

TAM

சென்னை ஏஜன்டுகள்: ஜே. பாலாபாய் & கம்பெனி, 260, எஸ்பிளனேட், மதராஸ்-1
இலங்கை ஏஜன்டுகள்: மிருன் கதிர் & கோ., 41, 46, இரண்டாம் குறுக்குத் தெரு, கொழும்பு-11




## 1

[கலிங்க நாட்டில் துனியாற்றங்கரையில் சோழ சேனாபதி கருணாகரத் தொண்டைமானுடைய பாசறை. தொண்டைமான் கூடாரம். நாலைந்து ஈட்டிகள் ஒரு மூலையில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கின்றன. கலிங்க வெற்றியின் வடுக்களைத் தன் மார்பிலே தாங்கிய கேடயம் ஒன்று, ஒருபுறமாகச் சாய்ந்து, கருணாகரத் தொண்டைமான் பேச்சைக் கவனிப்பது போல் கிடக்கிறது.

தொண்டைமான் பரபரப்புடன் உலாவிக் கொண்டிருக்கிறான். அவன் முகத்திலே கவலையின் ரேகை. புருவத்தைச் சுருக்கிக் கொண்டு, ஈட்டிகளுக்கருகிலே, தாமும் ஓர் ஈட்டியைப் போல் நிமிர்ந்து அசையாமல் நிற்கும் பேட்டை உடையாரைப் பார்த்து....]

கருணாகர: பிறகு?...

பே. உடை: யாரோ திம்மையாவாம். அவன்தான் இந்தக் கலகங்களுக்கெல்லாம் காரணம். துனியாற்றுக் கோட்டை பணியாதிருப்பது அவன் சூழ்ச்சி. அவன்தான்...

கருணாகர: திம்மையாவா?

பே. உடை: அவன்தான் தோற்றுப் போன கலிங்கம் என்னும் பிணத்தை வைத்துக் கொண்டு பேயாட்டம் ஆடுகிறான்.

கருணாகர: திம்மையாவா?

பே. உடை: ஆம், ஐயா, தெரியுமா அவனை?

**பேராசிரியர் அ. சீநிவாசராகவன்**

கருணாகர: தெரியாமலென்ன? போரிலே அவனைப் பார்த்தேன்.

பே. உடை: போரிலா, போரின் அமளியில் சேனாபதியான தாங்கள் தனி ஒருவனைப் பார்க்கவும் முடிந்ததா?

கருணாகர: உமக்கு ஞாபகம் இல்லையா? வெற்றி என்பது ஒரு நெருஞ்சி மலர். அதை நெருங்கிய போது நம்மைக் குத்திய கலிங்க முள் இந்தத் திம்மையா.

பே. உடை (கசப்புடன்): முள்ளோ, கல்லோ? இப்போது அவன் ஒரு முட்டுக்கட்டையாயிருக்கிறான்!

கருணாகர (சிரித்து): எதற்கு?

பே. உடை: நாம் ஊர் திரும்பிச் செல்வதற்குத்தான்...

கருணாகர: நல்லது. பேட்டை உடையாருக்கும் ஊர்ப் பைத்தியம் பிடித்து விட்டதா? தீபங்குடிக் கவியின் காற்று அடித்ததோ?

[கவிஞர் ஜயங்கொண்டார் வருகிறார்.]

கவிஞர் (வரும் போதே): யாரது, தீபங்குடியைப் புகழ்வது?

கருணாகரன்: வரவேண்டும், வரவேண்டும். நான்தான் கருணாகரன் பேசுகிறேன். வேறு யார் கவிஞராகிய தீபங்குடியைப் புகழப் போவது? ஆமாம்; கவிஞரைக் கேட்போம். பேட்டை உடையார் ஊர் போவதற்குத் துடிக்கிறார்.

கவிஞர்: மனிதனுடைய துடிப்பெல்லாம் கடைசியில் அதற்குத்தானே? ஆனால் போவதற்கு. உண்மையான ஊருக்குப் போய்ச் சேருவதற்கு வழிதான் தென்படவில்லை.

பே. உடை: வழிக்கு என்ன குறை? குறுக்கே நின்று கொண்டிருக்கும் குப்பை மேட்டுக் கோழியை மட்டும்...

கவிஞர்: கோழியா? ஒன்று இந்தா? புலன்கள் என்ற கோழிகள் ஐந்தல்லவா குறுக்கே நின்று.. கூவுகின்றன? இந்தக் கோழிகளை வெருட்ட, குன்றக் குமரன் சேவலே துணை. உடையாருக்குச் சேவற் போரில் ஈடுபாடு உண்டல்லவா?

[மெல்ல நகைக்கிறார்.]

கருணாகரன் (நகைத்து): கவிஞரே, நீங்கள் குறிப்பது உலகம் என்ற குப்பை மேட்டில் திரியும் கோழியை. பெரிய உடையார் குறிப்பது கலிங்கக் கோழியை.

கவிஞர்: கலிங்கக் கோழியா? அது யார் கலிங்கக் கோழி?

பெ. உடை: ஆமாம். இந்தத் துனியாற்றுக் கோட்டைத் தலைவன், கலிங்க வீரன் திம்மையாதான் குறுக்கே நிற்கிறான். தமிழ்ப் படைகள் ஊர் திரும்புவதற்கு அவன்தான் தடையாக நிற்கிறான்.

கவிஞர்: நல்லது. சேனாதிபதே! நீரும் அப்படி நினைக்கிறீரோ?

கருணா: நானும் என்ன கவிஞரா? நினைவிலே அழுந்தி நேரத்தைப் போக்க? (உறுதியை வருவித்துக் கொண்டு) உடையார்! நாளைப் பொழுது புலருமுன் இந்தக் கலிங்கக் கோட்டை பணியாவிட்டால் தரையோடு தரையாய்ப் போகும். இந்தச் செய்தியைத் திம்மையா உடனே பெற வேண்டும். புரிகிறதல்லவா?

பெ. உடை: புரியாமலென்ன?...கவிஞர் ஏதோ கோழிகள் ஐந்து என்று சொன்னாரே, அது என்னவாம்?

கவிஞர் (நகைத்து): அதுவா? எழுந்தது சோழன் பெரும் படை. 'அதிர்ந்தன நாலு திசைகள். அடங்கின ஏழு கடல்கள், பிதிர்ந்தன ஊழி மலைகள், பிறந்தது தூளி படலம்.

பெ. உடை: இது புரிகிறது. ஆனால்...

கருணா (சிறிது கடுமையான குரலில்): உடையார்...

பெ. உடை: ஐயா!

கருணா: கவிதைக் குருடியோடு பிறகு குலாவலாம். இரவு வருமுன் திம்மையாவுக்குச் செய்தியை அனுப்பும்.

பெ. உடை: ஆணை. இதோ அரை நாழிகைப் பொழுதில் நிறைவேறி விடும். ஆனால் நம் படைகள்...

கருணா: படைகளுக்கென்னவாம்? நாளைக் காலையில் துனியாற்றுக் கோட்டையைத் தகர்ப்பதற்கு நமது படைகள் ஆயத்தமாக இருக்க வேண்டும்.

பெ. உடை (தயக்கத்தோடு): அதைத்தான் சொல்ல விரும்பினேன். ஆனால்...

கருணா: ஏன் தயங்குகிறீர்? சொல்லுமே!

பெ. உடை: நமது படைகள் சிறிது களைத்திருப்பது சேனாபதி அறியாததா?

கருணா: ஊருக்குப் போய்க் களைப்பையெல்லாம் ஆற்றிக் கொள்ளலாம்.

பெ. உடை: இல்லை. நமது படைகளின் வீரத்தில் எவ்விதமான குறையுமில்லை. ஆனால் அவர்கள் இந்த...இந்த வேளையில்...சிறிது...

கருணா: சேனைத் தலைவன் கட்டளை. வேறு பேச்சுக்கு இடம் இல்லை.

பெ. உடை: ஆணை. கவிஞரே, வருகிறேன். ஐந்து கோழிகள் என்றீரே. அது மாத்திரம் கொஞ்சம்...வருகிறேன்.

[சேனாதிபதியை வணங்கி விட்டுப் பெரிய உடையார் போகிறார்.]

கவிஞர்: உமக்கேன் புரியும்? வில்லும், வாளும் என்றால் உமக்குத் தண்ணீர் பட்ட பாடு. என்ன சேனாபதியாரே, தண்ணீர் பட்ட பாடா தசையும் குருதியும் பட்ட பாடா? உடையார் கதை இருக்கட்டும். உம்மோடு பேசவே வந்தேன்.

> பரமசிவ! என் மனம் உனது தாமரைத் திருவடியில் வசிக்கட்டும். வாக்கு உன்னைத் துதிப்பதில் நிலைக்கட்டும். கரங்கள் உன் பூசையிலேயே ஈடுபடட்டும். செவி உன் சரிதையை மடுக்கட்டும். புத்தி உன் தியானத்தில் உறையட்டும். கண்கள் உனது திருமேனியில் நிலைக்கட்டும். இதன்பின் நூல்களைக் கற்று எனக்கு ஆகவேண்டியது என்ன?
>
> - ஸ்ரீ ஆதி சங்கரர்: சிவானந்த லஹரீ

கருணா: பேசுமே. கவிஞர்கள் நாம் பேச்சுக் கோழிகள் ஆயிற்றே? உம்மிடம் கவிச் சக்கரவர்த்தியாகிய உம்மிடம் கூடவா, பேச்சுக்குக் குறை?

கவிஞர்: இல்லை. சண்டைக் கோழிகளைப் பற்றியே எந்தன் கவலை. நாளைக் காலையில் அவை போரிட மறுக்கலாம்.

கருணா: கவிஞரே! என்ன வழக்கம் போலக் கனவு காண்கிறீரோ?

கவிஞர்: நான் சொல்வது பகற்கனவா? அல்லது பச்சை நனவா என்பது இருட்டிய பிறகு பாளையம் பக்கம் தாங்கள் வந்தால் தெரியும். நமது போர்வீரர்கள் அலுத்து விட்டனர். ஆம், கலிங்கக் காட்டில், காவேரியின் குரல் ஒவ்வொரு தமிழ் நெஞ்சிலும் கேட்கிறது. அது நம் தாயின் மணிக் குரல். கருணாகரத் தொண்டைமானும் அதற்குப் பணிந்தே ஆகவேண்டும்.

கருணா (நகைத்து): கவிஞர் குரலையும் விடவா வலிமையுடையது?

கவிஞர் (சிரித்து): கவிஞரின் குரலே அதுதானே! கவிதை என்பது ஒரு நாட்டு மக்களின் குரல்தானே!

கருணா: அப்படியானால் நானே பாசறைக்கு வந்து நீர் சொல்வது உண்மைதானா என்று மறைந்திருந்து பார்க்கிறேன். இன்றிரவு, நன்றாக இருட்டிய பிறகு ஒருவருக்கும் தெரியாமல் நான் வருவேன்.

கவிஞர்: பாளைய மேட்டின் அருகில் பனைமரம் மூன்று நிற்கின்றனவே அங்கே நான் தங்களுக்காகக் காத்திருப்பேன். நான் வரட்டுமா?

கருணா: கவிதையுடனே வாரும்.

கவிஞர் (நகைத்து): ஆமாம், ஆமாம். பனைமர நிழல்தான் கவிதைக்குப் பாங்கு.

கருணா (நகைத்து): நல்லது.

[கை கூப்பித் தலை அசைக்கிறான்.]

கவிஞர்: வருகிறேன். மறந்துவிட வேண்டாம். மூன்று பனை அருகில் பாளைய மேட்டில் இன்றிரவு....

[ஜயங்கொண்டார் போகிறார்.]

> ஔஷதத்தின் பெயரைச் சொல்வதால் மட்டும் வியாதி தீராது: அதை உட்கொள்ள வேண்டும். பிரம்மத்தைப் பற்றிப் பேசுவதால் மட்டும் முக்தி கிடைத்து விடாது: அதை நேராக அனுபவிக்க வேண்டும்.
>
> - ஸ்ரீ ஆதி சங்கரர் : விவேக சூடாமணி

கருணா (சிறிது தாமதித்து) : சேனாதிபன் என்றால் என்ன, ஓர் இயந்திரமா? எனக்கு மாத்திரம் அலுப்பும் களைப்பும் இல்லையோ? காவேரி, என் படைவீரர்களுக்கு மட்டுமா, எனக்கும்...எனக்கும் தாய்தானே?

[நகைக்கிறான்]

## 2

*[இரவு சோழப் படை தங்கியுள்ள பாளையம் சில போர்வீரர்கள் ஒரு புறமாகப் பல நிலைகளில் படுத்துக் கொண்டிருக்கிறார்கள். பக்கத்திலே எரியும் காவல் தீ. அவர்களுடைய முகத்திலே, உலோரியின் கருமையைப் போல் பட்டும் படாமலும் விழுகிறது. மூளிச் சந்திரன் இருட்டைக் கண்டு பயந்தவன் போல் மேகத்தில் ஒளிந்துகொள்ள முயல்கிறான்.*

*போர் வீரர்கள் ஏதோ 'சள சள' வென்று பேசிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குத் தெரியாமல் மெல்ல அவர்களை நெருங்கிப் பக்கத்திலே உள்ள மரத்தின் பின்புறத்தில் கருணாகரத் தொண்டைமானும் கவிஞர் ஜயங்கொண்டாரும் நிற்கிறார்கள்.]*

போர்வீரன் 1 : அடே கருப்பண்ணே, ஒரு பாட்டுப் பாடேடா. இந்த ராத்திரியும் குருட்டு நிலவும் என்னை எங்கேயோ தூக்கிக்கிட்டுப் போகுது....

போர்வீரன் 2 : எங்கேடா தூக்கிக்கிட்டுப் போவுது அது? மலைபோல் இங்கே படுத்திருக்கான், தூக்கிக்கிட்டுப் போவுதாம், தூக்கிக்கிட்டு. உன்னைத் தூக்க நம்ப யானைங்க அத்தனையாலும் முடியாதே.

[நகைப்பு]

போர் வீரன் 1 : அடே, சும்மாயிருடா. கருப்பண்ணே, எங்கே ஒரு பாட்டு. ஆமாம் ஒரே ஒரு தமிழ்ப்பாட்டு.

கருப்ப : பாட்டா பாடச் சொல்றே? மனசு சரியாய் இல்லே, தம்பீ, பாட்டு எங்கே வரப் போவுது, பாட்டு?

போர் வீரன் 2 : கருப்பண்ணே, உனக்கு மனசு வேறே இருக்குதா? இருந்தால் போதும், அண்ணே, முடிஞ்சு போயிடும்.

போர் வீரன் 1 : என்னடா முடிஞ்சு போயிடும்?

போர் வீரன் 2 : கன்னாலந்தான்.

[நகைப்பு]

போர் வீரன் 1 : அவன் கிடக்கிறான், அண்ணே. எங்கே ஒரு பாட்டு?



கருப்பன் : என்ன பாட்டுடா பாடணும்?

போர் வீரன் 2 (பாடுகிறான்) :

மஞ்ச விரட்டுக் காளையைப் பார்த்தா
மயக்கம் வருகுதடா - அடே
மயக்கம் வருகுதடா
மாமன் மகள் மெட்டி குலுக்கு கேட்டால்
மனசு துள்ளுதடா - அடே
மனசு துள்ளுதடா

போர் வீரன் 1 : மஞ்ச விரட்டெல்லாம் என்னிக்கோ ஆகி இருக்கும்? பங்குனி மாசம் வந்திடுச்சே.

போர் வீரன் 2: ஆமாம், மஞ்சவிரட்டும் ஆயிருக்கும், மாமன் மகளும் போயிருப்பா.

கருப்பன் : பிறகு உனக்காகக் குந்திக்கிட்டு இருப்பாளா? அடே, போடா போ, உன் முகத்தைப் பார்த்தாலே...

போர்வீரன் 2: முகத்துக் கென்னடா?

போர்வீரன் 1 : அதுக்கென்ன......பெரிய கோயில் நந்தி மாதிரி...

போர் வீரன் 2 : ஆனாலும் உன் முகத்தைப் போல் இருக்க முடியுமா? திருவெறும்பூரு மந்தியை உரிச்சு வைச்ச மாதிரி.

போர்வீரன் 1 : திருவெறும்பூருக்கு எப்போடா மறுபடியும் போகப் போகிறோம்?

போர்வீரன் 2 : உஸ்...இரைந்து பேசாதே. இணைத்துத் தலைவர்களுக்கு நாட்டு வளப்பம் ஏன்? அண்ணே கருப்பண்ணே, அந்தப் பாட்டைப் பாடு.

கருப்பன் : பாடி என்னடா? பாடினால் ஊருக்குப் போகணும்கிற துடிப்புத்தான்.

போர் வீரன் 1 : அது நம்ப கையிலேயா இருக்குது? தொண்டைமான் பிரபு எப்படி முடிவு கட்டுறாரோ?

கருப்பன் : அவருக்கு இதிலே என்னப்பா கவலை? எந்தக் கோட்டையைப் பிடிக்கலாம், எந்த நாட்டை வளைக்கலாம், இதானே அவருக்கு? நம்ப கஷ்டம் அவருக்குத் தெரியுமா?

போர் வீரன் 2 : அண்ணே, இரைந்து பேசாதே......

கருப்பன் : அட போடா, பாளையம் முழுதும் இதே பேச்சுத்தானே. இங்கே இந்தத் தண்ணியில்லாக் காட்டிலே மனுசன் கசங்குறான். இரைஞ்சு பேசப்படாதாம். நம்ப ஊரிலே, அடாடா, இப்போ பெரிய கோயில் திருவிழா, என்னமா இருக்கும் தெரியுமா? பங்குனி மாசம், தம்பீ, மாமரத்திலே பழம் குலுங்கும், ஆத்திலே தண்ணி அரிச்சோடும். ஊரிலே பவனக்கொடி நாடகம் போடுவாங்க. என்னமோ, போ, எனக்கு இந்தச் சமயத்திலே ஒண்ணுமே பிடிக்கலே.

(பாடுகிறான்)

பங்குனி மாசமடா—இது
பங்குனி மாசமடா
பச்சரிசிக் காய்கள் பண்ணைத்
தோப்பினில் குலுங்குமே
பாலைப் போல நிலவு வீட்டு
முற்றம் வந்து குந்துமே
உறையூரு மாமன் மகள்
நம்மைக் காண வாடுமே
நாலு பேரைக் கண்டவுடன்
நாணிக் கோணி ஓடுமே.

# பளபளவென்று
# சலவை
# செய்யப்பட்ட
# புடவையணிந்து
# புன்னகைபூத்து
# நிற்கிறாள்

டெட், ஸ்வஸ்திக்கின் சுத்திகரிப்புக்
கலவை, வெள்ளைத் துணிகளை
மிகப் பிரகாசமாக வெளுக்கிறது.
வர்ணத் துணிகளுக்கு மனோகரமான
காந்தியளிக்கிறது. நூல்
துணிகளுக்கும் அது நல்லது.
மென்மையான வஸ்திரங்களுக்கும்
சிறந்தது.

வன்னீராயினும், மென்னீராயினும்
சோப்பை விடத் துரிதமாகச்
செயல்படுகிறது டெட்.
அபரிமிதமாக நுரை கட்டுகிறது.
கண்கவரும் வெண்மையைத் தரும்
பொருள் அதில் இருக்கிறது.

உங்களது துணிகளை டெட்டைக்
கொண்டு நவீன முறையில்
சலவை செய்யுங்கள்.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய





SHILPI SON 7

## அதுவும் நமது பண்ணையிலிருந்தே !

தென்னிந்தியாவிலுள்ள சொந்த லாரிகள், வாடகை லாரிகள் ஆகியவற்றின் எண்ணிக்கை இருபதாயிரத்துக்கு மேல். இவை தினந்தோறும் ஏற்றிச்செல்லும் சாமான்களின் எடை எழுபதாயிரத்து ஐநூறு டன். தொலைதூரத்திலுள்ள பண்ணைகளிலிருந்து அரிசி மூட்டைகளைமட்டுமல்லாமல் விதவிதமான சாமான்களை—துணி பேல்கள், நாற்காலி, மேஜை முதலியன, செய்தித் தாள்கள், மோட்டார்கள் போன்றவற்றை ஏற்றிச் செல்கின்றன.

முப்பது ஆண்டுகளுக்கு முன், டிவிஎஸ் சதர்ன் ரோட்வேஸ் சர்விஸ் ஆரம்பித்த பொழுதே, தென்னிந்தியாவின் வியாபாரம் வளர்ச்சியுறுகிறது என்றும் அதன் பூரண வளர்ச்சிக்கு விரிவான சாலைப் போக்குவரத்து ஸ்தாபனங்கள் இன்றியமையாதவை என்றும் உணர்ந்தது. அத்தகைய ஸ்தாபனங்களுக்கு வழிகாட்டி, உறுதுணையாக நின்று உதவி செய்ய டிவிஎஸ் முன்வந்தது.

பணஉதவி முதல் 'சேஸிஸ்' சப்ளை செய்து 'பாடி' கட்டி, தேய்ந்துபோன உறுப்புக்களைப் புதுப்பிப்பது வரை டிவிஎஸ் ஸ்தாபனங்கள் தென்னிந்தியாவில் வளர்ந்தோங்கும் மோட்டார்த் தொழிலின் எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்கின்றன.

**டி. வி. எஸ். ஸ்தாபனங்கள் :**

டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதுரை, திருச்சி, திருநெல்வேலி, புதுக்கோட்டை, சேலம், கோயமுத்தூர்
மோட்டார் வண்டி விற்பனையாளர்கள், ஆட்டோமொபைல் என்ஜினியர்கள்

சதர்ன் ரோட்வேஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை
பிரயாணிகள், பார்சல் போக்குவரத்து

மதராஸ் ஆட்டோ சர்விஸ் பிரைவேட் லிமிடெட்
மதராஸ்-பெங்களூர்
மோட்டார் சாமான்கள் விநியோகிப்பவர்கள்

சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்
புதுக்கோட்டை, மதராஸ் கோயமுத்தூர்
டயர் ரீட்ரெட் செய்பவர்கள்

மதராஸ் மோட்டார் அண்ட் ஜெனரல் இன்ஷூரன்ஸ் கம்பெனி லிமிடெட், மதராஸ்

சுந்தரம் பைனான்ஸ் பிரைவேட் லிமிடெட், மதராஸ்

இந்தியா மோட்டார் பார்ட்ஸ் அண்ட் அக்ஸெஸரீஸ் பிரைவேட் லிமிடெட், மதராஸ்
G. M. சாமான்களை இந்தியா முழுவதற்கும் விநியோகம் செய்பவர்கள்

சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட், மதராஸ்-பெங்களூர்-செகந்திராபாத்
ஜீப், பிளைமவுத், பார்கோ, ஸெலண்ட், பெர்கூஸன் ட்ராக்டர்கள் விற்பவர்கள்




டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை

எல்லோரும் : (பாடுகிறார்கள்)

பங்குனி மாசமடா - இது
பங்குனி மாசமடா......

கருப்பன் : (பாடுகிறான்)

பந்து பந்தாய் முல்லைப் பூக்கள்
பாட்டையில் பூக்குமே
பழைய கோயில் மண்டபத்தில்
பாட்டும் கூட்டும் கேட்குமே
சொந்த வயல் காட்டினிலே
தெறிக்கக் காய்கள் சிதறுமே
சோறு போடும் சொருகக்காரி
சொருக்கவிழ்ந்து குழையுமே

போர் வீரன் 1 : நிறுத்து அண்ணே, எனக்கும் பைத்தியம் பிடிச்சுடும்போலே இருக்குது. ஊரிலே நம்ப சனங்க எப்படி இருக்காங்களோ?

போர் வீரன் 2 : ஆமாண்டா, உண்மையைச் சொன்னே. சனங்களைப் பத்தி ரொம்பக் கவலைதான்......

போர் வீரன் 1 : சொல்லி என்ன ஆகப் போவுது? இங்கே இந்தத் துனியாத்துக் கரையிலேதான் நாம்ப மண்டையைப் போடப் போறோமோ, என்னவோ?

கருப்பன் : இதுக்கு ஒருவழி செய்வோம், தம்பீ! நாளைக் காலையிலே பேட்டை உடையாரோடே தேரிலே போயி......

போர் வீரன் 2 : எங்கே?

கருப்பன் : சேனாபதி கருணாகர பிரபு கிட்டத்தான். போயி நாம்ப சொன்னா......

போர் வீரன் 2 : சொன்னாலும் உடனே நடந்துடும், அட போடா.

போர் வீரன் 1 : அடே, ஏன் நடவாது? தருமபிரபுடா, தரும பிரபு, நம்ப சேனாதிபதி. ஆமாம், அண்ணே, அதுதான் சரி. எல்லாரும் ஒன்னாச் சேர்ந்து ஊருக்குத் திரும்பணும்னு அவரு என்ன சொல்லப் போறாரு? சரின்னு சொல்ல மாட்டாரு எங்க சேனாதிபதி சிங்கம்.

கருப்பன் : அதுதான் தம்பீ எனக்கும் தோணுது. இப்ப... ..

போர் வீரன் 2 : இப்போ சும்மா பேசாதே. பொழுது விடிஞ்சு பார்த்துக்கிடுவோம். இப்போ, பாடு ஏதாச்சும் கேட்போம். எப்படி அது?...

எல்லோரும் (பாடுகிறார்கள்) :

பங்குனி மாசமடா
பங்குனி மாசமடா - அடே
பங்குனி மாசமடா....

## 3

*[அதே இரவு. ஒரு நாழிகை கழிந்தபின். சோழ சைன்யம் தங்கியுள்ள பாசறைக்கும், துனியாற்றங் கரையில் உள்ள இம்மையானின் கோட்டைக்கும் இடையிலே உள்ள காட்டுப் பாதை. அரக்கன் ஒருவனுடைய விரல்களைப் போல் வான வெளியிலே ஏந்து சிறு குன்றுகள். குத்துக்கல் ஒன்றின் மேல் கவிஞர் ஜயங்கொண்டார் உட்கார்ந்திருக்கிறார். கீழே, தரையில் கருணாகரன் முழந்தாளைக் கட்டிய வண்ணம் குந்தியிருக்கிறான்.*

> கயிலாசத்துறைவ! அன்று அர்ஜுனனுக்கு அருள வேடனாக வந்தவனன்றோ நீ! வேட்டையாட வேண்டுமானால் எங்கெங்கோ அலையாதே! என்னுள்ளேயே வாசம் செய்வாய்! இந்த மனமென்னும் காட்டு எல்லையில் பொறாமை என்ன, பேராசை என்ன இப்படி மதம் பிடித்த பலப்பல மிருகங்கள் திரிகின்றன. அவைகளைக் கொன்று வேட்டை இன்பம் அடைவாய்; பெரும் லாபமும் பெறுவாய்!
>
> - ஸ்ரீ ஆதி சங்கரர் : சிவானந்த லஹரி

*தொலைவிலிருந்து நகரவாசிகளின் ஓயாத ஆரவாரமும், இடையிடையே ஓநாயின் ஊளையும்.]*

கவிஞர் : கருணாகரரே, காதிலே விழுந்ததா?

கருணா: காதிலா? நெஞ்சிலேயே விழுந்தது. ஆனாலுமென்ன? நாளைக் காலையில் இம்மையானின் கோட்டை பணிந்தபின்னே ஊரைப்பற்றி எண்ணலாம். அதுவரையில்......

கவிஞர் : கோட்டை பணியாவிட்டால்?

கருணா : போர்தான்.

கவிஞர் : அதற்கு நம் படைகள் உடன்பட வேண்டுமே?

கருணா : என் வீரர்கள் இதுவரையில் எனது சொல்லை மீற நினைத்ததில்லை.

கவிஞர் : உண்மைதான், ஆனால் இப்போ இருக்கும் நிலைமையில்......

கருணா : வீரர்கள் போரிட மறுப்பார்கள் என்று சொல்கிறீர்?

கவிஞர் : ஆம்.

கருணா : படைத் தலைவர்கள்?

கவிஞர் : அவர்களும் மனிதர்கள்......

கருணா (நகைத்து) : ஆகவே கடமையை உதறித் தள்ளி ஊருக்குத் திரும்புவார்கள். கவிஞரே, மனிதரைப் பற்றி மிக மிக உயர்ந்த கருத்து இது.

கவிஞர் : உண்மை எதுவோ அதுவே உயர்ந்தது.

கருணா : இம்மையானைப் பணியச் செய்தால் பிறகு இங்கே வேலை இல்லை.

கவிஞர் : யார் அதைக் கண்டது? இன்னொரு பொம்மையா புறப்படுவான்.

கருணா : உஸ்...மெள்ளப் பேசும். யாரோ... அங்கே வருவதுபோல் இருக்கிறது.

கவிஞர் : ஆமாம். யாரோ இருவர் இந்தப் பக்கமாக வருகிறார்கள்.

கருணா : கலிங்கக் கோட்டையைச் சேர்ந்தவர்கள் போல் அல்லவா தோன்றுகிறது? இந்தக் குருட்டு நிலவில் ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. (உற்று நோக்கி) ஆமாம், கவிஞரே, வருபவன் ஒருவன் இம்மையான். நாம் இப்படியே இந்தக் கல்லின் பின்புறம் ஒளிந்து கொள்ளுவோம்......

*[ஒளிந்து கொள்கிறார்கள்]*



[இம்மையாவும், கங்க ரெட்டியும் வரு கிறார்கள். வந்தவர்கள் குந்துக் கல் லின் அருகே உட்காருகிறார்கள்.]

கங்கா ரெட்டி: இம்மையகாரு!

இம்மையா: என்ன கங்கா?

கங்கா: எனக்கு......என்னவோ....சொல்ல லாம் அல்லவா?

இம்மையா (நகைத்து): சொல்லேன். என்ன தான் சொல்லப் போகிறாய்? இந்த இம்மையா ஒரு பைத்தியம் என்றுதானே? நன்றாகச் ,சொல்லேன்.

கங்கா: இல்லை. ஆனால் நம்மால் கருணா கரனை எதிர்க்க முடியுமா?

இம்மை: ஏன் முடியாது? புதிதா? முன்னே எதிர்த்தோம், இல்லையா?

கங்கா: எதிர்த்தோம், எதிர்த்தோம். ஆனால் தோற்றோம்.

இம்மை: வெற்றியும் தோல்வியும் நமது கையில் இல்லை. ஆனால் கடமையைச் செய் தல், நாட்டைக் காத்தல், வீரன் பொறுப்பு.

கங்கா: நம்முடைய கலிங்கச் சேனை சித றிப் போனபின், இந்தச் சிறு கோட்டையா நாட்டைக் காக்கப் போகிறது!

இம்மையா: கோட்டை சிறியது. எனி னும் மனத்தின் உரத்தை இதைக் கொண்டு அளவிடலாமா? கடைசி வரையில் நாம் உறுதி யாய் நின்றால்...

கங்கா: அழிந்து போவோம், இம்மைய காரு. அழிந்தே போவோம்.

இம்மையா: (நகைத்து) நல்லது. அதனால் என்னவாம்? அன்னியனுடைய அடிமையாய் வாழ, சோழன் புலியைக் கும்பிட உன்னால் முடியுமா? நமது நாட்டைப் பற்றினான் கருணாகரன், நம் நெஞ்சைப் பற்ற அவனால் முடி யுமா? இந்த ஆறும், மலை யும், காடும் நம்மை வளர்த்த தாயகம் அல் லவா? அதற்குப் பிறகுதான் மற்றவை யாவும். ஆம், உயிர்கூட. சாவது பெரிதா? நாட்டுக்காகச் சாவதும் பெரிதா? கங்காகோழையாகாதே. மானவதை என்னி மண்ணையா தின்பது?

கங்கா: சோழன் படை மிகப் பெரியது. சோழன் தளபதி கருணா கரன் சிறந்த வீரன்.

இம்மையா: அத னால்?...

கங்கா: பணிந்தால் நம்மைக் கண்ணியமாக நடத்துவான்.

இம்மையா: (நகைத்து) நமது கையில் உள்ள கண்ணியத்தை இழந்து, பயத்துக்குப் பலிகொடுத்து விட்டு, அவன் கையைப் பார்ப்பதா? அவன் ஒரு வீரன், உண்மை தான். ஆனால் நாமும் வீரர்கள்... கருணாகர னிடம் தோற்பதும் நமக்கு வெற்றிதான். தோற்ற நிலையில் எதிர்ப்பதே வெற்றி. இரு. அங்கே யார்...

கங்கா: யாரோ கிழவி ஒருத்திவருகிறாள்...

(கிழவி ஒருத்தி தள்ளாடிக் கொண்டு வருகிறாள்)

இம்மையா: யாரம்மா நீ?

கிழவி: கோட்டைக்குப் போகிறேன் நாயனு.

இம்மையா: என்ன, பாட்டி? கோட் டைக்கு இந்தநேரத்தில் யாராவது போவார் களா? அடைத்திருக்குமே!

கிழவி: போனால் திறக்கும், நாயனு!

கங்கா : திறக்குமா? வெளியிலே பகைவர்கள் கூடிக் கும்மாளி போடும்போது கோட்டையைத் திறந்தா வைத்திருப்பார்கள்? அந்த இரவிலே நீங்கள் போய்த் தட்டினால் திறப்பார்களா?

இழவி : ஆனால் உள்ளே எங்கள் இம்மையா இருக்கிறான். வெளியிலே யார் இருந்தாலும் கோட்டையைத் திறந்து எனக்கு இடம் தருவான்.

இழவி : மகராஜனாக இரு. வா, போகலாம். என்ன நாயனா, யோசிக்கறே? நீயும் வா. வீரன் இம்மையாவின் கோட்டையிலும் நெஞ்சிலும் எங்களைப் போன்ற ஏழைகளுக்கு எப்போதும் இடமுண்டு. வா, நாயனா.

[போகிறார்கள்]

கவிஞர் : கருணாகரரே, நல்ல வேடிக்கை. மனிதனும் பேயாய், பேயும் மனிதனும்... இம்மையா ஒரு கவிஞனைப்போல் அல்லவா பேசுகிறான். அவனுடைய வீரத்தையும், கவிதையும் பார்த்தீர்களா?

கருணா : அந்தக் கிழவி உண்மையைச் சொன்னாள்.

கவிஞர் : உண்மையா?

கருணா : தமிழனும் ஒரு மனிதன் தான். அவனுக்கும் வீடு வாசல், பெண்டுபிள்ளை, உற்றார், உறவினர், எல்லாம் உண்டு. கலிங்கனுக்கும் உண்டு. எனக்குக் காவேரித் தாய், உண்மைதான். அது போலத்தான் இம்மையாவுக்கு இந்தத் துனியாறு.

கவிஞர் : ஆனால் மனிதன் மனிதனாக இருக்கும் வரையிலேதான் இது. மனிதன் பேயாக மாறினால்?

கருணா : பேயா?

கவிஞர் : பசி, பசி, பசி, பசி என்றே பதைக்கும் களப் பேய், பசி அடங்கா மனிதனோ பசி பசி, போர் போர், கொலை கொலை என்று இரத்த வெறி கொண்டு அலைகிறான். பேயினும் கொடியவனாக அவன் ஆகி விடுகிறான்.



இம்மையா : ஆமாம், அதற்காக, இந்நேரத்தில் தனியாய் வருவதா?

இழவி : தனியாகவா?

கங்கா : ஆமாம், இந்தத் தமிழர்கள் வேறு இப்பொழுது...

இழவி : தமிழன் என்னை விழுங்கவா போகிறான்? அட, போ தம்பி. தமிழனுக்கும் என்னைப்போல் யாரோ ஒருத்தி தாயாராக இருக்க மாட்டாளா? அவனுக்கும் ஊர், வீடு, வாசல் எல்லாம் இல்லையா? அவனும் என்ன மனிதன்தானே...

இம்மையா : ஆமாம், அம்மா! ஆனாலும் இந்தப் போர், மனிதர்களைப் பேய்களாக மாற்றி யிருக்கிறது.

இழவி : அப்படிச் சொல்லாதே. இந்தக் கோட்டையில் கலிங்கக் கொடியைத் தூக்கி நிறுத்தும் எங்கள் இம்மையாவும் பேயா? இல்லை, இல்லை. வெளியிலே உள்ள தமிழ் வீரன் கருணாகரனும் பேயா? இல்லவே, இல்லை, நாயனா...

இம்மையா : பொழுது புலர்ந்தால் தெரியும், யார் யார் பேயென்று. வாருங்கள் பாட்டி. போகலாம். கோட்டை வரையில் கூட வந்து வழி காட்டுகிறேன்.

கருணா : கவிஞரே, இரும். எனக்கென்னவோ.... காலையில் பார்ப்போம்.... துனியாறும், காவிரியும் ஒன்று? நாளைப்பொழுது விடியு முன்னர் ஏதாவது ஒரு முடிவுக்கு வரவேண்டும். கவிஞரே, என் நெஞ்சை இப்போது கேட்ட இம்மையாவின் குரல் உறுத்துகிறது. அதற்கு ஏதாவது மருந்து உண்டா?

ஐயன் : இரக்கமே மருந்து. தோற்ற வீரனுக்கு மரியாதை காட்டி அவன் அன்பைப் பெறுவதே வெற்றி வாகைசூடிய கருணாகரா உனக்கு மருந்து.

'அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்
என்புதோல் போர்த்த உடம்பு.'

வள்ளுவர் வாக்கும் பொய்யாகுமா? அன்பே மருந்து. அதுவே அறம். அதுவே அறிவும் வாழ்வும். வா, போகலாம்.

[போகிறார்கள்]

## 4

[கூடார வாசலில் கருணாகரன் நிற்கிறான். காலை வெய்யில் அவன் முகத்திலும் பக்கத்திலே உள்ள படைத்தலைவர்களின் ஆயுதங்களிலும் அணிவகுத்து நிற்கும் படைவீரர்கள் கேடயங்களிலும் விழுகிறது. தூரத்திலிருந்து சங்கு, காளம் முதலிய போர் வாத்தியங்களின் ஒலி. நிரை எழும்போது

**18 சிறந்த மூலிகைகள் கலந்து முதல்முதலாகதயாரிக்கப்பட்ட**



## ஆயுர்வேதிக்

### பேஸ்ட்டும், பௌடரும்

உலகத்தில் எல்லா டூத்பேஸ்ட்டும், பௌடரும் பற்களை சுத்தம் செய்கிறது. ஆனால், ஈறுகளை பலப்படுத்த என்னென்ன கலவைகள் அதில் சேர்க்கப்பட்டுள்ளன என்று யோசித்துப் பாருங்கள். முதல் முதலாக ஆயுர்வேதிக் 'விக்கோ வஜ்ரடன்தி' (பேஸ்ட்டும், பௌடரும்) 18 சிறந்த மூலிகைகளிலும் தயாரிக்கப்பட்டது. ஈறுகளை நன்றாக இறுகச்செய்து பற்களை மிகவும் பலப்படுத்துகின்றன. ஒரு முறை உபயோகித்து திருப்தியடையுங்கள்.

# விக்கோ வஜ்ரடன்தி

## பேஸ்ட்டும், பௌடரும்







**VICCO LABORATORIES** DADAR T.T., BOMBAY 14.

---

ஏஜெண்டுகள்:

மெஸர்ஸ் ஆர். எல். கௌடர் அண்டு கம்பெனி, சென்னை - 1
மெஸர்ஸ் கே. எல், கௌடர் அண்டு கம்பெனி, பெங்களூர்-9
மெஸர்ஸ் என். தேசாய் கவுண்டர் அண்டு கம்பெனி, கோயமுத்தூர் - 1

[ஒரே ஆரவாரம் எழுகிறது. கருணா கரன் வலக் கையைத் தூக்குகிறான். ஆரவாரம் பளிரென்று அடங்கி அமைதி நிலவுகிறது.]

கருணா: இருங்கள், ஊருக்குத் திரும்ப வேண்டும் என்று சொல்கிறீர்கள்?

[ஆம். ஆம் என ஆரவாரம்]

குரல்: ஆமாம், ஆமாம். உடனே திரும்புவோம்...

கருணா: இந்தக் கோட்டையை என்ன செய்வது? எண்ணிப் பார்த்தீர்களா?

கருப்பன்: பேட்டை ஐயா, நான் பேசட்டுமா?...

பே. உடை: குதிரைப் படை முதல் அணிக் கட்டளை கருப்பன் அம்பலகாரன் பேச அனுமதி கேட்கிறான்.

கருணா: என்ன அம்பலகாரரே, பேசும், உம் மனத்தை விட்டுப் பேசும்...

கருப்பன்: என் மனம் என்னுங்க? எல்லாருடைய மனமும் அதுதான். உடனே காவிரிக் கரைக்குத் திரும்ப, ஊருக்குப் போக, ஐயா மன்னிக்கணும். நாங்க ஊருக்குப் போக, சோழ நாட்டுக்குத் திரும்ப...

போர்வீரர்கள்: ஆமாம், திரும்புவோம்...

கருணா: வீரர்களே! ஒரு வார்த்தை. கலிங்கப் போரில் கிடைத்த வெற்றியை நிரந்தரமாகச் செய்வது நமது கடமையல்லவா?

கருப்பன்: மன்னியுங்கள், ஐயா. வெற்றியை நிரந்தரமாக்குவதை நாம் பிறகு செய்யலாம், ஐயா. ஊர் போகாட்டி, எங்களுக்குப் பைத்தியம் பிடிச்சுப் போகும்.

குரல்கள்: ஆமாம், ஆமாம், திரும்புவோம், திரும்புவோம்.

கருணா: (ஓங்கிய குரலில்) பொறுங்கள் ...உடையார், அது யார் வருவது? கோட்டையிலிருந்து யாரோ ஒருவன் வருகிறான். நீர் போய்ப் பாரும். அதற்குள்...

கருப்பன்: தொண்டைமான் ஐயா, உங்களுக்காக உயிரையும் விடுவோம். இந்தத் தடவை உங்கள் பிள்ளைகள் ஊருக்குப் போகத் துடிக்கிறாங்க. கொஞ்சம் மனம் இரங்கி...

கருணா: இரக்கமா? இதுதான் முதல் அணிக் கட்டளையின் பேச்சா? கட்டளையை உதறி எதிர்க்கும் படைமேல் இரக்கமா காட்டச் சொல்கிறாய்? நீங்கள் செய்யும் துரோகத்துக்குத் தண்டனை எது என்பது தெரியுமல்லவா? கொஞ்சம் இருங்கள். உடையார் வருகிறார்.

[உடையார் திரும்பி வருகிறார்.]



கருணா: பேட்டை உடையார் செய்தி என்ன?...

பே. உடை: பணிய மாட்டானாம்.

கருணா (கோபத்துடன்): என்ன?

பே. உடை: பணிய மாட்டானாம். அரவமிடும் தமிழ்த் தவளைகளுக்குக் கலிங்கப் பாம்பு அஞ்சாதாம். (நகைத்து) இம்மையா பணிய மாட்டானாம்.

[படை வீரர்கள் திகைத்து நின்று ஒருவரை ஒருவர் பார்த்துத் தலை கவிழ்கிறார்கள்.]

கருணா: அப்படியா செய்தி? ஆனால் ஆனால்...இருங்கள். இருங்கள். இம்மையா விடமிருந்து வந்த தூதன் எங்கே?

பே. உடை: வெளியில் இருக்கிறான். அழைத்து வரட்டுமா?

கருணா: அழைத்து வாரும்.

[பேட்டை உடையார் போகிறார்.]

ஆனால் அந்தத் தூதன் வந்தால் சொல்வதற்கு என்ன இருக்கிறது? இம்மையா பணியா விட்டால்...பணியாவிட்டால்... எவ்வளவோ போரிட்டுப் போரிட்டுத் தமிழ் இரத்தம் சிந்திப் பெற்ற கலிங்க வெற்றி, இந்தத் இம்மையாவின் சிறு எதிர்ப்பால் நாசமாகி விடும். அவ்வளவுதான். ஆனால் இதைத் தவிர்க்க, மறுபடியும் போர் செய்யலாம் என்றால்...

[படை வீரர்களைப் பார்க்கிறான்.]

கவிஞர்: மறுபடியும் போரா?

கருணா (கசப்புடன்): இல்லை, இல்லை. கவிஞரே, போருக்கு வழி இல்லை. கவலைப்பட வேண்டாம். கருணாகரன் வாள் துருப் பிடித்துவிட்டது. தமிழ் வேல்... தமிழ் வேல்: சொல்வதற்கே கூசுகிறது. கவிஞரே, நீர் பாடிய தமிழ் முதிர்ந்து விட்டது. தமிழ் வீரம் காவிரிக் கரையையும் பழைய சோற்றையும் நோக்கித் தன் நாக்கை நீட்டுகிறது.

வீரர்கள்: இல்லை, இல்லை. நாங்கள்...

[கருணாகரன் கை பார்த்து நிற்கிறான்.]

[பேட்டை உடையாரைத் தொடர்ந்து தூதன் வேடத்தில் இம்மையா வந்து சேருகிறான்.]

கருணா: கலிங்கனே! நீதான் துணிமாறுக் கோட்டைக் காவல்காரன் இம்மையாவின் தூதனோ?...

இம்மையா: சோழ நாட்டு வீர மரபு எப்படியோ? ஆனால் இங்கே கலிங்கத்தில்

## அனைவருக்கும் எங்கள் பொங்கல் நல் வாழ்த்துக்கள்!




ஆறுமுகம் முத்திரை உள்ள

# ஆர். எஸ். பதி மருந்து

(REGD.)

தலைவலி, ஜலதோஷம், கைகால் வலி, ஜுரம் முதலிய வியாதிகளுக்கு சிறந்தது

**புட்டி 1க்கு விலை 75 காசுகள்**

எங்கள் இதர தயாரிப்புகளுக்கு விரிவான இலவச கேட்லாக் வேண்டுவோர் எழுதவும்

எங்கள் ஆர். எஸ். பதி மருந்து மூவர்ண அட்டைப் பெட்டிகளில் மட்டுமே விற்பனையாகிறது. காகிதத்தில் சுற்றப்பட்டு விற்பனையாவது கிடையாது

## போலிகளை வாங்கி ஏமாறுதீர்கள்

தயாரிப்பாளர்கள்:

## ஆர். எஸ். பதி அண்டு கோ.

(ஸ்தாபிதம் 1909)

த. பெ. எண் 99. 214 & 215 மேலமாசி வீதி. மதுரை

---

# ராம்தீர்த் பிரம்மி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கருநிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்கு குளிர்ச்சி அளித்து, ஞாபகசக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதியான நித்திரையை அளிக்கிறது.

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்கியமாக வாழ்வீர்கள்.

விலை ரூ. 3/- (தபால் செலவு உள்பட)

# SHRI RAMTIRTH YOGASHRAM

DADAR - BOMBAY-14

மதராஸ் டிப்போ 35 நைனியப்ப நாயக்கன் தெரு மதராஸ்-3

தூதர்களையும் வீரர்களையும் நாங்கள் ஒருமையில் விளிப்பதில்லை.

கருணை : வீரனுக்கு வணக்கம் செலுத்துவதுதான் எங்கள் தமிழ்ப் பரம்பரையின் பண்பு. ஆனால்...ஆனால்...

இம்மை : ஆனால் என்னவாம்?

கருணை : ஆனால் நீ வீரனா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. தூதன் என்று சொல்லிக் கொள்கிறாய். செய்தி கொண்டு வருவதால் மட்டும் ஒருவன் தூதனாக முடியாது. இம்மையா வீரன் என்பதை ஏற்றுக் கொள்கிறேன். போர்க்களத்தில் அவன் வீரம் தன்னை இனம் காட்டிக் கொண்டது. ஆனால் அவனைக் கலிங்க அரசனாக நான் கருதவில்லை. எனக்குத் தூது அனுப்புவதற்குப் போரில் தோற்றுப் பணிந்த கலிங்கத்தின் சார்பாகத் தூது அனுப்புவதற்கு அவனுக்கு உரிமை இல்லை. அவனை ஒரு கலகக்காரன் என்றே நான் கருதுகிறேன்.

பே. உடை : சேனைத்தலைவரே, இவனோடு என்ன வீண் பேச்சு?

கவிஞர் : இல்லை, இவர் என்ன சொல்கிறார் என்று கேட்போம். வீரரோ இல்லையோ, தூதரோ இல்லையோ, மனிதனுக்கு மனிதன் மரியாதை செலுத்த வேண்டாம் என்று தமிழ்ப் பண்பாடு என்றும் கூறியதில்லை.

கருணை : கவிஞரே இது அரசியல். இது போர்க்களத்துப் பூசல். ஆகவே இதில்...

கவிஞர் : தலையிட வேண்டாம் என்று சொல்கிறீர். இல்லையா? ஆனால் சேனை முதல்வரே, தமிழ் நாட்டுக்கு இலட்சிய அரசியல் வகுத்தது வள்ளுவர் கவிதை! இதை மறந்துவிட வேண்டாம். போர்க்களமும் கவிஞர்களாகிய எங்களுக்குப் புதியதன்று. களத்திலே நீர் கண்ட வெற்றியைப் பாடினேன். அந்த வெற்றியின் பெருமையைக் காப்பதற்காவது, நீர் செய்யும் தவற்றை எதிர்ப்பது என் கடமையாகிறது.

பே. உடை : (சினத்துடன்) கவிஞரே! என்ன பேசுகிறீர், யாரிடம் பேசுகிறீர் என்பது...

கருணை : பேட்டை உடையார், அமைதியாய் இரும். கவிஞர் பேசுவதில் தவறில்லை. அறத்தை எடுத்துக் காட்டுவதே அவருடைய கடமை.

இம்மை : பிறகு......நான் போகிறேன்.

கருணை : நீ கொண்டு வந்த செய்தி?

இம்மை : முன்னமேயே தெரிவித்தாகி விட்டது. எங்கள் தலைவர் இம்மையனாகாரு பணியமாட்டார். இதுவே கடைசி வார்த்தை.

கருணை : அப்படியானால் வீணாக இரத்தம் சிந்திக் கொலையைப் பெருக்கும் பொறுப்பு உம்முடைய தலைவர் இம்மையனாருடையது.

இம்மை : இரத்தம் சிந்துவது என்ன பெரிது? உயிரையே சிந்தும் பொறுப்பை நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம். ஆனால் முதலில் இரத்தம் சிந்தியது, ஒன்றுமறியாத ஏழைக் கலிங்க மக்களின் இரத்தத்தைச் சிந்தியது; அதோடு ஆயிரம் ஆயிரம் தமிழ் வீரர்களை மனைவி மக்களிடமிருந்து பிரித்து, கண்காணாக் கலிங்கத்தில் மாயச் செய்தது நீங்களா, அல்லது நாங்களா? இம்மையனா காரு அரசன் இல்லை. ஆகவே நான் தூதனில்லை என்று பேசினீர்கள். எங்கள் அரசனைப் போரிலே கொன்றது உங்கள் கொடுமையல்லவா? அவனை நீங்கள் கொன்று விட்டதால், கலிங்க மக்கள் எங்கோ உள்ள சோழனை அரசனாக ஏற்க வேண்டுமோ? இம்மையனாகாரு அரச பதவிக்குத் தகுதியற்றவராக இருக்கலாம்; ஆனால் மக்கள் ஒன்றுபட்டு அவரை அரசன் என்று ஒரே குரலில் அழைத்தால், இந்த ஒரு காரணத்தினாலேயே அவருக்குத் தகுதி கிடைத்துவிடுகிறது. இல்லையென்று சொல்வதற்கு நீங்கள் யார்?

பே. உடை : கலிங்க நாயே, வாயை அடக்கிப் பேசு. எங்களை யாரென்று கேட்கிறாய்? தமிழன் வேல்முனைக்குத் தோற்று, துங்கபத்திரைக் கரையைப் பாசறைக்குள் பதுங்கும் எலிகளா எங்களை யாரென்று கேட்பது? இதோ, தமிழ்வாள். உன் நாக்கைத் துண்டிக்கும். [வாளை உருவுகிறார்]

போர் வீரன் : (வாளை உருவி) பேட்டை ஐயா, இந்தச் சழக்கன் உடலைத் தொலைக்க நீங்கள் எதற்கு? கட்டளை இடுங்கள். ஒரு நொடியில் இவனை வீழ்த்துகிறேன். எடடா, கலிங்கா, உன் வாளை. உன்னை நொடியிலே தேய்த்து, உன் தலைவன் அந்த ஆணவப் பேய் இம்மையானின் கோட்டையை — கோட்டையாம் கோட்டை - எங்கள் தஞ்சை மதிலின் கைப்பிடிச் சுவருக்குக் கூட ஈடாகாத எலி வளை கோட்டையாம் - உங்கள் வளையைத் தீயிட்டுப் பொசுக்குவோம். பேட்டை ஐயா, உத்தரவு கொடுங்கள். சகோதரர்களே, தமிழ் வீரர்களே, நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?

வீரர்கள் : வேல், வேல். புறப்படு...... உடனே புறப்படு...கலிங்கன் கோட்டையைத் தரைமட்ட மாக்குவோம் ... ... வேல்...வேல் வேல்...வேல் வேல்...வேல் வேல் ......

[கருணாகரன் கையை உயர்த்துகிறான். அரவம் ஓய்கிறது.]

கருணை : (நிதானமாக) உடையார் வாளை உறையிலே போடும். கலிங்கத் தூதரே, இம்மையானை மக்கள் அரசனாக ஏற்றார்களா? ஏற்றால் அல்லவா அதைப்பற்றிப் பேச்சு! ஏதோ ஒரு சிலரை - போரிலே உடைந்து போய்க் கலங்கி, நிலை தெரியாது மயங்கிய ஒரு சிலரை மயக்கித் தன்னுடைய கையில் போட்டுக் கொண்டு, அவர்களுக்குத் தீங்கு செய்யும்......

> எவ்வாறு சூரியனால் தோற்றுவிக்கப்பட்ட மேகக் குவியல்கள் அச் சூரியனையே மறைப்பதுடன் அதன் ஒளியாலேயே தாம் விளக்கமுறுகின்றனவோ, அவ்வாறே, ஆத்மாவிலிருந்து தோன்றிய அகங்காரமே அந்த ஆத்மாவை மறைப்பதோடன்றி அதனால் துலக்கம் பெறுகின்றது.
>
> - ஸ்ரீ ஆதி சங்கரர் : விவேக சூடாமணி

# அழகின் அபிவிருத்தி

நீங்கள் "'ஹாஸலீன்' ஸ்னோ" உபயோகித்
தீர்களானால், வெய்யிலின் வெப்பமோ, காற்றோ,
மழையோ உங்களுடைய தோற்றத்திற்கு
யாதொரு கெடுதியும் விளைவிக்காது. கெடுதியற்ற
தன்மையுள்ள "'ஹாஸலீன்' ஸ்னோ"
உங்களுடைய சருமத்தை மிருதுவாகவும்
அழகாகவும் விளங்கச் செய்கிறது.
மற்றும் அது ஏமாற்றம் செய்ய
முடியாத பாக்கிங்கில் கிடைக்கிறது.




**"'HAZELINE' SNOW"** TRADE MARK

"'ஹாஸலீன்' ஸ்னோ"



ட்ரேட் மார்க்

ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு

BWY-4

இம்மை: இங்கா, எது இங்கு? சோழனுக்கு வழி வழி அடிமைகளாய், மனிதப் புழுக்களாய் வாழ்வதிலும் வேறு இங்கு எங்களுக்கு என்ன இருக்க முடியும்? மயக்கத்தில் ஏதோ இம்மையாளரு சூழ்ச்சி செய்கிறார் என்று பேசுகிறாய். ஆம், மயக்கந்தான். சுதந்திர மயக்கம், சுதந்திரப் பேருணர்ச்சியின் போதை. ஆனால் அதுவே தெளிவு, அதுவே அறிவு, அதுவே வீரம். நாடு பிடிக்கும் பேராசைப் பேய்க்கு அடிமையாகி, கலிங்க நாட்டில் புகுந்து, அரக்கரைப்போல் சூறையாடித் திரியும் உங்களுக்கல்லவா அறிவு மயங்கிப் போய்விட்டது. பண்பு செத்து விட்டது.... நாகரிகம் படைத்த பெரு மக்கள் என்று தமிழர்களை நினைத்தேன். "பெயக் கண்டும் நஞ்சுண்டவர்" என்று உலகம் வள்ளுவர் வாக்கைக் கடைப் பிடிக்கும் பண்புடையார் என்று எண்ணினேன். ஏமாந்தேன். எங்களையா - எங்கள் தாய்த் திருநாட்டைக் காக்க, இந்தத் தோல்விக் களைப்பிலும் பசியையும் எங்களையா மயக்கத்தில் உழல்வோர் என்று எண்ணுகிறாய்? கருணாகரா, உன்னை வீரனென்று நினைத்தேன், உன் சோழனுடைய பேராசைக்குக் கருவியாக நிற்பது மட்டுமே உன் குறை என்று கருதினேன். நீ எப்படியானாலும் என்ன, சதை வைத்துத் துண்டு துண்டாக்கினும் இந்தத் இம்மையா கலிங்கத்துக்குத் துரோகம் செய்ய மாட்டான், உன் வெற்றி வாளுக்கும் பணிய மாட்டான்.



[தலைப்பாகையை எடுத்து எறிகிறான்]

கருணா: (வியப்புடன்) இம்மையாவா?

[வீரர்கள் ஆரவாரம்]

வீரர்கள்: வேல்...வேல்...

போர் வீரன் 1: இம்மையா பிடிபட்டான்.

போர் வீரன் 2: கலகக்காரன் அகப்பட்டுவிட்டான்.

போ. வீ. 3: கலிங்கக் கோட்டை வீழ்ந்துவிட்டது.

எல்லோரும்: வேல், வேல்!

[பேட்டை உடையார் கருணாகரனோடு இம்மையாவின் அருகில் சென்று எச்சரிக்கையாக நிற்கிறார்]

கருணாகரன்: இம்மையாவா! அப்போதே நான் நினைத்தேன்...

இம்மை: ஆம், இம்மையாதான். தனி ஒருவனாக இங்கு நிற்கிறேன். என் நாட்டுக்காகச் சோழனுடைய பேராசையை எதிர்த்ததுதான் உங்கள் பார்வையில் என் குற்றம். எங்கள் பார்வையில் அதுவே இந்த ஏழையின் பெருமை. உன் போர்வீரர்கள் என்னை வெட்டி வீழ்த்தத் துடிக்கிறார்கள். செய்யட்டும். ஆனால் இந்தத் இம்மையாவின் உதிரத்திலிருந்து ஆயிரம் ஆயிரம் இம்மையாக்கள் முளைப்பார்கள். ஆம், இவனுடைய ரத்தத்தில் ஒவ்வொரு துளியிலிருந்தும் கோடி கோடி வீரமக்கள் தோன்றுவார்கள். கருணாகரா, சோழனுடைய பேய்க் கையே, உன்னால் ஆனதைச் செய். ஆனால் தனியாற்றுக் கோட்டை மட்டும் வீழும் என்று எதிர்பாராதே. கலிங்கம் பணியும் என்றும் கனவு காணாதே.

வீரர்கள்: வேல்... வேல்......

படைவீரன்-1: அதையுந்தான் பார்த்து விடுவோம். தனியாற்றுக் கோட்டை இன்று பொழுது சாய்வதற்குள் சாய்ந்து விழா விட்டால்...

படைவீரன் - 2: சாய்ப்போம் ... வேல் வேல்......

வீரர்கள்: வேல், வேல், வேல்!

பே. உடையார்: நிறுத்துங்கள், சேனாதிபர் பேசுகிறார்.

கருணா: (அமைதியாக) தமிழ் வீரர்களே, என்ன வேண்டும் என்கிறீர்கள்?

போர். வீ-1: போரிட வேண்டும். தனியாற்றுக் கோட்டையைத் துகள் துகளாக்க வேண்டும்.

போ. வீ. 2: ஆம், ஆணை கொடுங்கள். படைகள் புறப்படுவதற்கு இப்பொழுதே ஆணை கொடுங்கள். போர், நாங்கள் வேண்டுவது போர், போர், போர்.

எல்லோரும்: போர் ... போர் ... போர்...

ஒரு குரல்: வெற்றிவேல்.

எல்லோரும்: வீரவேல்......வேல்...வேல்.

கருணா: இம்மையாளரு, நீர் என்ன சொல்கிறீர்?

இம்மை: (நகைத்து) போருக்குக் கலிங்கம் அஞ்சாது. கடைசி வரையில், மூச்சுள்ள வரையில்......போராடுவோம். வெற்றியைப் பற்றி நாங்கள் கவலைப்படவில்லை. சோழன் கையாளான நீதான் கவலைப்பட வேண்டும்.

பே. உடை: சேனாதிபதியே, கலிங்கன் வாய்க்கு வந்ததைப் பேசுகிறான். நாங்கள் கேட்டுக் கொண்டிருக்க வேண்டுமா?

கருணை: சற்று முன் நீங்கள் அப்படிப் பேசினீர்களே, நான் கேட்டுக் கொண்டிருக்கவில்லையா? ஊருக்கு, தமிழகத்துக்குத் திரும்பிச் செல்லவேண்டும் என்று உங்கள் சேனாதிப விடத்தில் வற்புறுத்தினீர்களே. அதைக் கேட்டுக் கொண்டுதானே இந்தக் கருணைகரன் இருந்தான்.

பே. உடை: அது தவறு, சேனாதிபரே, மன்னிக்க வேண்டும். இந்த ஏழை ஏதோ படை வீரர்களின் உணர்ச்சியின் குரலுக்கு மதிப்புக் கொடுத்துப் பேசியது தவறுதான். படைவீரர்களே, ஊருக்குத் திரும்புவோமா?

எல்லோரும்: (வேலை உயர்த்தி) வேண்டாம், வேண்டாம். போர்...போர்...வேண்டுவது போர்.

கருணை: என் நெஞ்சம் குளிர்ந்தது. வீரர்களே போர்தானா முடிவு?

எல்லோரும்: ஆம், ஆம்.

கருணை: ஊருக்குத் திரும்புவது?

பல குரல்கள்: பிறகு பார்த்துக் கொள்வோம் ...காவிரி வற்றிப்போய் விடாது... துனியாற்றைத் தூர்த்த பிறகுதான் எங்களுக்குக் காவிரி...

எல்லோரும்: வேல், வேல்!

கருணை: என் நெஞ்சம் குளிர்ந்தது. ஊரை எண்ணி எங்களை மறந்து விட்டீர்களோ என்று கலங்கினேன். வீரம் அணையவில்லை என்பது இப்போது தெரிகிறது. தமிழன் வீரமும் அணையுமா? கவிஞரே நீங்கள் ஏதோ...

கவிஞர்: ஆமாம் வீரம் என்பது ஒரு நந்தா விளக்கு. ஆனால்...ஆனால் தமிழன் வீரம் மட்டுமா அப்படி? வீரம் எங்கு சுடர் விட்டாலும் அது அணையாது. இந்தத் இம்மையாகாரும் ஓர் உண்மை வீரன்.

கருணை: உண்மைதான். தோல்வியின் கையும் இம்மையாகாருவின் வீரத்தை அணைக்கவில்லை. நாம் காவிரிக் கரைக்குத் திரும்பத் துடித்தோம். அவர் இந்தத் துனியாற்றங்கரைக் காட்டில் சொந்த ஊரில் சுதந்திரம் கேட்கிறார். தமிழன் வீரம் போர்க்களத்தில் வெற்றியாய் மலர்ந்தது. இன்று அதுவே நாட்டுப் பற்றெனும் நவையிலா ஒளியாய்த் திரண்டது. இந்த ஒளியின் பெருக்கிலே இம்மையாகாருவின் வீரப் பெருமையை உணர்கிறது. அதற்கு வணக்கமும் செய்கிறது. பேட்டை உடையார், இம்மையாகாருவை உடனே அழைத்துச் சென்று நமது படை வீரர்களைக் கொண்டு அவருக்கு வீர வணக்கம் செலுத்தி, அவருடைய கோட்டைக்கு அரச மரியாதையோடு அனுப்பும்.

இம்மையா: கருணாகரரே! உம்முடைய இதயத்தை அறியாமல் என்னுடைய நாட்டுப் பற்றின் காரணமாக, ஏதேதோ பேசி விட்டேன். அதையெல்லாம்...

கருணை: தவறென்றும் பேசவில்லை. தமிழன் கலிங்கத்தைப் போரில் கைப்பற்றினான். உண்மைதான். ஆனால் கலிங்க மக்களையும் உம்மையும் தன் அன்பினால் வெற்றி கொள்ள முடியுமா என்று பார்க்கிறான். இதற்கு உமது தாய்நாட்டுப் பற்று இடந் தருமல்லவா?

இம்மையா (தழுதழுத்த குரலில்): இதுவல்லவா வீரம்? கருணாகரரே...

கருணை: கருணாகரன் இல்லை. உம்முடைய சகோதரன். கலிங்க நாட்டைச் சீரழித்தேன் என் கடமை உணர்ச்சியால். அது மன்னிக்க முடியாததுதான். மறந்து விடும்.

[வீரர்கள் ஆரவாரம். 'வீரம் வாழ்க' 'தமிழகம் வெல்க', 'கலிங்கம் வாழ்க' என்ற கோஷங்கள்.]

கருணை: பேட்டை உடையார்! இன்று மாலை நமது படைகள் காவிரி திரும்பும்.

கவிஞர்: இதைத்தான் விரும்பினேன். நமது நாடு, நமது நாடு என்று கருதி, போரிட்டுப் போரிட்டு "யாதும் ஊரே யாவரும் கேளிர்!" என்ற பழந்தமிழ் இலட்சியத்தை நாம் மறந்து விடுவோமோ என்று பயந்தேன். இல்லை மறக்கவில்லை. தமிழ் வீரம் மனிதப் பண்பின் உயர்வையே காட்டும். மறவர் அன்புக்கும், வீரத்துக்கும் பெருமை தரும் உலகம் அனைத்தையும் அணைக்கும். போர் முடிந்தது. அது என்றும் முடிவுற்றே இருக்கட்டும். அன்பெனும் ஒளி புலர்ந்தது. அது என்றென்றும் நின்று நிலவட்டும். தொண்டைமான், தொண்டைமானாக வாள் முனையில் நீ பெற்ற வெற்றியை நான் பாடினேன். இன்று கருணாகரனாய், அன்பின் முனையில், நீ பெற்றது அதனினும் மகத்தான வெற்றி. இதன் புகழ் என்றென்றும் வாழும். போர் முடிந்தது. புண்ணியம் புலர்ந்தது. இனிக் காவிரி திரும்பலாம். பொன்னித் தாய் நம்மை வரவேற்பாள். அன்பும் வீரமும் ஒருங்கே படைத்த ஆண்மைத் தமிழர் என்று நம்மை வரவேற்பாள். வாருங்கள், போகலாம்.

எல்லோரும் (பாடுகிறார்கள்):

கருணாகரத் தொண்டைமான்,
வாழ்க! வாழ்க!!
வீரன் இம்மையா, வாழ்க! வாழ்க!!
காவிரித் திருநாடு, வாழ்க! வாழ்க!!

(திரை)

---

யோகத்தின் முதல் வாசல் பேச்சை அடக்குவதும், உடைமையைத் துறப்பதுமேயாகும்.

-ஸ்ரீ ஆதி சங்கரர்: விவேக சூடாமணி

---

மேகங்களை ஒருங்கு சேர்ப்பது காற்று; மேகங்களைச் சிதற அடிப்பதும் காற்றுதான். மனிதனின் பந்தங்களுக்குக் காரணமாயிருப்பது மனசு; மனிதனின் விடுதலைக்குக் காரணமாவதும் அதே மனசுதான்.

– ஸ்ரீ ஆதி சங்கரர்; விவேக சூடாமணி

# எச்சமயத்திலும் எழிலோங்கச் செய்வது

மைசூர் கவர்ன்மெண்டின்
தூய ஸில்க்குகள், புடவை
களை அணிந்து கொண்டு
நீங்கள் வீட்டிலிருந்தாலும்
சரி அல்லது விருந்துகள்
மற்றும் பொது வைபவங்
களில் கலந்துகொண்டாலும்
சரி, அவைகள் உங்களுக்கு
அதிகஅழகை அளிக்கின்றன.
கண்ணுக்கினிய பற்பல
கலர்களிலும் மிக நவீன
பார்டர்களிலும் மைசூர்
கவர்ன்மெண்ட் ஸில்க்குகள்
ஏராளமாகக் கிடைக்கிறது.

உங்கள் வியாபாரிடம்
மைசூர் கவர்ன்மெண்ட்
ஸில்க்குகளையே ஞாபக
மாகக் கேளுங்கள்





Hallmark of quality

கவர்ன்மெண்ட் ஸில்க் வீவிங் பாக்டரி

மைசூர்

# ஆனைக்கா அகிலாண்டேசுவரி

தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான்

ராமனுக்கும் சீதைக்கும் மிதிலையில் திருமணம் நடக்கிறது. அவர்களது மணக்கோலத்தைப் பாடுகிறான் கவிச்சக்கரவர்த்தி கம்பன்.

மன்றலின் வந்து
மணித் தவிசு ஏறி
வென்றி நெடுந்தகை
வீரனும் ஆர்வத்து
இன்துணை அன்னமும்
எய்தி இருந்தார்
ஒன்றிய போகமும்
யோகமும் ஒத்தே

என்பது பாட்டு. இந்தப் பாட்டைப் படிக்கும்போதெல்லாம் என் உள்ளத்தில் ஒரு சந்தேகம் எழுவது உண்டு. எப்படி ராமன் சீதை இருவரும் போகமும் யோகமும் ஒன்றிய நிலையில் இருந்தார்கள்? எப்படி இருக்க முடியும் என்றெல்லாம் எண்ணுவேன் நான். இந்தச் சந்தேகம் என் உள்ளத்தில் மட்டுமே எழவில்லை. அன்னை பார்வதிக்குமே எழுந்திருக்கிறது. ஆகவே யோகம் போகம் அவற்றின் உண்மைகளைப் பற்றி ஒரு சந்தேகத்தையே கிளப்பி, அதற்கு விடையை இறைவனிடமே கேட்டிருக்கிறாள். அவரும் உடனே அதற்கு விடை சொல்லவில்லை. 'நீ பூலோகம் சென்று அங்குள்ள ஞானத்தலத்தை அடைந்து தவஞ்செய். அங்கு நான் வந்து உனக்கு உபதேசம் செய்து உன் சந்தேகத்தைநிவர்த்தி செய்து வைக்கிறேன்' என்று உத்தரவு போட்டிருக்கிறார். இறைவன் கட்டளைப் படியே ஞானபூமியை நாடி வருகிறாள் அன்னை. காவிரிக்கரையிலே முனிவர்களெல்லாம் இருந்து தவம் செய்யும் ஒரு சோலையைக் கண்டு அங்கு தவம் செய்ய முனைகிறாள். இன்பத்தைத் தருகின்ற முத்தியின் தன்மையைத் தெரிந்து கொள்ள வந்தவள் ஆதலின் இனிய சுவை உடைய நீரையே திரட்டி லிங்கத் திருவுரு அமைத்துக் கொள்கிறாள். அந்த அப்புலிங்கத்துக்கே அபிஷேகம் முதலியன செய்து ஆராதனை பண்ணுகிறாள். இவள் தன் தவத்துக்கு இரங்கி அண்ணல் இந்தக் காவிற்கு வந்து சந்தேகத்துக்கு விளக்கம் கூறுகிறார். அவர் கூறும் விளக்கம் இதுதான். 'உலகங்கள் எல்லாம் என் அருள் வழியே நடப்பன. நடனத்தைப் பிறருக்குக் கற்பிக்க விரும்பும் நடன ஆசிரியன் முதலில் தானே நடனம் ஆடிக் காட்டுதல் போல, உலக மக்களுக்கு யோக நிலையையும் போக நிலையையும் பயிற்றுவிக்க நானே நடத்திக் காட்ட வேண்டியிருக்கிறது. உலகில் உள்ள ஆன்மாக்களெல்லாம் போகத்தை நுகர உன்னை மணந்து தழுவிப் போகியாகவும், அதேசமயத்தில் யோகசித்தி பெற்று மெய்ஞ்ஞானத்தை அடைந்து உலக மக்கள் முத்தி பெற யோகியாகவும் மாறுகிறேன்' என்கிறார். ஆம்! யோக நிலையில் இருக்கும் இறைவன் போகியாகவும் காட்சி தரும் ரகசியம் இதுதான் என்று அன்னை அறிகிறாள். இந்த விளக்கத்தை அன்னை அகிலாண்டேசுவரி பெற்ற இடம் தான் திருஆனைக்கா. அந்த ஆனைக்காவுக்கே செல்கிறோம் நாம் இன்று.

ஆனைக்கா காவேரிக்கரையில், காவிரிக்கும் கொள்ளிடத்துக்கும் இடையில் உள்ள தீவில் உள்ள தலம். திருச்சி ஜங்ஷனிலிருந்து வடக்கே நாலுமைல் தொலைவில் இருக்கிறது. ஸ்ரீரங்கம் ஸ்டேஷனில் இறங்கி, கிழக்கே நாலு பர்லாங்கு நடந்தால் கோயிலுக்கு வந்து சேரலாம். ஆனைக்காவை, திருவானைக்காவல் என்றும் திருவானைக்கோயில் என்றும் மக்களும் நெடுஞ்சாலைப் பொறியர்களும் அழைப்பார்கள். ஆனைக்கா என்றால் யானை வழிபட்ட காடு என்று தான் அர்த்தம். அதனாலேயே அத்தலத்தை கஜாரண்யம் என்றும் புராணங்கள் கூறும். இத்தலத்துக்கு ஏன் ஆனைக்கா என்று பெயர் வந்தது என்று தெரியத் தல வரலாற்றைக் கொஞ்சம் படிக்க வேண்டும். கைலையிலுள்ள இரண்டு கணநாதர்கள் ஏதோ சாபம் பெற்ற காரணத்தால் யானையாகவும் சிலந்தியாகவும் வந்து பிறக்கிறார்கள் இந்த ஞானபூமியிலே. இருவரும் அன்னை அகிலாண்டேசுவரி ஸ்தாபித்த அப்புலிங்கத்தை வழிபடுகிறார்கள். லிங்கமோ ஒரு நல்ல நாவல் மரத்தடியில் காவிரிக்கரையில் இருக்கிறது. ஆற்றுத் தண்ணீரைத் தன் துதிக்கையாலே மொண்டு கொண்டு வந்து இறைவனுக்கு அபிஷேகம் செய்கிறது யானை. மரத்தின் தழைகள் இறைவன்மேல் விழாதவாறு நூல் பந்தல் இடுகிறது சிலந்தி. சிலந்திக்கு யானைமீது கோபம். ஆதலால் சிலந்தி யானையின் துதிக்கையுள் நுழைந்து கபாலம்வரை ஏறி யானையைக் கடிக்கிறது. யானை வேதனை தாங்க மாட்டாமல் தன் துதிக்கையை ஓங்கி அடிக்கிறது. அதனால் சிலந்தியும் மடிகிறது. யானையும் துடிதுடித்து விழுந்து இறக்கிறது. ஆனால் இவர்கள் இருவரது பக்தியையும் மெச்சி, இவர்களுக்கு முக்தி அளிக்கிறான் இறைவன். முக்தி பெற்ற யானையின் ஞாபகார்த்தமாகவே இத்தலம் ஆனைக்கா ஆகிறது. சிலந்தி மறு பிறப்பில் கோச்செங்கட் சோழனாகப் பிறக்கிறது. அந்தப் பிறவியிலும் யானைமீது கொண்டிருந்த பகையை மறக்காமல், யானை ஏற இயலாத மாடக் கோயில்களாகவே எழுபது கட்டுகிறான் சோழமன்னன். எழுபது கோயில்களில் படி ஏற இயலாத யானையும் ஒரு கோயிலைத் தன்னுடையதாக - ஆனைக்காவாகவே - ஆக்கிக் கொள்கிறது. இத்தனையையும் கூறுகிறார் நாவுக்கரசர்.

சிலந்தியும் ஆனைக்காவில்
திருநிழல் பந்தல் செய்து
உலந்து அவண் இறந்தபோதே
கோச் செங்கணனுமாக



ஏகபாத திரிமூர்த்தி

கலந்தநீர் காவிரிசூழ்
சோணாட்டு சோழர்தங்கள்
குலந்தனில் பிறப்பித்திட்டார்
குறுக்கை வீரட்டனாரே

என்று திருக்குறுக்கை என்னும் தலத்தில் பாடுகிறார்.

இனி கோயிலுள் செல்ல முனையலாம். நல்ல தென்னஞ் சோலைக்கு நடுவிலே கோயில் அமைந்திருக்கிறது. கோயிலுக்குக் கீழ்ப்புறத்திலே உள்ள ஊர்களின் பெயரே, திருவளர் சோலை, உத்தமர்சேரி என்று. இந்தப் பெயர்களைச் சொல்லும்போதே நா இனிக்கும். இந்தக் கோயிலுக்கு ஐந்து பிராகாரங்கள். மேற்கேயிருந்து கிழக்கு நோக்கி வரும்போது முதல் இரண்டு பிராகாரங்களிலும் உள்ள கோபுர வாயிலைக் கடந்துதான் வரவேண்டும். அந்தப் பிராகாரங்களில் மக்கள் குடியிருக்கும் வீடுகள் நிறைந்திருக்கும். மூன்றும் பிராகாரத்திலிருந்துதான் கோயில் மண்டபங்கள் ஆரம்பமாகின்றன. என்றாலும், நான்காம் பிராகாரத்து மதில்தான் பெரிய மதில். இந்த மதிலையே திருநீற்று மதில் என்று கூறுகிறார்கள். விசாரித்தால் இம்மதில் கட்ட மன்னன் முனைந்தபோது, சித்தர் ஒருவர் தோன்றி வேலை செய்தவர்களுக்கெல்லாம் திருநீற்றையே கூலியாகக் கொடுத்திருக்கிறார். அத்திருநீறே பின்னர் ஒவ்வொருவர் கையிலும் பொன்னாக மாறியிருக்கிறது. (இப்போதும் கோயிலில் நமக்குக் கொடுக்கும் திருநீறெல்லாம் பொன்னாக மாறுகிறது என்று மட்டும் ஆகிவிட்டால் கோயிலுக்கு வருவார் தொகையே பெருகிவிடாதா?) இந்த மதிலை எல்லாம் கடந்து வந்தால் வடபக்கம் ஆயிரக்கால் மண்டபத்தைக் காண்போம். அதற்கு எதிரே ஒரு பெரிய மண்டபத்தை அடுத்துத் திரிமூர்த்திகள் கோயில். அங்கு சென்று படி ஏறினால் ஓர் அதிசயம் காத்து நிற்கும். ஆம்! பிரும்மா, விஷ்ணு, சிவன் எல்லோருமே லிங்கத் திருவுருவிலே தனித் தனி கோயிலில் இருப்பார்கள். இந்த மூவரும் சேர்ந்த திரு உருவம் ஒன்றும் அங்குள்ள தூணில் இருக்கும். அதனையே ஏகபாத திரிமூர்த்தி என்று கூறுவார்கள். இத் திருமூர்த்திகளையும் வணங்கியபின் துவஜ ஸ்தம்ப மண்டபத்துக்கு வருவோம். அந்த மண்டபம் பிரும்மாண்டமான மண்டபம். அம்மண்டபத்தை நான்கு பெரிய தூண்கள் தாங்கி நிற்கின்றன. ஒவ்வொரு தூணுக்கும் மேல் எட்டு சிங்கங்கள் மண்டபத்தையே தாங்கி நிற்கும். மேலும் இத்தூண்களில் எல்லாம் தல வரலாற்றுகளைத் தெரிவிக்கிற சிற்ப வடிவங்கள் உண்டு. இவற்றை யெல்லாம் கண்டு அதிசயித்த பின்னரே அடுத்த சோமாஸ்கந்த மண்டபத்துக்குச் சென்று அந்தப் பிராகாரத்தைச் சுற்றவேணும். அப்படிச் சுற்றிவரும்போது கீழ்ப்புறம் கருவறை மேல் கட்டப்பட்ட விமானத்தை ஒட்டி வெண்நாவல் மரம் ஒன்று விரிந்து பரந்திருக்கும். இதனை இரும்பு அழி போட்டுப் பாதுகாத்து வைத்திருக்கிறார்கள். இங்கு சம்பு முனிவர் இருந்து தவம் செய்திருக்கிறார். இந்த மரத்தின் அடியிலேயே இறைவன் வதிவது காரணமாக இத்தலத்துக்கே சம்புகேசுவரம் என்ற பெயரும் நிலைத்திருக்கிறது. இதனையும் கடந்து மேற்கு நோக்கி வந்தே கருவறை வாயில் செல்லவேணும். இறைவன் மேற்கே பார்க்க லிங்க வடிவில் மிகத் தாழ்ந்த இடத்தில் இருக்கிறார். அவர் சந்நிதிக்குமுன் ஒன்பது துவாரங்கள் கொண்ட ஒரு கல் பலகணி உண்டு. அதன் வழியாகத் தரிசித்த பின்னரே தென்பக்கம் உள்ள வாயில் வழியாக அந்தராளம் செல்ல வேணும். அங்கு நான்கைந்துபேர்கள் நிற்பதே மிக்க சிரமம். ஆதலால் முன் சென்றவர் எல்லாம் வெளிவரும் வரையில் காத்திருந்தே பின் சென்று வணங்குதல் கூடும். இங்கோ எப்போதும் நீர் பொங்கிக் கொண்டே யிருக்கும். அர்ச்சகரும் தண்ணீரை எடுத்து வெளியே கொட்டிக் கொண்டே யிருப்பார். அன்னை பிடித்தமைத்த அப்புலிங்கம் அல்லவா, அங்கு நீர் பொங்கி வழிவதில் வியப்பு என்ன? இப்படி அப்பு வடிவிலும், லிங்க வடிவிலும் இறைவனை வணங்கி வெளியே வரும்போது,

'தென்னானைக் காவானை தேனைப்
பாலை, செழுநீர்த்திரளைச்
சென்று ஆடினேனே

என்று நாவுக்கரசரோடு சேர்ந்து நாம பாடிக்கொண்டே வரலாம்.

இனி நாம் கிழக்கு நோக்கி நிற்கும் அகிலாண்டேசுவரி சந்நிதியை நோக்கி விரையலாம். இத்தலத்திலேயே இறைவனும் அப்பு லிங்கத்தைவிட அருள் பாலிக்கும் பெருமை உடையவள் அகிலாண்டநாயகிதான். அவள் 'அகிலாண்டகோடி ஈன்ற அன்னையே என்றும் பின்னரும் கன்னி என மறை பேசும் ஆனந்த ரூப மயில்.' ஆதலால் மற்றப் பிராகாரங்களை எல்லாம் கடந்து அவள் சந்நிதிக்கே வந்து சேரலாம். அவளை எதிர்நோக்கி இருப்பவர் சங்கராச்சாரிய சுவாமிகள் ஸ்தாபித்த விநாயகர். அன்னையின் வடிவம் நல்ல கம்பீரமான வடிவம், கருணை பொழிகின்ற

# ஆதரவுடன் சீராட்டி
# ஆஸ்டர்மில்க் பாலூட்டி...

நீங்கள் பெற்ற செல்வம்...அரவணைக்கும் அன்புமடியே அவன் அரசாளும் இன்ப உலகம்...ஆளப் பிறந்தவனும் அவனது ஆரோக்கியத்தை மதிப்பரிய மாணிக்கமாகப் போற்றி வளர்க்கும் பொறுப்பை, தூய்மையான பாலுணவாகிய ஆஸ்டர்மில்க் வசம் ஒப்படைத்த உங்கள் உள்ளத்திலே திருப்தி நிலவும். ஆம், சிறு குழந்தைகளுக்கென்றே தயாரிக்கப்படும் ஆஸ்டர்மில்க், தாய்ப்பாலுக்கு நிகரானது.



பாப்பாவின் பசியும் ஜீரண சக்திக்கேற்றவாறு பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது ஆஸ்டர்மில்க். மேலும், இரத்தசோகை ஏற்படாமல் பாதுகாப்பு தக்கான அதிகப்படி அயச் சத்தும், தனி வைட்டமின் 'டி'யும் அதில் சேர்க்கப்பட்டுள்ளன.

**தாய்ப் பாலுக்கு நிகரானது**

---

இலவசம்! 'ஆஸ்டர்மில்க் புத்தகம்' (ஆங்கிலத்தில்)..குழந்தைப் பராமரிப்பு நூல். 50 ந. பைசாவிற்குத் தபால்-வில்லைகள் இணைத்து எழுதுக:
ஆஸ்டர் மில்க், தபால் பெட்டி எண் 2420, சென்னை-2,

---

OS.5-50-M TM



ஆனைக்கா கோபுர வாயில்

திருமுகம். வணங்கும் அன்பருக்கெல்லாம் அட்டமாசித்திகளை அருளுகின்றவள். இவ்வன்னையைத் தாயுமானவர் வணங்கி யிருக்கிறார், பாடி யிருக்கிறார்.

அட்ட சித்தி நல் அன்பருக்கு அருள
விருதுகட்டிய பொன் அன்னமே
அண்டகோடி புகழ்காவை வாழும்
அகிலாண்டநாயகி என் அம்மையே

என்பது அவரது பாட்டு. இந்த அம்மையே இறைவனைப் பிரதிஷ்டை செய்து பூஜித்ததாக வரலாறு. அதனால் இன்றும் உச்சிக் காலப் பூஜையின் போது இந்த அம்மன் கோயில் அர்ச்சகர் பெண் வேடம் தரித்து இறைவனைப் பூஜிக்கிறாராம்! ஆம். திருவாரூரில் அர்ச்சகர் தேவேந்திரனைப் போல ராஜ கம்பீர உடை அணிந்து தியாகராஜரைப் பூஜிப்பது போல: இந்த அப்புலிங்கம் என்னும் அமுதலிங்கரும் அன்னை அகிலாண்டநாயகியும் தங்கள் சொத்தைப் பராமரித்துக் கொள்வதிலே மிக்க அக்கறை உடையவர்கள் என்றும் தெரிகிறது. அதற்கு ஒரு சிறு கதையும் இருக்கிறது. அக்காலத்தே உறையூரிலிருந்து அரசாண்ட சோழ மன்னன் ஒருவன். இந்த அன்னையையும் அத்தனையும் வழிபட வந்திருக்கிறான் தன் மனைவியுடன். மனைவியின் கழுத்தில் கிடந்த முத்தாரத்தை இறைவனுக்கு அணிந்தால் அழகாயிருக்குமே என்று எண்ணியிருக்கிறான். இந்த எண்ணத்தோடேயே வருகிற வழியில் காவிரியில் நீராடி இருக்கிறார்கள் அரசனும் அரசியும். குளித்து எழுந்தால் அரசி கழுத்தில் இருந்த முத்தாரத்தைக் காணோம். கழுத்திலிருந்து நழுவி ஆற்றில் விழுந்திருக்கிறது. தேடிப் பார்த்திருக்கிறான் அரசன்; கிடைக்கவில்லை. பின்னர் சோர்வுடனேயே கோயிலுக்கு வந்திருக்கிறார்கள் இவர்கள். சந்நிதியில் வந்து சேர்ந்த போது அங்கு இறைவனுக்குத் திருமஞ்சனம் ஆட்டுகிற நேரமாக இருந்திருக்கிறது. காவிரியிலிருந்து குடத்தில் நீர் கொண்டு வந்து திருமுழுக்கு நடக்கிறது. என்ன அதிசயம்! அந்தக் குடத்துக்குள்ளிருந்து முத்தாரம் இறைவன் முடிமேலேயே விழுகிறது. மன்னனும் அரசியும் இறைவனது அளப்பரிய கருணையை வியக்கிறார்கள்.

வழக்கமாக எல்லாச் சிவன்கோயில்களிலும் நடக்கும் திருவிழாக்கள் இக் கோயிலில் உண்டு. இத்துடன் பங்குனி மாதம் சித்திரை நாளில் **பஞ்சப்பிராகார உத்சவம்** என்று ஒன்று சிறப்பாக நடைபெறும். அன்று ஒரு வேடிக்கை; இறைவன் பெண் வேடத்தோடும் இறைவி ஆண் வேடத்தோடும் திருவீதி உலா வருவார். ஏன் இந்த வேடம் இவர்கள் அணிகிறார்கள் என்பதற்கு ஒரு புராண வரலாறு உண்டு. பிரமன் தான் படைத்த பெண்ணொருத்தியின் அழகிலே மயங்கி நிறை அழிகின்றான். அதனால் படைத்தல் தொழிலே செய்ய முடியாமல் நிற்கிறான். தன் தவறை உணர்ந்து அதற்கு மன்னிப்புப் பெறத் தவம் செய்கிறான். தவத்துக்கு இரங்கிய இறைவன் இறைவியோடு பிரமன் முன்பு எழுந்தருள்கிற போதுதான் இப்படி வேடம் தரித்து வந்திருக்கிறார்கள். ஆம். இறைவனுக்கு ஒரு சந்தேகம், இந்தப் பிரமன் இறைவியின் அழகைக் கண்டு மோகித்தால் என்ன செய்வது என்று. இந்த வேடத்தில் இவர்களைக் கண்ட பிரமன் வெட்கித் தலைகுனிகிறான். பின்னர் அவன் விரும்பிய வண்ணமே அருள் பெறுகிறான். இந்தச் சம்பவத்தை நினைவூட்டவே இந்த பஞ்சப் பிராகார உற்சவம், அதில் இந்த வேடம்!

இத் தலத்துக்குச் சம்பந்தர், அப்பர், சுந்தரர் மூவரும் வந்திருக்கிறார்கள். சம்பந்தர் இத் தலத்தில் இருந்து கொண்டே கயிலாயம், மயேந்திரம், ஆரூர் முதலிய தலங்களையும் நினைந்திருக்கிறார்; பாடி யிருக்கிறார்.

மண்ணது உண்ட அரிமலரோன் காணு
வெண்ணாவல் விரும்பு மயேந்திராரும்
கண்ணது ஓங்கிய கயிலையாரும்
அண்ணல் ஆரூரர் ஆதி ஆனைக்காவே

என்பது அவரது தேவாரம். செழு நீர்த்திரளாம் அப்புலிங்கரை அப்பர் பாடியதைத் தான் முன்பே கேட்டிருக்கிறோமே. சுந்தரரும்

அறையும் பூம்புனல் ஆனைக்
காவுடை ஆதியை, நாளும்
இறைவன் என்று அடி சேர்வார்
எம்மை ஆளுடையாரே.

என்று பாடிப் பரவி யிருக்கிறார். இப்பாடல்களை யெல்லாம் பாடிக்கொண்டே கோயிலை வலம் வரலாம்; வெளியேறியும் வரலாம்.

இக்கோயிலில் நூற்று ஐம்பத்து நான்கு கல்வெட்டுகள் இருக்கின்றன. அவைகளை ஆராய்ந்து இக் கோயிலைக் கட்டியவர்கள், நித்திய நைமித்தியங்களுக்கும், நந்தா விளக்குகளுக்கும் நிபந்தங்கள் ஏற்படுத்தியவர்களையும் பற்றித் தெரிந்து கொள்ளலாம். பிற்காலத்து சோழர், பாண்டியர், ஹொய்சலர், விஜயநகர மதுரை நாயக்க மன்னர்களைப்பற்றி எல்லாம் பலப்பல கல்வெட்டுகள். ஹொய்சல மன்னர்களைப் பற்றிய கல்வெட்டுகள் அதிகம். சென்ற 1960-ம் வருஷம் சிறப்பாகக் குடமுழுக்குவிழா நடந்திருக்கிறது. காஞ்சி காமகோடி பீடம் சங்கராச்சார்ய ஸ்வாமிகளே இருந்து நடத்தியிருக்கிறார்கள்.




**Pertussin**

**COUGH SYRUP**

கக்குவான் இருமலுக்கும் மற்றும் சகலவித இருமல்களுக்கும் பெர்ட்டுஸின் காப் ஸிரப் உபயோகப் படுத்துங்கள். இது இளைஞர்களுக்கும் முதியவர்களுக்கும் கைகண்ட மருந்து.



பிராங்க் ராஸ் அண்டு கம்பெனி லிமிடெட்
கல்கத்தா

GP

**ஐடெக்ஸ் கண் மை**








**அரவிந்த் பிந்தி**
குங்கும வாசனை சாந்து!

**நெ·பால்** நேர்த்தியான நெயில் பாலிஷ்

**அரவிந்த் லாபரட்டரீஸ்,**
P.B.1415..........மதராஸ்-17

உயர்தரக
**வெகுமதி சாமான்களுக்கு**




பெங்கால் பாட்டரி சாமான்களுக்கு தென் இந்தியாவின் சோல் ஏஜண்டுகள்

**கிளைகள்:- எர்ணாகுளம், ஹைதராபாத், பம்பாய் & விஜயவாடா.**




# டாட்ஜ்

## டீசல்கள்




**ஸ்ரீ பிரிமியர்**
**ஆடோமொபைல்ஸ் லிமிடெட்**
பம்பாய்

உங்கள் அருகாமையில்
உள்ள டீலர்களை
விசாரியுங்கள்

# சொர்க்கத்தின் நிழல்

ஜெகசிற்பியன்

## அத்தியாயம் ஐந்து

அந்த வீட்டின் வாசலில் கால் வைத்ததுமே, தேவகியின் மனம் ஓர் இன்பச் சிலிர்ப்புற்றது. பனிக்கட்டியின் மீது நடப்பதுபோல் பாதங்கள் கூசிக் குறுகுறுக்க, தயக்கத்துடன் வாசற்படிகளைக் கடந்து, வராந்தாவில் ஏறி நின்றாள். விடியற் சாம நேரத்தில் மணம் கமழப் பூத்துக் குலுங்கும் முல்லைப் பந்தலின் கீழே போய் நிற்பது போன்ற உணர்ச்சி! செவ்வரி படர்ந்த அவள் செவி மணத்தது!

இதுவரையில் சோகமயமாய் இழைந்து கொண்டிருந்த குழலோசை மெல்ல மெல்லத் தேய்ந்து முடங்கியது. அதன் பின் அதற்கு முற்றிலும் வேறுபட்ட முணுமுணுப்புச் சத்தம்! வேதனை கலந்த முனகல் ஒலி!

படபடக்கும் நெஞ்சுடன் உள்ளே சென்ற தேவகி திடுக்கிட்டு நின்றாள். அவளுடைய கண்கள் வியப்பால் அகன்று விரிந்தன.

அந்தக் கூடத்து அறையில் போடப்பட்டிருந்த ஒரு பழைய சோபாவில் சோர்ந்து துவண்டு சாய்ந்து கண்களை மூடிக் கிடந்தான் மோகனசுந்தரம். அவனுடைய கையிலிருந்து நழுவிய புல்லாங்குழல் கீழே உருண்டு கிடந்தது.

திகைத்து நின்ற தேவகி சுற்றுமுற்றும் திரும்பிப் பார்த்தாள். அந்த வீட்டில் அவனைத் தவிர வேறு யாரும் இருப்பதாகத் தெரியவில்லை.

சற்று முன் வரை இனிமையாகக் குழல் வாசித்துக் கொண்டிருந்த மோகனசுந்தரம் ஏன் இப்படிப் பிரக்ஞையிழந்தவன்போல் சாய்ந்து கிடக்கிறான்? நீண்ட நேரமாகக் குழல் வாசித்துக் கொண்டிருந்த களைப்பால் கண்ணைக் மூடிக் கொண்டிருக்கிறானோ, அல்லது ஏதேனும் இராகாம்ச கற்பனையில் தன் சிந்தையைச் செலுத்திக் கொண்டிருக்கிறானோ? அல்லது தன்னை மீறிய தூக்கத்தில் ஆழ்ந்து விட்டானோ?

தர்மசங்கடமான நிலையில் தவித்துக் கொண்டு நின்றாள் தேவகி. 'இது என்ன துரதிர்ஷ்டம்' என்று அவள் மனம் சஞ்சலப்பட்டது. 'தூங்கிக் கொண்டிருப்பவனை எழுப்புவது கௌரவக் குறைவு; எனவே, பேசாமல் திரும்பிப் போய் விடுவதுதான் நல்லது. இன்னொரு நாளைக்கு வந்து அவனைப் பார்த்துக் கொள்ளலாம்.'--

ஓசையின்றிப் பின்னால் நகர்ந்த தேவகி, ஏதோ ஓர் ஆவலால் உந்தப்பட்டவளாய் மோகனசுந்தரத்தைத் திரும்பிப் பார்த்தாள். பெண்மையின் மென்மையும், குழந்தையின் பேதைமையும் கலந்த ஓர் அபூர்வ அழகுச் சாயலுடன் விளங்கிய அவன் முகத்தில், முத்து முத்தாக வியர்வைத் துளிகள் அரும்பியிருந்தன. ஆனால் உதடுகள் மட்டும் உலர்ந்து வறண்டு ஒன்றுடன் ஒன்று ஒட்டிப் போயிருந்தன.

வாசல் நிலைவரை நகர்ந்து சென்றுவிட்ட தேவகி ஏதோ ஒன்றால் கவரப்பட்டவள்போல் மீண்டும் முன்னேறி வந்தாள். மோகனசுந்தரத்தின் எதிரில் வந்து நின்ற அவள் பார்வையில், கீழே கிடந்த புல்லாங்குழல் பட்டது. அதை எடுத்து மேஜைமேல் வைத்து விட்டுப் போய்விடலாம் என்று ஓர் எண்ணம்;

அதற்காகவே இப்போது திரும்பி வந்ததாக மனத்துக்குள் ஒரு நொண்டிச் சாக்கு! மெள்ளக் குனிந்து, ஒரு புனிதப் பொருளை எடுப்பதுபோல் அந்தப் புல்லாங்குழலை எடுக்கத் தன் வலக் கையை நீட்டினாள். அப்படி நீட்டிய போது அவள் கையில் அடுக்கப்பட்டிருந்த அரை டஜன் தங்க வளைகள் கலகல வென்ற ஒலியுடன் கீழிறங்கிச் சரிந்தன.

"யாரது! கோமதியா?" என்று குழறிக் கேட்டுக்கொண்டே சட்டென்று கண் விழித்து நிமிர்ந்தான் மோகன சுந்தரம். மறு கணம், அவன் வியப்புடன் குரலை உயர்த்தி, "ஓ...தேவகியா? வர வேண்டும்! வரவேண்டும்!" என்று உற்சாகத்துடன் வரவேற்றான்.

தேவகியின் உடலும் உள்ளமும் நிலை கொள்ளாமல் படபடத்தன. வெட்கத்தால் முகம் சிவந்து வியர்வை முத்துக்கள் அரும்பின. சட்டென்று பின்னால் நகர்ந்து நின்றுகொண்டாள்.

"நான் தூங்கி விட்டேனா? இல்லையே! சும்மா கண்ணை மூடிக் கொண்டுதான் இருந்தேன். ஆனால், நீ வந்தது தெரிய வில்லை" என்று அசட்டுச் சிரிப்புடன் சொல்லிக் கொண்டே எழுந்து போய் மூலையில் கிடந்த ஒரு நாற்காலியை எடுத்து வந்து மேஜையருகில் போட்டு விட்டுத் தன் இருக்கையில் அமர்ந்தான் மோகனசுந்தரம்.

தேவகியின் முகத்தில் ஒரு விசித்திர மாறுதல் ஏற்பட்டது. விவேகானந்தனுடன் பல நாட்கள் பேசிப் பழகியும் அவன் ஒரு முறை கூட அவளை 'நீ' என்று ஒருமையில் விளித்ததில்லை. ஆனால், மோகனசுந்தரம் ஒரே ஒரு நாள் பழக்கத்தில் 'நீ வந்தது தெரியவில்லை' என்று சொல்லி விட்டானே!

நெற்றியில் விழுந்திருந்த கேசத்தை இடக் கையால் ஒதுக்கி விட்டுக் கொண்டே, "இங்கே நீ வந்து அதிக நேரமாகிறதா, தேவகி?" என்று பரிவுடன் வினவினான். ஒரு பெரிய இடத்துப் பெண்--அதிலும் ஒரு சிறந்த கவிதன் வீடு தேடி வந்த சமயம், தூங்குமூஞ்சி போல் கண்ணை மூடிக் கொண்டிருந்து விட்டோமே என்று அவன் உள்ளூற வெட்கப்பட்டே இப்படிக் கேட்பது போல் தோன்றியது.

"நான் வெறுமனேதான் கண்ணை மூடிக் கொண் டிருந்தேன். என் அம்மா வெளியே போயிருக்கிறாள். அவள் இருந்தால் உன்னை அன்புடன் வரவேற்றிருப்பாள். என்னையும் உடனே எழுப்பி விட்டிருப்பாள்."

ஏதோ குற்றம் செய்த குழந்தையைப் போல் அவன் உளறுவதைக் கேட்ட தேவகிக்குச் சிரிப்புத்தான் வந்தது. அத்துடன் அவனுடைய வெளுத்த மனப் போக்கையும் அவளால் நன்கு அறிந்து கொள்ள முடிந்தது.

மோகனசுந்தரம் எதையோ நினைத்துக் கொண்டவனாய் மெல்லச் சிரித்து, "ஆமாம்; சற்று முன் நான் ஏதோ உளறினதாக ஞாபகம்! அது ஒன்றுமில்லை; நாடக நடிகை கோமதி என்பவளை உனக்குத் தெரியுமா? அவள் என்னுடைய குருநாதரின் மகள்; அவளைப் பார்க்கத்தான் இப்போது என்



அம்மா அவள் வீட்டுக்குப் போயிருக்கிறாள். அந்தப் பெண்தான் வந்திருக்கிறாளோ என்று எண்ணினேன். அதனால் தான் உன்னைப் பார்த்ததும் அவளுடைய பெயரைச் சொல்லி விட்டேன்" என்று பரபரப்புடன் சொல்லி அசடு போல் சிரித்தான். அவன் முகத்தில் திடீரென்று ஒருவித ஆழ்ந்த கவலையின் நிழல் படர்ந்தது.

ஒரு மாபெரும் கலைஞன் இத்தனை சிறுபிள்ளைத்தனமாகவும் அசட்டுத்தனமாகவும் பேசுவான் என்று கொஞ்சமும் எதிர்பார்க்காத தேவகி வியந்து நின்றாள். ஆனால், அவனுடைய அந்தக் கல்மஷமல்லாத பேச்சு அவள் உள்ளத்தை வெகுவாகக் கவர்ந்தது. இதனால் இது வரை அவளிடமிருந்த பயமும் வெட்கமும் மெல்ல மெல்ல மறையத் தொடங்கின. தைரியமாக அவனை ஏறிட்டுப் பார்த்து எழில் வழியப் புன்னகை பூத்தாள்.

கீழேயிருந்து எடுத்த புல்லாங்குழலைக் கையில் வைத்து உருட்டிக் கொண்டிருந்த தேவகியைச் சாதாரணமாகப் பார்த்து, "எவ்வளவு நேரம் இப்படியே நின்று கொண்டிருப்பாய், தேவகி? உட்காரக் கூடாதா?" என்றான் மோகனசுந்தரம் புன்முறுவலுடன்.

"பரவாயில்லை. உங்களைச் சும்மா பார்த்து விட்டுப் போகலாம் என்று தான் வந்தேன்..." என்று நாணத்தால் மூக்கின் முனை சிவக்கச் சொன்ன தேவகி,



அழகாக நடந்து போய் மேஜையின் விளிம்பில் சாய்ந்து நின்றாள். அந்த மேஜை மேல், ஆங்கிலத்தில் 'டைப்' செய்யப் பெற்ற கடிதம் ஒன்று பிரிந்து கிடந்தது. அவ்வப்போது அந்தக் கடிதம் காற்றில் படபடத்துக் கொண்டிருந்ததால், தன் கையிலிருந்த புல்லாங்குழலை அதன் மீது வைத்தாள்.

"அன்றைக்கு உன்னைப் பார்த்து வந்தது முதல் அடிக்கடி நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். என்னுடைய புல்லாங்குழல் இசையை நீ அந்த அளவுக்கு ரசிப்பாய் என்று நான் எதிர்பார்க்கவில்லை. எனக்கு அது மிகவும் மகிழ்ச்சியளித்தது. என்னைப் போன்ற எளிய கலைஞர்கள் விரும்புவது உன் போன்ற மிகச் சிறந்த ரசிகர்களின் பாராட்டு ஒன்றுதான். ஆனால், அதைத் தெரிவிப்பதில் கூடச் சிலர் கஞ்சத்தனம் செய்கிறார்கள்!" என்றான் மோகனசுந்தரம். மீண்டும் அவன் தொடர்ந்து, "என்னுடைய குழலிசையை நீ எப்படி ரசிக்கிறாயோ, அதே போல் நானும் உனது இனிய கவிதைகளை மிகவும் விரும்பிப் படிக்கிறேன். என்னிடம் நீ இயற்றிய ஒரு கவிதைப் புத்தகம் இருக்கிறது. அதை மிகவும் பத்திரமாக வைத்திருக்கிறேன்!" என்று புன்முறுவலுடன் சொல்லி நிறுத்தினான்.

எல்லையற்ற மகிழ்ச்சியால் பூரித்துப் புளகாங்கித மடைந்தாள் தேவகி. கொஞ்ச நேரத்துக்குள் அவன் எவ்வளவு பேசி விட்டான். எத்தனை நெருக்கமாக மனம் திறந்து பேசி விட்டான். சிந்தனைக்கே இடம் வைத்துக் கொள்ளாமல் நெஞ்சில் நினைப்பதையெல்லாம் உடனுக்குடன் வாரிக் கொட்டி விடுகிறானே! அந்த இனிய சுபாவம் அவளுக்கு நிரம்பவும் பிடித்துவிட்டது. "இப்போது கூட நான் வந்தது......" என்று தயங்கி

# பொங்கல் வாழ்த்துக்கள்




**பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்**

## நெருப்பு - கப்பல் - விபத்து

இன்ஷ்யூரன்ஸ்களுக்கு

**ஆஸ்திகள்: ரூ. 1 கோடிக்கு மேல்**

தலைமைக் காரியாலயம்: பாண்டியன் பில்டிங், மதுரை-1

கிளைகள்: பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர்
ஆமதாபாத், கோயமுத்தூர் கொச்சி






**ஆபீஸ் மற்றும்
வீட்டிற்கான
ஆல் - ஸ்டீல்**
உபகரணங்கள்



ட்யூபுலர் மேஜை :
மடக்கான தோற்றம்.
வேலை செய்ய சௌகரிய
மானது. ஆபீஸ்களுக்கு
உபயோகமானது.



ஸ்டாண்டர்ட் பீரோ :
ரம்மியமான கலர்களில் கிடைக்கும். சாமான்களை
சுத்தமாகவும் பத்திரமாகவும் இருக்க உதவுகிறது.



மடக்கும் நாற்காலி :
அழகானது. சுலபமாக மடக்கக்
கூடியது. மற்றும் உறுதியானது.

**அடிஸன் & கோ., (பிரைவேட்) லிமிடெட்**
மதராஸ் - - - - - பெங்களூர்

இழுத்த தேவகி மெள்ளத் தலை குனிந்தவாறு, "இன்று ஒரு புதிய கவிதை எழுதி முடித்தேன்! அதைப் பத்திரிகைக்கு அனுப்பு முன் உங்களிடம் படித்துக் காட்ட வேண்டுமென்று ஆசை பிறந்தது. அதனால்தான்..." என்றாள் கிள்ளைமொழியில்.

புருவங்களை மேலுயர்த்தி அவளை வியப்புடன் பார்த்த மோகனசுந்தரம், "அப்படியா? எங்கே, அதைக் கொடு" என்று கையை நீட்டினான். தன் கையில் நான்காக மடித்து வைத்திருந்த அந்தக் கவிதைப் பிரதியைக் கூச்சத்துடன் அவனிடம் கொடுத்தாள் தேவகி.

அதே சமயம், மேஜை மீது பிரிந்து கிடந்த கடிதம், 'விர்'ரென்று வீசிய காற்றில் பறந்து சற்றுத் தொலைவில் விழுந்தது. தேவகி மெள்ளப் போய் அதை எடுத்துக் கொண்டு வந்தாள்.



இதைக் கவனித்த மோகனசுந்தரம் திடீரென்று உரக்கச் சிரித்தான். சிரித்துக் கொண்டே, "தேவகி, அந்தக் கடிதம் என்னவென்று படித்துப் பார்! படித்துத்தான் பாரேன்!" என்றான் குறும்புக் குரலில்.

"இது உங்களுக்கு வந்த கடிதமாயிற்றே?" என்று தயங்கினாள் தேவகி.

"பரவாயில்லை, படித்துப்பார்! அதிலே இரகசியம் ஒன்றும் இல்லை."

விருப்பமின்றி அந்தக் கடிதத்தில் தன் பார்வையை ஓட விட்ட தேவகி, திடுக்கிட்டவள்போல் ஒரடி பின்னால் நகர்ந்து பரபரப்புடன் அதைப் படித்தாள். இது வரையில் மகிழ்ச்சிக் கலையை விட்டு மலர்ந்திருந்த அவள் முகம் இந்த ஒரே விநாடியில் வாடிக் கறுத்துக் கூம்பி விட்டது. "என்ன இது?" என்று மெல்லிய குரலில் இழுத்தாள்.

"அதுதானே தேவகி?" என்று கலகலவெனச் சிரித்த மோகனசுந்தரம், "அது எனக்கு வந்திருக்கும் வக்கீல் நோட்டீஸ். சட்டத்தின் உதவியைக் கொண்டே இந்த உலகத்தில் வாழ்ந்து விடலாம் என்று நினைக்கும் ஒரு பைத்தியக்காரன் அனுப்பியிருக்கும் நோட்டீஸ் அது!" என்றான் மோகனசுந்தரம், சர்வ அலட்சியமாக. பிறகு தன் கையிலிருந்த கவிதைப் பிரதியின் முதல் பக்கத்தில் கவனத்தைச் செலுத்த முயன்றவன் சட்டென்று அதை மடித்து மடி மீது போட்டுக் கொண்டு சோபாவில் நன்றாகச் சாய்ந்தவாறு, "அன்று அந்தச் சங்கத்தின் ஆண்டு விழாவில் கச்சேரி செய்தேனல்லவா? அப்போது நான் சரியாக நடந்து கொள்ளவில்லையாம். அவர்களை அவமதித்து விட்டேனாம். அதனால் அவர்களுடைய கௌரவம் வெகுவாகப் பாதித்து விட்டதாம். சொத்து நஷ்டமும் ஏற்பட்டு விட்டதாம். அந்த நஷ்டத்துக்கெல்லாம் ஈடாக, பத்தாயிரம் ரூபாய் கோரி என் மீது கோர்ட்டில் வழக்குத் தொடரப் போகிறார்களாம். எப்படி இருக்கிறது தேவகி, இந்தக் கதை?" என்றான் கேலிக் குரலில். அவனுடைய பேச்சும் பாவனைகளும்தாம் அலட்சியமாக இருந்தனவே தவிர, முகத்தில் பயம் கலந்த ஒருவித சஞ்சலக் கறை படிந்தே காணப்பட்டது. அதை மறைக்க முயல்பவன் போல் ஏதோ ஓர் இராகத்தை மெல்ல அவன் அசை போட்டான்.

தேவகிக்கு எல்லாம் புரிந்துவிட்டது. அங்கு நிற்கவே அவளால் முடியவில்லை. அந்த அளவுக்கு அவள் மனம் வேதனையடைந்து விட்டது.

ஏதோ நினைத்துக் கொண்டவன்போல் நிமிர்ந்து உட்கார்ந்த மோகனசுந்தரம் ஒரு வறண்ட சிரிப்புடன் அவளைப் பார்த்து, "இதற்காக நான் கொஞ்சங்கூட வருந்தவில்லை, தேவகி! ஆனால், இந்த நோட்டீஸை அனுப்பியவன் என்னோடு நெருங்கிப் பழகியவனாய் இருக்கிறானே என்பதை நினைக்கும்போதுதான் எனக்கு வருத்தம் ஏற்படுகிறது; வியப்பும் தோன்றுகிறது! அவனை உனக்குக் கூடத் தெரிந்திருக்கும்; மதிப்புக்குரிய டாக்டர் ராமநாதனின் மைத்துனனான விவேகானந்தன் அவன். எனக்கு அவன் நிறைய உதவி செய்திருக்கிறான். மிகவும் நல்லவன்; அதிகம் படித்தவன்; அறிவாளி. அவனா இப்படிச் செய்திருக்கிறான் என்பதை என்னால் நம்பவேமுடியவில்லை. அவனுடைய முகதாட்சிண்யத்துக்காகத்தான் நான் அன்று அந்தக் கச்சேரி செய்ய ஒப்புக் கொண்டேன். ஒரு ரூபாய் டிக்கட் வாங்கிவிட்டோம் என்பதற்காக என்னுடைய கலைத்திறனையே அவமதிப்பதுபோல் ஜனங்கள் நடந்துகொண்டால் அதை நான் பொறுத்துக் கொள்ளத்தான் வேண்டுமா, என்ன?...ம்...நியாயம் என்பது எல்லோருக்கும் ஒரே மாதிரியாகத் தோன்றிவிட்டால் அப்புறம் சட்டம் எதற்கு, கோர்ட் எதற்கு?" என்றான் கவலை தோய்ந்த குரலில். அவ

னுடைய முகத்தைப் பார்க்கவே இப்போது ரொம்பவும் பரிதாபமாக இருந்தது.

இதுவரையில் கற்சிலைபோல் எவ்வித உணர்ச்சிச் சலனமும் காட்டாமல் நின்று கொண்டிருந்த தேவகி, கையிலிருந்த அந்தக் காகிதத்தை மேஜைமீது எறிந்து விட்டு, "தயவுசெய்து எனக்கு விடை கொடுங்கள். இன்னொரு நாள் வந்து உங்களைச் சந்திக்கிறேன்" என்றவாறு அங்கிருந்து வேகமாகப் புறப்பட்டாள்.

நவயுக வாலிபர் சங்கத்துப் புத்தக அலமாரியிலிருந்து 'இங்கர்சால்' எழுதிய புத்தகமொன்றை எடுத்துக் கொண்டு வந்து உட்கார்ந்தான் விவேகானந்தன். அது அவன் ஏற்கனவே படித்த புத்தகம் தான். அந்த அறையில் நீண்ட நேரமாகத் தனிமையில் உட்கார்ந்து சலித்துப் போனதால் அந்தப் புத்தகத்தை எடுத்துப் படிப்பதில் தன் கவனத்தைச் செலுத்த முயன்றான். என்னதான் முயன்றும் அவன் கவனம் அதில் செல்லவேயில்லை. புத்தகத்தின்பக்கங்களை வெறுமனே புரட்டிப் புரட்டிக் கைவிரல்கள்தாம் வலியெடுத்தன. மேஜைமேல் அதை விசியெறிந்து விட்டு எழுந்து கைகளைப் பின்னால் கட்டிக் கொண்டு அறைக்குள்ளாகவே உலாவலானான்.

இன்று அவன் முகமே நன்றாயில்லை. களை இழந்து வெளிறியிருந்தது.

அடிக்கடி அவன் முகத்தைச் சுளித்துக் கொள்வதும் உதட்டைக் கடித்துக் கொள்வதுமாகக் கோணங்கிச் சேஷ்டை செய்து கொண்டிருந்தான். இடையிடையே மெல்லச் சிரித்துக் கொள்வதும், கண்களை மூடித் திறப்பதுமாகத் தனக்குள் ஏதோ முனகிக் கொண்டான்.

சாரங்கன் இன்னும் வரவில்லை. அவன் தன் காரியாலயத்திலிருந்து வர, நேரம் நிறைய இருக்கிறது. அதுவரை இங்கே தனிமையில் இருக்க வேண்டுமே என்று தவித்தான் விவேகானந்தன். வீட்டுக்குப் போக அவனுக்கு விருப்பமில்லை. அங்கே போனாலும் இப்படி அறையில் அடைந்து தானே கிடக்க வேண்டும்? வெளியே எங்கேயாவது போய்ச்சுற்றிவரவும்அவன் மனம் இடம்தரவில்லை. யாருக்காகவோ, எதற்காகவோ வெட்கப்பட்டு வெளியே தலை காட்ட அஞ்சுவது போன்ற ஒரு மனப்பிரமை. செய்யக் கூடாத ஒரு காரியத்தைச் செய்து விட்டதுபோன்ற நெஞ்சக் குமைவு. அந்த அறையின் கதவு, ஜன்னல்களைச் சாத்திவிட்டுத் தலை முதல் கால்வரை நன்றாகப் போர்த்திப் படுத்துக் கொள்ள வேண்டும் என்று கூட அவன் ஒரு கணம் எண்ணினான்.

என்ன இது வேடிக்கை? விவேகானந்தனுக்கு இன்று என்ன வந்துவிட்டது? ஏன் அவன் இப்படி உளைந்து கொண்டு கிடக்கிறான்?

ஒன்றுமில்லை; அவன் இன்று ஒரு சிறிய காரியத்தைத் துணிந்து செய்து விட்டான். தேவகி எழுதிய அந்தக் காதல் கவிதைப் பிரதியுடன், தான் எழுதிய ஒரு கடிதத்தை அவளுக்குத் தெரியாமல் இணைத்து அவளிடமே கொடுத்து விட்டு வந்து விட்டான். அதைக் கொடுத்து விட்டு நேரே இங்கு வந்தவன்தான் இன்னும் வெளியே தலைகாட்டவில்லை.

'தேவகி அந்தக் கடிதத்தைப் படித்திருப்பாளா? இந்நேரம் அதைக் கண்டிப்பாகப் படித்திருப்பாள்! ஒருகால் படிக்காமலும் இருப்பாளோ? இல்லை; நிச்சயம் படித்திருப்பாள்!...அப்புறம்?... அதன் விளைவு?...அவளுடைய அபிப்பிராயம்?...அதை எப்படித் தெரிந்து கொள்வது?'......

விவேகானந்தன் ஒரு நாற்காலியில் வந்து தொப்பென்று உட்கார்ந்தான்.

'சே! சிந்திக்கத் தெரியாதவனுக்குத் தான் காதல் ஓர் இன்ப அநுபவமாய் இருக்க முடியும்; சிந்திக்கத் தெரிந்தவனுக்கு அது நரக வாதனைதான்!'

அவன் வெறுப்புடன் தலையைத் தாங்கிப் பிடித்துக் கொண்டான்.

## அத்தியாயம் ஆறு

"வணக்கம். உள்ளே வரலாமா?"

சட்டென்று நிமிர்ந்தான் விவேகானந்தன். கந்தர்வக் கன்னிபோல் வாசலருகில் வந்து நின்ற கோமதி அவனைப் பார்த்து மந்தகாசமாகப் புன்னகை பூத்தாள். ஏதோ துர்க்கனவு கண்டு விட்டு எழுந்தவன்மாதிரி அவளைத் திருதிருவென்று விழித்து நோக்கினான் விவேகானந்தன்.

"வா என்றுகூட ஒரு வார்த்தை சொல்லமாட்டீர்கள் போல் இருக்கிறதே!" என்று முத்துப் பல் தெரியச் சிரித்துக் கொண்டே ஒயிலாக உள்ளே வந்த கோமதி மேஜையினருகில் நின்றாள்.

'இந்தச் சமயத்தில் இவள் ஏன் இங்கு வந்தாள்' என்று மனத்தை உளைப்பிக் கொண்ட விவேகானந்தன் அவளைப் பட்டும் படாததுமாகப் பார்த்து, ஒப்புக்குச் சிரித்தவாறு, "என்ன, சௌக்கியம்தானே?" என்று கேட்டான்.

"இந்த நிமிஷம் வரையில் நல்ல சௌக்கியம்தான்!" என்று குறும்புக் குரலில்



# உலகிலுள்ள உன்னதமான சந்தன மரத்திலிருந்து

சந்தன மரத்துக்குப் புகழ் பெற்றது மைசூர். மேலும் மைசூர் சர்க்காரின் தளரா முயற்சிகளின் பலனை நமக்கு மிக உயர்ந்த சந்தனத் தைலம்—மைசூர் சர்க்கார் சந்தனத் தைலம் கிடைக்கிறது. நன்கு வளர்ச்சியடைந்த சிறந்த சந்தனக் கட்டைகளிலிருந்துதான் விஞ்ஞான முறைப்படி சர்க்கார் தொழிற்சாலையில் தைலம் வடிக்கப்படுகிறது. மேலும் அது முற்றிலும் பரிசுத்தமானது என்ற உத்திரவாதத்துடன் அளிக்கப்படுகிறது.

*Buy the Best – Buy*

**MYSORE GOVERNMENT SANDALWOOD OIL**

GUARANTEED B.P. (1932) STANDARDS.

**கவர்ன்மெண்ட் ஸாண்டல்வுட் ஆயில் பாக்டரி, மைசூர்**

கூறி ஒரு குளிர்ச் சிரிப்பைக் கொட்டினுள் கோமதி.

விவேகானந்தன் முகத்தைச் சுளித்தான். அப்போதைய மன நிலையில் அவளிடம் மேற்கொண்டு பேசவே அவனுக்கு விருப்பமில்லை. மேஜை மேல் கிடந்த புத்தகத்தை எடுத்து வெறுமனே புரட்ட ஆரம்பித்தான். கோமதி அவனுக்குச் சளைத்தவளா என்ன? அவளும் அங்கு கிடந்த ஒரு பத்திரிகையை எடுத்துச் சாவதானமாகப் பிரித்துப் பார்க்கலானுள். இதை ஓரக் கண்ணுல் கவனித்த விவேகானந்தன் உள்ளூறக் குமுறினுன். 'இது என்ன சோதனை' என்று சலித்துக் கொண்ட அவன், அவளிடம் ஏதாவது இரண்டு வார்த்தைகள் பேசி மெள்ள வெளியேற்றி விட வேண்டுமென்ற முடிவுடன் புத்தகத்தைப் பட்டென்று மூடி வைத்து விட்டு நிமிர்ந்தான்.

"என்ன விஷயம் கோமதி? யாரைப் பார்ப்பதற்காக வந்தாய்?"

"உங்களைப் பார்க்கத்தான் வந்தேன்!"

"என்னைப் பார்க்கவா?..."

ஒரு விநாடி திணறலுக்குப் பின் உடனே புரிந்து கொண்டவளைப் போல், "ஓகோ!..." என்று இழுத்தாள்.

கோமதி அவனை ஆவலுடன் ஏறிட்டுப் பார்த்தாள். இப்போது அவள் முகம் பன்மடங்கு எழில் பெற்றுப் பொலிந்தது.

விவேகானந்தன் மெல்லத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு அவளை அலட்சியமாகப் பார்த்து, "அந்த வக்கீல் நோட்டீஸ் பற்றித்தானே பேச வந்திருக்கிருய்?" என்று கேட்டான்.

கோமதிக்கு ஒன்றும் புரியவில்லை. சற்றே முன்னுல் நகர்ந்து வந்து, "என்ன! வக்கீல் நோட்டீஸா?" என்று கேட்டாள் சாதாரணமாக.

"ஆமாம்; மோகனசுந்தரத்துக்கு நான் அனுப்பியிருக்கும் வக்கீல் நோட்டீஸ் விஷயமாகத்தானே என்னிடம் இப்போது பேச வந்திருக்கிருய்?"

அதிர்ச்சியடைந்த கோமதி கண்களை அகல விரித்தாள். அவளைப் பார்க்க விரும்பாதவன் போல் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு சொன்னுன் விவேகானந்தன் :

"நீ இங்கு வரும்போதே தெரியும், அதற்காகத்தான் வருகிருய் என்று!..... அது சரி; நீயாக வந்தாயா? அல்லது அவன் உன்னை அனுப்பி வைத்தானு?"

கோமதி பதில் ஒன்றும் சொல்லாமல் அவனையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள்.

"பரவாயில்லை. எனக்குச் சரி என்று தோன்றியதைச் செய்தேன். அதை ஆட்சேபிக்க நீ வந்திருக்கிருய். ஆனுல், கோமதி! நீயே சற்றுச் சிந்தித்துப் பார்: அன்றைய அந்தக் கலை விழா நிகழ்ச்சிக்கு நீயும்தானே வந்திருந்தாய். ஒரு கௌரவமான சங்கம் நடத்தும் விழாவில், ஆயிரம் பேருக்கு மேல் கூடியிருந்த சபையில், பணத்தை வாங்கிக் கொண்டு கச்சேரி செய்ய வந்தவன் அப்படி நடந்து கொள்ளலாமா? அதனுல் எங்களுக்கு எவ்வளவு பெரிய அவமானம்! எத்தனை பொருள் நஷ்டம்! இம்மாதிரி தலைக்கனம் பிடித்த பயலைச் சும்மாவிட்டு விடலாமா?"

கோமதியின் முகம் வெளுத்தது.

"ஏதோ, போனுல் போகிறன் என்று பத்தாயிரம் ரூபாய் நஷ்ட ஈடு கோருவதோடு அவனைச் சும்மா விட்டேன். இல்லையானுல்..." - அடித் தொண்டையில் கடூரமாகக் கடுகடுத்த விவேகானந்தன் சட்டென்று நிமிர்ந்து அவளை விழித்துப் பார்த்தான்.

கோமதிக்கு எல்லா விஷயங்களும் விளங்கி விட்டன. சற்று நேரம் வரை மௌனமாகத் தலைகுனிந்து கொண்டிருந்த அவள் அவனைக் கடைக்கண்ணுல் பார்த்துச் சிரித்தாள். "ஒரு புது விஷயத்தைத் தெரிந்து கொண்டேன். ஆனுல், எனக்கு இது தேவை யில்லாதது. என்னிடம் நீங்கள் இதைச் சொல்லியே இருக்க வேண்டியதில்லை!"

விவேகானந்தன் இதைக் கேட்டுப் பெருவியப்படைந்தான். "என்ன! உனக்கு இந்த விஷயம் தெரியாதா?"

"தெரியாது. தெரிந்து கொள்ள வேண்டிய அவசியமும் இல்லை."

"அப்படியானுல் நீ இங்கு எதற்காக வந்தாய்?"

"நான்தான் முன்பே சொன்னேனே; உங்களைப் பார்க்கத்தான் வந்தேன்!"

கோமதி அவனைப் பார்த்தாள். ரதியின் பார்வையும் இப்படித்தான் இருக்குமோ?...

"என்னைப் பார்க்க வர வேண்டிய அவசியம்?"

"இதற்கு நீங்கள்தான் பதில் சொல்ல வேண்டும்!"

"நீ என்ன விளையாடுகிருயா?"

"விரும்பினுல் நீங்களும் விளையாடுங்களேன்...!"

விவேகானந்தனின் முகம் கறுத்தது. அருவருப்புடன் அவளை வெறித்துப் பார்த்தான். "நீ என்ன, ஒரு பெண் தானே? பெண்ணுயிருந்தால் மரியாதையாக இங்கிருந்து வெளியே போய்விடு!"

கோமதி கலகலவென்று சிரித்தாள். ஆனுல் அவளுடைய கண்கள் குபு குபுவென நீரைக் கொட்டின. சற்று நேரம் வரையில் அவனையே பார்த்துக் கொண்டிருந்த அவள் சட்டென்று திரும்பி வெளியே நடந்தாள். (தொடரும்)

# it's the rounded tips that count...



for the safety of your teeth and gums

# Binaca

## TOOTH BRUSHES

**WITH "ROUNDED BRISTLE" TIPS**

9-15-1

# சென்ற ஆண்டில் எவ்வளவு பணம் வீணாயிற்று?...

அழகுடன் திகழ யாவரும் ஆசைப்படுவது இயற்கை.—ஆனால் அதற்காக அதிக பணம் செலவு செய்யும்போது மனம் வேதனையடைகிறது. கடந்த ஆண்டில் உங்களைப் பொருத்தமட்டில் எப்படி இருந்தது? அதிக விலையுள்ள அழகு சாதனங்களையே வாங்கினீர்களா—பிறகு அனுபவத்தின் மூலம் அவைகள் மிகச் சிறந்தது இல்லையென்பதை அறிந்தீர்களா? அல்லது அதற்கு முற்றிலும் மாறாக, விலை மலிவாக உள்ள பொருள்களை வாங்கினீர்களா? எப்படி யிருந்தபோதிலும் அவைகள் உங்களுக்குப் பூரண திருப்தியை அளிக்கவில்லை யென்பதை பொதுவாக உணர்வீர்கள். இந்தத் தடவை அம்மாதிரியான சங்கடத்திற்கு உள்ளாகாது விவேகமாக நடந்து கொள்ளுங்கள். **ஆப்கன் ஸ்னோ** அழகு சாதனங்களையே வாங்குங்கள். ஒவ்வொருவருடைய தோற்றத்திற்கேற்றபடி பற்பல ரகங்கள் உள்ளன. அவைகள் புதுமையாகவும் பூரண பொலிவுடன் இருக்க உதவுகின்றன. மேலும்—இதற்காக நீங்கள் அதிகம் செலவு செய்ய வேண்டிய அவசியமில்லை யென்பதையும் அனுபவத்தில் காண்பீர்கள்.



## ஆப்கன் ஸ்னோ

அழகு சாதனங்கள்












ஈ. எஸ். பட்டான்வாலா, 62, கனாட் ரோடு, பம்பாய்-27 (இந்தியா)

ஹவாய்ப் பெண்களின் ஹுலா ஹுலா நடனம் பெரிதும் சிறப்பிக்கும். அலோஹா வாரத்தை நிகழ்த்தும் பொறுப்பை இங்குள்ள வியாபாரிகள் ஏற்றுநடத்துவதே சம்பிரதாயம். இந்த ஆண்டு அந்தப் பொறுப்பு என் தலையில் விழுந்திருக்கிறது. ஆடுகிற, பாடுகிற மங்கைகளுக்கு நூதன மாலைகள் அளிப்பது என் பொறுப்பின் ஒரு முக்கிய அம்சம். இந்தச் சிறப்பு மிக்க அலோஹா வார விழாவினைக் காணவும், கபடமற்ற ஹவாயர்களின் நட்பில் குளித்துச் செல்லவும் உடனே புறப்பட்டு வா. அழகிய மாலைகள் கொண்டுவர முடியுமா உன்னால்? ஹொனலுலுத் துறைமுகத்தில் உனக்காகக் காத்துக்கொண்டிருப்பேன் உன் கடிதம் குறிக்கும் நாளில்.''

படகைச் சருகைப் போலத் தீர்த்துவிட்ட விடுமுறை நாட்கள் வேகமாக எங்களை இருபத்தைந்து தினங்களுக்குள் ஹவாயின் சௌந்தர்யத்தைச் சுவைக்க இதோ புறப்பட்டுப் போய்க் கொண்டிருக்கிறேன்.

என் தோள்பட்டையை அழுத்தியது ஒரு கரம். திரும்பிப் பார்த்தேன். என் கப்பல் தோழன் வெல்லர்மன் நின்று கொண்டிருந்தான் அவன் அமெரிக்கன். ஹவாய்ப் பல்கலைக் கழகத்தில் தத்துவ சாஸ்திரம் பயின்று கொண்டிருப்பவன். விடுமுறையில் தன் குடும்பத்துக்குத் தலைமையைக் காட்டி விட்டு என்னைப் போலவே அலோஹா வாரத்தைக் கண்டுகளிக்க ஓடிவந்து கொண்டிருக்கிறான் அவன்.

'' மிஸ்டர் கஷ்! இன்னும் சாமான்களைக் கட்டி வைக்கவில்லையா? அதோ தென்னைத் தோரணங்கள் அமைத்து வரவேற்புக் கூறுவது தான் ஹொனலுலு '' என்றான் அவன்.

என் பெயர் கஷ்ஷும் இல்லை; கஷ்டமும் இல்லை. கணேசன். அதைத்தான் சுருக்கமாக மிதியாக மிதித்து 'கஷ்' ஆக்கி விட்டான் இந்த இளம் அமெரிக்கன்.

நான் மூட்டைகளைக் கட்டத் தயாரானேன்.

'' மூட்டையைக் கட்டுவதற்கு முன்னால் இதையும் தெரிந்துகொள், கஷ்! ஹவாயர்கள் உன் நாட்டினரைப் போன்ற பழக்கவழக்கம் உடையவர்கள்தாம். உங்களைப் போலவே அவர்களும் கணக்கு வழக்கற்ற தெய்வங்களை வழிபடுகிறார்கள். உங்களைப் போலவே அவர்களும் நல்லிதயமும், நட்பும் படைத்தவர்கள். பக்கத்து வீட்டுக்காரர்களாக இருப்பார்கள். ஒருவருக்கொருவர் ஒரு நாளைக்குப் பத்து முறைகள் பார்த்துக் கொள்வார்கள். ஆனாலும் அவர்கள் ஒவ்வொரு தடவையும் ' அலோஹா ' சொல்லத் தவறுவதில்லை. துறைமுகத்தை மிதித்ததும் நீயும் நாளொன்றுக்கு ஆயிரக்கணக்கான அலோஹாக்கள் கூறிப் பழகிக் கொள்ளவேண்டும். இல்லையோ, உன்னை அவர்கள் ஒரு மனிதனாக நினைக்க மாட்டார்கள்.''

'' 'அலோஹா' என்றால், என்ன அர்த்தம்?''

'' வணக்கம்.''

ஹொனலுலுத் துறைமுகம் எதிரே வெள்ளி மூக்கைப் போலக் குறுகிக் கொண்டு வந்தது. வெல்லர்மனும் நானும் மூட்டைகளைக் கட்ட ஆரம்பித்தோம். அப்பொழுது என் மனம் அலையோடு போட்டி யிட்டது.

'' அழகுமிகுந்த ஹவாய் நாடே! உனக்கு என் அலோஹா!''

## வெய்க்கு அலோஹா!

சிறந்த கடற்கரைகளில் முன் நிற்கும் வைக்கிக்கி கடற்கரையில் ' அலோஹா வாரம் ' ஆரம்பமாகிவிட்டது. அதற்கெனவே வந்த அமெரிக்கர்கள், ஹவாயின் உள் வட்டத் தீவுகளில் வசிக்கும் நியூகினியோவாசியர்கள், பிலிப்பினர்கள் எனப் பல மொழி வழி நாட்டினர் ஹொனலுலுவை மொய்த்துக் கொண்டிருந்தனர்.

சிறந்த கடல் மணல் பரப்பில் நூறுநூறுக் கணக்கான ஹவாய்ப் பெண்கள் கருண் கூந்தலில் கடல் பூக்களைச் செருகி, கழுத்தில் நீண்ட மாலையை அணிந்து, பிறைநுதல் போலவே முக்கால் வட்டமாகச் சேர்ந்தாடிய எரிமலைக் கடவுளின் திருநடனம் எல்லாவற்றுக்கும் சிகரமாக இருந்தது. ரஸிகக் கூட்டத்தினர் கணந்தோறும் எழுப்பிய ஆரவாரம் கடலின் நுரையைக்கூட அடைத்தது.

வணிகப் பெருமக்கள் முன் வரிசையில் அமர்ந்திருந்ததைப் பார்க்கும்போது அங்கே அவர்களுக்கு இருக்கும் செல்வாக்கு நன்றாகப் புரிந்தது. மாலைகள் வாங்கவும், அணியவுமாக இருந்த அருண், நடனக் குழுவினரின் மத்தியிலே ஓடியாடிக் கொண்டிருந்தார். அவருடைய பிரதம விருந்தினனாக முதல் வரிசையில் உட்கார்ந்திருந்த நான், கண்ணையும் கருத்தையும் முழுமையாக ஒன்ற இள அடவிரையும் திருவிக் குழுவில் செருகும் ஹவாய் அரம்பையரின் மத்தியிலே நன்றி விழி பெருக்கிக் கூத்தாடிக் கொண்டிருந்த அவளின் சுழற்சியிலே அரும்பாகப் பறந்து கொண்டிருந்தேன்.

அன்று அலோஹா வாரத்தின் இறுதிநாள். பாமரர்களின் மனதைக்கொள்ளும் 'அதிர்ச்சி' நடனங்கள் அதிகமாகக் கையாளப்பட்டன. அந்த ஒவ்வொன்றும் மறைமுகமாகவோ, நேர்முகமாகவோ அந்நியர்கள் அதிகமாகத் தங்கள் நாட்டில் புகுந்துவிட்ட கொடுமையைக் குறிப்பதாக இருந்தது.

கைதட்டலும் சீழ்க்கை ஒலியும் அலை மோதின ரஸிகக்கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் கரையத் தொடங்கியது.

நான் கரைந்த கூட்டத்தோடு கரையாமல், என் உள்ளத்தைக் கரைத்த அந்தக் கன்னியை நோக்கி ஓடினேன். என் கையிலிருந்த மாலையை அவள் கழுத்தில் சூட்டி, '' ஓர் உயர்ந்த கலைக்கு இந்த எளியேனின் அற்பக் காணிக்கை இது '' என்றேன்.

அவள் அதிசயத்துடன் மாலையைக் கையில் பிடித்துப் பார்த்துக் கொண்டே பேசினாள்: '' ஓ, பாம்பு மாலை! எங்கள் நாட்டில் பாம்பு இல்லை. நான் பார்க்காத இந்தப் பாம்பை மாலையாக அணிவித்த உங்களுக்கு என் அலோஹா-... !''

'' அது தெரிந்துதான் இந்த அதிசய அன்பளிப்பை ஏந்தி வந்தேன். என் பெயர் கணேஷ் உன் பெயரை நான் தெரிந்து கொள்ளவில்......''

Simpsons சிறந்த இலகு இயந்திர சாதனங்கள்



















MANUFACTURERS Simpson & Co. Ltd

தலைமை ஆபீஸ் & தொழிற்சாலை சென்னை - 2

கிளைகள் : பெங்களூர், உதகமண்டலம், திருச்சிராப்பள்ளி, செகந்திராபாத்



# மூல

உபத்திரவத்தினால் அவதிப்பட்டு

வக்கீல்

மிகவும் விசனமடைந்தார்.

# ஹெடன்ஸா

அவருக்கு

பரிபூரண நிவாரணமளித்தது.





"எனக்கு மகிழ்ச்சியே! என் பெயர் லிலியா." முத்துப் பிரிந்தாற்போல், மோகனம் அவிழ்ந்தது அவள் இதழ்களில்.

சற்று நேரத்தில் வேதனையின் கமறல் ஊடுருவியதே போல் அவள் முகம் தழைந்தது. "நீங்கள் ஜப்பானியரா?" என்று கேட்டாள்.

என் குள்ள உருவத்தைக் கண்டு அவளுக்கு இந்தச் சந்தேகம் தோன்றியது போலும்! என் கூரிய மூக்கைக் கண்டு அவள் என்னை 'இந்தியன்' என்று தெரிந்திருக்கலாமே! "இல்லை" என்று கூறினேன்.

"நானும் நினைத்தேன். இருந்தாலும் சந்தேகத்தோடு பழகுவதைக் காட்டிலும், தெளிவோடு உறவைத் தொடங்குவது நல்லது. பாருங்கள். எங்கள் தீவுகளில் மூன்றில் ஒரு பகுதியினராக ஜப்பானியர்கள் நிறைந்து விட்டார்கள். எங்கள் செல்வம், பிற நாட்டினரின் பெரும் தொடர்பால் வெளியேறிச் செல்லச் செல்ல நாங்கள் ஏழைகளாகி விட்டோம். முக்கியமாக, எங்கள் வெறுப்புக்குரிய அந்தச் சப்பட்டை மூக்கர்கள் தாம் எங்கள் செல்வத்தைப் பொதி பொதியாக ஏற்றிக் கொண்டு போகின்றனர். அந்தக் கரண்டக்காரர்களில் ஒருவராக நீங்கள் இல்லாதது பற்றி நன்றி." நெஞ்சை அடைத்துக் கொண்டிருந்த கல்லைச் சுவாசத்தின் வழியாகப் பிளந்து விடுவதைப் போல நீண்டதொரு பெருமூச்சு விட்டாள் லிலியா.

"உங்கள் நாட்டவர் அரசியலைப் பற்றி, நாட்டைப் பற்றி அதிகம் கவலைப்படாதவர்கள். கேளிக்கை வாழ்வில் அதிக விருப்பம் உள்ளவர்கள் என்று மட்டுமே நான் கேள்விப் பட்டிருக்கிறேன். அதைத் தவிர உன்னைப் போன்றோரின் குரல் தூர தேசங்களிலிருந்து எங்கள் காதில் விழுவதில்லை."

"விழ முடியாதவாறு செய்து விட்டார்கள் அமெரிக்கர்கள். வெளிநாட்டவர் எங்கள் இதயத்தைக் காண வேண்டுமானால் அமெரிக்கரின் பத்திரிகையைப் பார்ப்பதைத் தவிர வேறு வழியே இல்லையே! என்னைப் போல் நாட்டுக் கவலை பிடித்த நல்ல மனிதர் இந்த நாடு முழுதும் நிறைந்திருக்கின்றனர். எங்கள் குடும்பம் நாட்டுப் பற்றால் இழந்த செல்வங்கள் எத்தனையோ! எங்கள் பழைமைச் சுதந்திரத்தின் இறுதிக் கனவின் சின்னமாகத்தான் என் பெயர் அமைந்திருக்கிறது. எங்கள் கடைசி அரசியான லிலியா ஹோரபானி, 1893-ஆம் ஆண்டில் அமெரிக்க வியாபாரிகளின் சூழ்ச்சியால் பதவி இழந்தார். அதிலிருந்து நாங்கள் அமெரிக்கருக்கு அடிமையாகி விட்டோம். அந்த அரசியின் பெயரைத்தான் எனக்கு வைத்து, எங்கள் சுதந்திரத்தை மீண்டும் அடையப் போவதாக ஊமைக்கனவு கொண்டிருக்கின்றனர் என் குடும்பத்தினர்.

அவள் கூறிக் கொண்டிருக்கும்போதே, தென்னந்தோப்பிலிருந்து "லிலியா...அடியே லிலியா..." என்று ஒரு கிழட்டுக் குரல் உரத்தமாக ஒலித்தது.

லிலியா எழுந்து நின்று கொண்டாள். "பாட்டி என்னை அழைக்கிறாள். நான் வருகிறேன். நாளை மாலையில்......" என்று முடிக்காத பேச்சை, செந்துவர் இதழ்களின் இள நகையில் முடித்துக் கொண்டு நடந்தாள்.

எனக்கு முடிந்ததெல்லாம் பெருமூச்சு விடுவது ஒன்றுதான். நாளை மாலைவரை அவளை நான் பார்க்காமல் இருப்பதா?

மறுநாள் அந்தி மங்கை ஆடிக் களிப்பதற்கு முன்னமேயே கடற்கரையில் காத்துக் கிடந்தேன். முன்னைப் பழம் பிறவியின் தோழியை, பின்னைப் புதுப்பிறவியின் மனைவாசலில் வரவேற்கக் காத்திருப்பதில்தான் எத்தனை ஆனந்தம்?

என் நெஞ்சில் வந்து விழுந்தது ஒரு கடல் பூ. நினைந்தவள் கண்ணெதிரே வார்க்காத சிலையில் வண்ணத் திருவுருவாய் நின்று கொண்டிருந்தாள் விவியா.

"விவி..." என்று தாவிப் படர்ந்தேன் அவளை நோக்கி.

மோப்பக் குழைந்த அனிச்சம்போல் முகம் வாட விலகி நின்று கொண்டாள் அவள்.

"விவி! பயப்படுகிறாயா? நான் உன் கழுத்தில் இட்ட பாம்பு மாலையைப்போல் என் கரம் விஷத்தை உள்ளுக்குள் வைத்துக் கொண்டிருக்கும் பாம்பு என்று நினைத்துவிட்டாயா? என் கண்ணே, என்னிடம் சந்தேகமா? இந்தியன் அன்பால் ஏமாறுவானே தவிர ஏமாற்ற மாட்டான்......" உண்மையைக் குழைத்து உணர்ச்சியில் வார்த்த எனக்கு மேலே பேச முடியவில்லை.

"கணேஷ்! நான் உங்களை மனமாரக் காதலிக்கிறேன். உங்களைப் பிரிந்தால் என் உயிரும் பிரிந்துவிடும். ஆனால் படித்தவள் என்பதற்காகவும், 'காதல்' என்ற என் சுயநலத்துக்காகவும் எங்கள் நாட்டுச் சம்பிரதாயத்தை நான் மீற முடியாது. நீங்கள் என்னைத் தொடுகிறீர்கள். நானும் உணர்வால் உந்தப்பட்டு அந்த காரியத்தைச் செய்வேன். ரசாயன பேத நிகழ்ச்சி அடுத்து முளைக்கும். அதன் விளைவாக உயிர் பெறும் ஒரு குழந்தைப் பிரஜை சமூகத் தூற்றலுக்கு ஆளாகும். ஆகவே கணேஷ், நாம் காதலர்களாகவே பிரிந்து விடுவோம். உங்களை நினைந்து நினைந்து உருகிச் சாகும் ஓர் அபலையை மட்டும் இந்த நாடு இழக்கட்டும்."

"உன் நாடு இழக்கத் தயாராக இருந்தாலும் உன்னை இழக்க நான் தயாராக இல்லை!" என்று கூறிவிட்டுக் கத்திய நான் பதறிய நெஞ்சைப் பக்குவமாக்கிக் கொள்ளச் சிறிது நேரம் பிடித்தது. "இந்த வருஷம் படிப்பு முடிந்ததும் கொலம்பியாவிலிருந்து திரும்பி வந்து உன்னைத் திருமணம் செய்து கொள்வேன். ஒரு ஹவாய்ப் பிரஜையாகி நான் இங்கேயே தங்கி விடுவேன்......"

"உங்கள் உயர்ந்த கல்வியும், அன்டிவாபத்தைக் கரண்டும் அமெரிக்க வாசனையும் உங்களை இங்கே இருக்கவிட மாட்டா. நீங்கள் திரும்பி வருவதாக இருந்தால் ஒரு சோதனை வைக்கிறேன். அது வெற்றி கொண்டால் என் பட்டுக் கரம் அப்பொழுதே உங்களைத் தீண்டும். பிறகு நான் உங்களை எதிர்பார்த்து இந்தக் கடற்கரையில் ஆயுள் முழுதும் காத்துக் கிடப்பேன்."

சோதனை! என்னைக் காதலனாக அவள் ஏற்றுக்கொண்ட பிறகுடவா அவளுக்குச் சந்தேகம்? என்ன சோதனை?





எக்ஸிமா
பருக்கள்
வெட்டுக்காயங்கள்
ரணங்கள்
மற்றும்
தீப்பட்ட
புண்களுக்கும்







லிட்டில்ஸ்
ஓரியண்டல் பாம் &
பார்மசூடிகல்ஸ்
லிட்., சென்னை-2
GX106

"உங்கள் கழுத்தில் 'லெய்' என்னும் பூ மாலையைப் போடுவேன். நீங்கள் அந்த மாலையுடன் ஒரு தோணியில் ஏறிக் கடலில் செல்ல வேண்டும் சில மைல்கள். அங்கே நீங்கள் அந்த மாலையை நீரில் விட்டு வீசவேண்டும். அதை அலைமகள் கரையில் கொண்டுவந்து சேர்த்தால், நீங்கள் கொலம்பியாவிலிருந்து திரும்பி வருவீர்கள் என்று அர்த்தம். மாலையை அலையில் வீசிய ஒரு மணி நேரத்தில் இங்கே திரும்புங்கள். முடிவு வெற்றியாக இருந்தால், எரிமலைக் கடவுளால் இணைவோம்."

"லிலியா! அந்த மாலையை நம்புவதைவிட என்னை நம்பு. நான் எப்பொழுதும் உன் நினைவுக்கனவிலேயே ஒதுங்கி இருப்பேன். அந்த வாடுகிற மாலையை நம் வாடாத காதலுக்குச் சாட்சியாகக் கொண்டு வராதே!"

"நம் காதலைக் கடவுள் அறிவார். அவர் நம்மை ஏமாற்றிவிட மாட்டார். நான் சொன்ன காரியத்தை நீங்கள் செய்துதானாக வேண்டும் கணேஷ். இந்தச் சோதனை எனக்குரியதல்ல. எங்கள் நாட்டுப் பழம் பெரும் சம்பிரதாயம். வெளி நாட்டினர் எங்களை விட்டுப் பிரியும்பொழுது எங்களவர்கள் 'லெய்' மாலையைப் போட்டு அனுப்புவார்கள். அந்த மாலையை அவர்கள் கடலில் வீசி எறிவார்கள். அது கரைக்கு வந்து சேர்ந்தால் ஹவாய்க்கு மீண்டும் வருவார்கள் என்பது எங்களவர் நம்பிக்கை. அந்தப் பழம் நம்பிக்கையை என் வாழ்வை உருவாக்க உபயோகப் படுத்திக் கொள்வது ஒன்றுதான் புதுச் சம்பிரதாயம்." என்றாள் லிலியா.

நான் நெஞ்சம் அவிந்து புகைந்து கொண்டிருந்தேன். எத்தனை புத்திசாலிகளாக இருந்தாலும் பழைய மூடப் பழக்க வழக்கங்களில் உள்ள நம்பிக்கை இந்த ஹவாயர்களை விட்டுப் போகாததனால் தானோ அடிமைகளானார்கள்?

நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன் என்று சொல்வதைவிட, அந்த முடிவில் தள்ளிவிடப்பட்டேன் என்பதே பொருந்தும். "லிலியா! நாளைப் பிற்பகல் இரண்டு மணிக்கு என் கழுத்தில் 'லெய்' மாலையைப் போட்டுத் தோணியில் தூக்கு. நான் திரும்பும்பொழுது முடிவு எப்படி வேண்டுமானாலும் இருக்கட்டும்."



அவள் முகத்தை மூடிக் கொண்டு விம்மினாள். "நான் ஏன் 'ஹுலா ஹுலா' நடனம் ஆடினேன்? ஏன் உங்களைச் சந்தித்தேன்?" இரு பெரும் நெருப்புக் கேள்விகளை என் நெஞ்சில் விட்டெறிந்து விட்டு, சற்றுத் தொலைவில் தழைத்துக் கிடந்த சர்க்கரை வள்ளிக்கிழங்குத் தோட்டத்தை நோக்கித் தளர்ந்து நடந்தாள் லிலியா.

ஏகாந்த வெளியில் எல்லையற்றுக் கிடந்த நிஷ்டூரத்தின் வெம்மையில் கண்ணீர்க் கோலத்தை உதிர்த்துக் கொண்டே பொருமியது என் நெஞ்சம்: "'லெய்' மாலையே! என் காதலின் பவித்திரத்தைக் கீறிக் காட்டவிருக்கும் தங்கக் கத்தியே! உனக்கு என் அலோஹா!"

## எரிமலைக் கடவுளுக்கு அலோஹா!

அந்த நாள்: பிற்பகல் மூன்றரை மணி இருக்கும். வைக்கிகிக் கடற்கரையில் லிலியா பரபரப்புடன் நின்று கொண்டிருந்தாள். அவள் தோழியர் பதின்மர் நுரைப் பூக்கள் உதிரும் கரையில் ஒரு மைல் நீளத்துக்கும் பிரிந்து சென்று 'லெய்' மாலையைத் தேடும் பணியில் ஈடுபட்டிருந்தனர். கரையை அணுகிக் கொண்டிருந்த என்னுள் ஒரு பிரளயமே கர்ஜித்துக் கொண்டிருந்தது. 'கிடைத்திருக்குமா அந்த இதயமற்ற மாலை?'

எப்பொழுதோ 'லெய்' மாலையைக் கடலில் விட்டெறிந்து விட்டு, முடிவின் பயங்கரத்தை எதிர்நோக்கி வந்து கொண்டிருந்த நான், கரையேறியதும் "லிலி! 'லெய்' மாலை கரையில் ஒதுங்கி விட்டதா?" என்றேன்.

அவள் பதில் பேசவில்லை.

"பதில் சொல், லிலி!" அதிர்ந்தது என் குரலில்.

அவள் கண்கள் பெருக்கெடுத்தன. "'லெய்' மாலை கடற்கரையில் ஒதுங்கவில்லை. நாம் சேர்ந்து வாழ்வது கடவுளுக்குப் பிடிக்கவில்லை. நாம் இனி மீண்டும் சந்திக்கவே மாட்டோம்....."

"ஏன் சந்திக்க மாட்டோம்? நான் இங்கேயே இருந்துவிடுகிறேன், லிலியா! நீ இல்லாத வாழ்க்கையை இனிமேல் என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாது."

"கடவுள் அனுமதி இருந்திருந்தால் நீங்கள் கடலில் வீசிய மாலை கரையில் ஒதுங்கியிருக்கும். கடவு

ளுக்கே பிடிக்காத காரியத்தை ஹவாயர்கள் கலப்பாகச் செய்வார்கள் என்ற ஏச்சுக்கு இடம் கொடுக்க நான் தயாராக இல்லை. நீங்கள் இங்கே இருக்கவும் கூடாது. என்னை இனி நீங்கள் சந்திக்கவும் கூடாது. தப்பித் தவறி உங்களை நான் பார்க்க நேர்ந்தால் அடுத்த நிமிஷம் நான் கடலில் குதித்து விடுவேன்.'' சொல்லக்கூடாததைச் சொல்லிவிட்டளே!

என் காதுகள் ஏன் இன்னும் செவிடாக வில்லை? கண்கள் ஏன் இன்னும் குருடாகப் போகவில்லை?

விம்மிக் கொண்டிருந்த அவள், என் முகத்தைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தாள் ரொம்ப நேரம். ''இந்த முகத்தை என் நெஞ்சில் பதித்து, அதற்குக் கண்ணீர் மாலையைச் சூட்டி அர்ச்சித்துக் கொண்டிருப்பேன் எந்நாளும். கடவுளின் 'கௌளு'வுக்கு (சாபத்துக்கு)ப் பயப்படுகிற ஒரு ஹவாய்ப் பெண்ணாகப் பிறந்த தோஷத்தினால் காதலை இழந்து தவிக்கிற தவிப்பு, அடுத்த ஜன்மத்துக்கும் தொடரக் கூடாது என விரும்புகிறேன். அப்பொழுது வேறொரு நாட்டில், உங்கள் இந்தியாவில், குறிப்பாக, உங்கள் தமிழ் நாட்டில் பிறந்து உங்களைக் காதலித்துத் திருமணம் செய்து கொள்வேன்'' என்று கூறிவிட்டு என்னை வெந்தழல் விழிகளால் பொசுக்கினாள். ''இன்னும் ஏன் நின்று கொண்டிருக்கிறீர்கள்? போய் விடுங்கள். சீக்கிரம். போகிறீர்களா? இல்லை, நான் கடலில் விழுந்து சாகட்டுமா?''

''நீ சாக வேண்டாம் லிலி! நானே உயிரோடு சாகிறேன்.'' ''போகத்தானே வேண்டும்? இதோ போகிறேன். 'ஐயோ' என்று அலறிக் கொண்டே போகிறேன்.'' மிஞ்சியிருக்கிற வாழ்க்கைக்கு மிஞ்சாத என் காதல் நெருப்பை, என் லிலியானவை நெஞ்சில் சுமந்து தள்ளாடித் தள்ளாடி நடந்தேன்.

லிலியானின் கண்ணீர்த் துளிகள் பாடிய கவிதையின் ஏக்கம் என் காதுகளில் எதிரொலித்தது.

''காதலனைக் காட்டிக் காதலை நய வஞ்சகமாக என்னிடமிருந்து பறித்துவிட்ட எரிமலைக் கடவுளே! உன்னைச் சபிப்பதற்கு நான் ஓர் அமெரிக்கக்காரியாக இல்லையே என்று வருந்துகிறேன். ஒரு ஹவாய்ப் பெண்ணாக நான் பிறந்து விட்ட தீவினைக்காக உன் நெருப்புப் பாதங்களுக்கு 'அலோஹா' கூறுகிறேன்.''

## ஹவாய்க்குக் கௌளு கௌளு!

பஸிபிக்கின் நெஞ்சைப் பிளந்து போய்க் கொண்டிருந்தது நான் ஏறியிருந்த கப்பல். ஹோனலூலு நகரம் பின்னால் சிறுகச் சிறுக மேகமாய் மறைந்து கொண்டிருந்தது. கப்பலின் அடித்தளத்தில் நின்றிருந்தேன்.

என் எதிரே வனப்புக்குரிய காட்சிகள் ஆயிரம் குவிந்துதான் இருந்தன. ஆனால் அந்த விரைப்பின் மரம் அடிக்கு இலக்காகிவிட்ட என் மனத்தே குருட்டு இருட்டுத் திரை ஒன்று ஆயுள்வரைக்கும் தொங்கவிடப்பட்டிருக்கிறது.

இப்பொழுதும், இனி எப்பொழுதும் எனக்கென்றே ஒதுக்கப்பட்டிருக்கும் சூன்யத்தின் பயங்கர நிருத்யத்துக்குத் தளமாக அமைந்து விட்ட என் மனம், புயல் குரலை எழுப்பியது.

''ஹவாய் நாடே! நீ தீட்டிய மூடப்பழக்க வழக்கங்களால் உன் மக்கள் மட்டுமா பலியாகிறார்கள்? உன் மண்ணில் மிதிக்க நேர்ந்த தமிழனின் வாழ்க்கையைக் கூடவல்லவா துவம்சம் செய்து விட்டாய்? உனக்கு என் அலோஹா அல்ல; 'கௌளு கௌளு!'



# தேய்ந்த மோட்டார் உருப்புகளை வீணாக்க வேண்டாம்!

எத்தனையோ தேய்ந்துபோன மோட்டார் உருப்புகளை டிவிஎஸ் புதுப்பித்திருக்கிறது. அவை புத்துயிர் பெற்று, நன்றாக உழைக்கின்றன. ஆனால், சிலர் தேய்ந்து போன உருப்புகளை குப்பையில் எறிந்து விடுகிறார்கள். மிக நுணுக்கமான நவீன யந்திரங்களையும், தேர்ச்சிபெற்ற தொழிலாளர்களையும் கொண்டு டிவிஎஸ் புதுப்பிக்கும் வேலையை செய்கிறது. உருக்கிய உலோகத்தை, தேய்ந்துபோன உருப்புகளின்மீது தெளித்து, உற்பத்தியாளர்கள் நிர்ணயித்த அளவுக்கே அதனைக் கடைசல் பிடிக்கிறார்கள். புதுப்பிக்கப்பெற்ற உருப்புகள் புது உருப்புகளைப்போலவே இருக்கின்றன. ஆனால் விலையோ பாதிக்கும் குறைவு; எனினும் புது உருப்புகளைப் போலவே நீண்டநாள் உழைக்கக்கூடியவை. புதிய மோட்டார் உருப்புகளின் இறக்குமதி மிகமிகக்குறைவு. நீங்கள் உபயோகமற்றவை என்று கருதும் மோட்டார் உருப்புகளை குப்பையில் எறிய வேண்டாம். மீண்டும் உழைக்க அவற்றை டிவிஎஸ் புதுப்பிக்கட்டும்.

கீழ்க்காணும் மோட்டார் உருப்புகளை டி. வி. எஸ். புதுப்பிக்கிறது:

- தேய்ந்துபோன "ஹப்"
- தேய்ந்துபோன "பிரஷர் ப்ளேட்"
- தேய்ந்து போன "புரொபெல்லர் ஷாப்ட்"
- துருப்பிடித்து நசித்த அலுமினியம் "சிலிண்டர் ஹெட்"




**டி. வி. சுந்தரம் அய்யங்கார் அண்ட் ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட், மதுரை**

கிளைகள்: திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை
சேலம் - கோயமுத்தூர்

**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட**

மதுரை - பெங்களூர் - செகந்திராபாத் (டெக்கான்)

JWT-TVS-RC 1047a

# பொங்கல் தமாஷ்


"இவா, என் பொங்கல். இது என் மாட்டுப் பொங்கல்.."
"பொங்கலை வாயில் வைத்துக் கொண்டு பேசாதீங்கோ! சாப்பிட்டு விட்டுப் பேசுங்க...."


"நீ பொங்கலைப் பத்திக் குழம்பப் பேசினே. நான் அடங்கிட்டேன்...."
"ஏன்....?"
"எனக்குத்தான் சர்க்கரை உடம்புன்னு தெரிஞ்சுக்காதே!"


"பாகவதர் மகாபுத்திசாலி. அதிர் ராகம் பாடினா அன்னு சோறு கிடைக்காதுன்னு சொல்லுவா. இன்னிக்கு வைகுண்ட ஏகாதசி என்று தெரிஞ்சு அந்த ராகத்தைப் பாடுகிறார் பார்த்தேளா?"


"இந்த மீனா கோமா எல்லாக் கரும்பையும் பார்த்து விட்டு ஒன்றும் வாங்காமல் போகிறேன். கோபித்துக் கொள்ளாதே"
"கரும்பு வாங்காமல் போனால் என்ன? என் உயிரைத்தான் வாங்கிட்டீங்களே"




"அரசாங்கம் குடும்பக் கட்டுப்பாடு செய்வதற்கு முன்னலேயே நம் சென்னைப் பால்காரர்கள் நம் குடும்பத்தைக் கட்டுப்பாடு செய்வதைப் பார்த்தாயா?"

JEYRAD RADIO

# ஜேரட் ரேடியோ

சீஸனின் சிறந்த கொள்முதல்



மாடல் A 222
5 V AC 3 பாண்ட்டல் ஆல் வேவ்
நிகர விலை ரூ. 225/-



மாடல் A 152
6 V AC 3 பாண்ட்டல் ஆல் வேவ்
நிகர விலை ரூ. 285/-



மாடல் A 707
6 V AC 5 பாண்ட் ஸ்பிரெட் ஆல் வேவ்
நிகர விலை ரூ. 375/-

ஜேரட் எலக்ட்ரானிக் இண்டஸ்ட்ரீஸ்
38. தங்கசாலை வீதி — சென்னை-3

# ஆஸ்தமா பிராங்கைடீஸ் குளிர்சுரம்

முதலியவைகளை எப்படி அடக்குவது

மூச்சுத் திணறல், இருமல், சிரமப்பட்டு மூச்சு விடுதல், சுவாசம் தடைபடுதல் ஆஸ்த்மா, ப்ராங்கைடீஸ், ஜலதோஷம், குளிர் சுரம் முதலிய உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கான பேர்கள் இப்பொழுது மெண்டாகோ (Mendaco) சாப்பிட்டு நிவாரணம் அடையலாம். இந்த நவீன விஞ்ஞான அமெரிக்க மருந்து, இரத்தத்தின் மூலமாக சுவாசப்பைகள் சுவாசக் குழாய்கள், மற்றும் மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக, அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் மற்றும் சிரமப்பட்டு மூச்சு விடுதல் இல்லாமல் சுகமாகச் சுவாசித்துக் குழந்தை போல் தூங்கலாம். பூரண திருப்தி உங்களுக்கு அது நிச்சயமாக அளிக்கும்.

# உங்கள் சருமத்தை சுத்தமாக வையுங்கள்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப்பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும், வழவழப்பாகவும் மாசு மருவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், கட்டிகள் செந்நிறத் தழும்புகள், மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் அது இருக்கச் செய்யும் என்ற பூர்ண நம்பிக்கையுடன் நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள்.

# கரடி!

வே. கோவிந்தராசன்

வெள்ளத்தில் சிக்கிய செடிகளும் கொடிகளும் அடிபட்டு இடிபட்டு வேகமாக ஓடி எங்கேயோ எப்படியோ ஒதுங்கி விடுவதில்லையா? வாழ்க்கையும் அப்படித்தானே ஏதோ ஒரு வேகத்தில் எப்படியெல்லாமோ ஓடிச் சென்று, எங்கேயோ முடிவடைந்துவிடுகிறது!

முதன் முதலில் அந்தச் சிறுவனைப் பார்த்தபோது அவன் வாழ்க்கையின் வளர்ச்சியைப் பற்றியோ வாட்டத்தைப் பற்றியோ எண்ணியிருப்பேனா, என்ன? எங்கள் காரியாலயத்துக்குப் பக்கத்திலிருந்த பங்களாவின் தோட்டத்துச் செடிகளுக்கிடையே அவனுடைய குறுகுறுத்த முகம் எப்போதாவது தென்படும். மிரட்சியுடன் எங்களைப் பார்த்தவாறு சிறிது நேரம் நிற்பான். உடனே மறைந்து விடுவான். சில சமயங்களில் 'குடுகுடு' வென்று தெருவில் ஓடுவான். பார்வை எங்கள் காரியாலயத்தின் பக்கம்தான் இருக்கும். ஆனால் நெருங்க மாட்டான். அணில் மிரண்டு, மிரண்டு துள்ளி ஓடி விடுவதில்லையா அப்படி!

இவ்வாறாக புதரில் பதுங்கி வாழும் காட்டு ஜந்துபோல் உருவாய் காட்டிப் பதுங்கியோடிய அந்தச் சிறுவனின் வாழ்வில் என்னென்ன சம்பவங்கள் நிகழ்ந்துவிட்டன! எவ்வளவு வேகமாக நிகழ்ந்து விட்டன! வறண்ட நிலத்து ஒரு மூலையில் ஒதுங்கிக் கிடக்கும் முட்செடியாகிய அவனுக்கு வாழ்க்கையில் தான் எத்தகைய அசையாத நம்பிக்கை! அவன் வாழ்வில் குறுக்கிட்ட காதல் விசித்திரமும், கலியாணக் கோலமும், துன்பங்களும் என் நெஞ்சில் நீங்காமல் நிலைத்துநின்று என்ன தத்துவம் பேசுகின்றன?



## 1. ஒரு ரகசியம்

"டேய், கரடி! இங்கே வாடா!" என்றுதான் யாரும் அவனை அழைப்பார்கள். அவனும் கரடியைப் போலவே தத்தித் தாவி ஓடிவந்து எதிரில் நிற்பான். அவனுக்கென்று வேறு பெயர் ஏதாவது இருக்குமோ, என்னவோ? ஆனால், 'கரடி' என்றுதான் யாருக்கும் அவனைத் தெரியும்.

அவன் சிறுத்த முகத்தில் நாசியும் மேல் உதடும் சற்று முன்தள்ளி மிகையாக நீண்டிருக்கும். அதைக் கண்டுதான் அவனுக்கு அந்தப் பெயரை இட்டார்களோ, என்னவோ? குறுகி உள்ளடங்கிய அவன் நெற்றிக்கு மேல் தொடங்கி அவன் கழுத்துவரை சிலிர்த்து அடர்ந்திருந்த சடையைக் கண்டுதான் அந்தப் பெயரை இட்டார்களோ! குள்ளமான அவன் உருவத்தோடு பொருந்தாமல், சற்று நீண்டிருந்த கைகளை வீசித் தன் வளைந்த கால்களால் அவன் அடிவைத்து நடக்கும் நடையைக் கண்டுதான் அந்தப் பெயரை இட்டார்களோ!

எப்படிப் பழகினானோ யாரிடம் பழகினானோ தெரியவில்லை. எங்களைக் கண்டு அஞ்சி ஓடிக் கொண்டிருந்தவன் மிகக் குறுகிய காலத்திலேயே எங்கள் காரியாலயத்துக்குள் சுதந்திரமாகச் சுற்றி வர ஆரம்பித்து விட்டான். எத்தனையோ பேர்கள் அவனிடம் என்னென்னவோ வேலைகளைச் சொல்வார்கள். ஏதோவொரு வேலை அவனுக்கு இருந்துகொண்டே இருக்கும். அத்தனை வேலைகளையும் அவன் சளைக்காமல், சலிக்காமல் செய்துகொண்டே இருப்பான். சிறிதும் முகம் கோணாது. முகம் மாறாது யார் அழைத்து என்ன வேலை சொன்னாலும் அதைச் செய்து முடிப்பான்.

திடீரென்று ஒருநாள், கரடி என் மேஜையருகில் வந்து கைகளைக் கட்டிக் கொண்டு நின்றான். முகத்தில் குறும்பின் வேகம் துடிக்க, "காப்பி வாங்கி வரட்டுமா, சார்?" என்று கேட்டான்.

மும்முரமாக வேலையில் ஈடுபட்டிருந்த எனக்கு அவன் செய்கை எரிச்சலை மூட்டினாலும் அதை வெளிக் காண்பிக்காமல் "வேண்டாம், போ!" என்றேன்.

"நான் போய் வாங்கி வர்றேன், சார்! சாப்பிடுங்க!"

"நீ போகவும், வேண்டாம்; வாங்கவும் வேண்டாம்! முதல்லே இங்கிருந்து நகரு!"

"சரிதான் சார்! சலாம் சார்.....சலாம் சார்!" என்று நகைத்தவாறு 'சலாம்' செய்து கொண்டே அவன் சென்றுவிட்டான்.

'எல்லாரும் சேர்ந்து இவனுக்கு அதிகமாக இடம் கொடுத்து விட்டார்கள்' என்று எண்ணிக்கொண்டு நான் மீண்டும் வேலையில் ஆழ்ந்து விட்டேன்.

சிறிது நேரத்துக்குப் பின் தலை நிமிர்ந்த நான் திடுக்கிட்டேன். என் மேஜையின் மேல் ஒரு கண்ணாடித் தம்ளரில் காப்பி இருந்தது. அவனுடைய வேலைதான் அது. வரட்டும் அவன் என்று சிறிது நேரம் காத்திருந்தேன். ஆளும் அவனைக் காணோம். எனக்கும் காப்பி வேண்டியிருந்ததால் அதை அருந்திவிட்டு வேலையைக் கவனித்தேன்.

வெகு நேரத்துக்குப் பின் அவன் தென்பட்டான். ஓரக்கண்ணாலும் என்னைப் பார்த்துக் கொண்டே அங்குமிங்கும் சுற்றினானே ஒழிய என்னை நெருங்கவில்லை. நானே அவனை அழைத்தேன்.

"டேய்! உன்னைத்தான் - கராடியா, காண்டாமிருகமா! இங்கே வாடா!"

அவன் 'குடு, குடு' வென்று ஓடிவந்தான்.

"ஏண்டா உனக்கு இந்த வேலை? நான் தான் வேண்டாம் என்றேனே!" என்று கூறிக்கொண்டே இரண்டணாவை எடுத்து நீட்டினேன் அவன் அதை வாங்காமல் தம்ளரை மட்டும் கையில் எடுத்துக்கொண்டு சற்றுத் தள்ளி நின்றான். பிறகு குறும்புடன் சிரித்துக் கொண்டே "சலாம் சார்!" என்று கூறிவிட்டு, ஓட்டமாக ஓடிப்போனான்.

அதன் பிறகு இரண்டு நாட்களாக அவன் என் கண்ணில் படாமல் ஒளிந்து, ஒளிந்து ஓடிக் கொண்டிருந்தான். மூன்றாம் நாள் காரியாலயத்திலிருந்து வெளியே செல்லும் போது எங்கோ போய் விட்டு ஓடி வந்த அவன் கையைப் பிடித்துக் கொண்டேன்.

"என்னடா, இரண்டு நாட்களாக நானும் கூப்பிடுகிறேன், ஓடி ஓடிப்போறியே!"

"நீங்கதான் கோபிச்சுக் கிட்டீங்களே, சார்!" என்றான் அழாக்குறையாக.

"சரிதான், காசைப் பிடி!"

"வேண்டாம் சார்! அந்தக் காப்பி நம்ம 'சப்ளைங்க!"

"என்னது?"

"நம்ம சப்ளைங்க!"

'சட்'டென்று கையை விடுவித்துக்கொண்டு அவன் ஓடிப் போனான். அதன் பிறகும் பல முறை முயன்றும் அந்தக் காசை அவனிடம் கொடுக்க முடியவில்லை. எனவே அந்த முயற்சியைக் கைவிட்டேன். நாளாவட்டத்தில் பல எடுபிடி வேலைகளுக்காக நானும் மற்றவர்களைப்போல் அவன் உதவியை நாடினேன். மொத்தத்தில் எங்கள் காரியாலயத்துக்கே அவன் தவிர்க்க முடியாததொரு தேவையாகி விட்டான்.

இதில் வேடிக்கை என்னவென்றால், எவ்வளவு வேலைகள் செய்தாலும் அவன் யாரிடமும் எதுவும் பெற்றுக் கொள்வதில்லை. "எனக்கு எதுக்கு சார், காசு? வேண்டவே வேண்டாம்!" என்று மறுத்துவிடுவான். பக்கத்துப் பங்களாவில் வேலை பார்த்த அவன் மாமன்தான் அவனுக்கு ஆதரவு. அவன் திரும்பிச் செல்லும்போது இவனும் சென்று விடுவான். இப்படியே ஐந்தாறு மாதங்கள் கழிந்து விட்டன.

தினமும் சற்று நேரம் உற்சாகமாகப் பொழுதுபோக்க வசதியாக, 'கிளப்' ஒன்றை நாங்கள் தொடங்கினோம். புத்தகங்கள், கேரம் பலகை, ரேடியோ போன்றவற்றை வாங்கியபின், 'கிளப்'புக்காக ஒரு பையனையும் நியமிக்கவேண்டியிருந்தது. கராடி இருக்கும்போது எங்களுக்கு என்ன கவலை? 'கிளப்'பின் மாத வருவாயையும் செலவையும் கணக்கிட்டு, மாதச சம்பளமாக அவனுக்கு ஐந்து ரூபாய் தருவதெனத் தீர்மானித்தோம். கராடி எங்கள் 'கிளப்-பாய்' ஆனான்!

மாலை ஐந்து மணிக்கெல்லாம் 'கிளப்'பைத் திறந்து எல்லாவற்றையும் எடுத்துத் துடைத்துத் தயாராக வைத்து விடுவான். இரவு ஒன்பது மணிவரை பம்பரமாகச் சுழன்று வேலை செய்வான் எல்லாரும் செல்லும் வரை பொறுமையாகக் காத்திருந்து, பின்னர் 'கிளப்'பை மூடிவிட்டு அவன் வீட்டுக்குச் செல்வான்.

அவன் தோற்றத்திலும் கொஞ்சம் மாற்றம் ஏற்பட்டது. கராடியாகக் கிடந்த தலைமயிர் எண்ணெய்ப் பசை கண்டு பின்னர் ஆரம்பித்தது. முடிந்த வரை அதைச் சீவியும் விட்டிருந்தான். சட்டையையும் கால் சட்டையையும் துவைத்துச் சுத்தமாக அணிந்து வந்தான். ஒரு கைக்குட்டையைக் கையில் வைத்துக் கொண்டு, எண்ணெய் வழியும் தன் முகத்தை அடிக்கடி துடைத்து விட்டுக் கொண்டான்.

ஒருநாள் அவனைக் கேட்டேன். "ஏண்டா கராடி! உனக்கு என்ன வயசாகுது?"

"தெரியலே சார்!"

"என்னடா, இப்படிச் சொல்றே? உனக்கு வெட்கமாயில்லே? உன் வயசு கூடவா உனக்குத் தெரியலே?"

"ஒருவேளை, பதினெட்டோ அல்லது இருபதோ இருக்குங்க!"

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. அவனுக்குப் பதினைந்து வயசுக்கும் கீழேதான் நான் மதிப்பிட்டிருந்தேன்.

"உனக்குப் பதினைந்து வயசுதாண்டா இருக்கும். பதினெட்டும் இல்லே, இருபதுமில்லே."

"சரி சார்!"

"என்னடா. எல்லாத்துக்கும் சரிங்கறே? இப்படி வயசைக்கூடத் தெரிஞ்சுக்காமல் இருக்கலாமா?"

"என் மாமன் அப்படிச் சொல்லிட்டாருங்க. எனக்குக் கலியாணம் பண்ணிக்கிற வயசாயிடுச்சாம்!"

"ஏண்டா, உன் மாமனுக்குப் பெண்ணிருக்கா?"

"ஆமாங்க!"

"அப்படியா, சங்கதி? அப்போ சீக்கிரமே கலியாணம் நடக்கப் போகுதுன்னு சொல்லு!"

"சார்! போங்க...சார்!"

"டேய் முட்டாள்! மாமன்தான் சொன்னாருன்னு நீ பாட்டுக்கு இப்பவே கலியாணம் செஞ்சுக்காதே! முதல்லே ஒரு நல்ல வேலையைத் தேடிக்க! அப்புறம் கலியாணம் செய்துக்கலாம்!"

"அதென்ன சார், அப்படிச் சொல்லிட்டீங்க? ஆரு இப்படி இருக்கணுன்னு பார்க்க

நீங்களா! நான் ஒரு விசயத்துக்காக காத்துக்கிட்டு இருக்கேன் அவ்வளவுதானுங்க. கொஞ்சநாட்கள் போகட்டும்! அப்புறம் பாருங்க, தெரியும்!''

அவன் சென்றுவிட்டான். யாருக்குத்தான் எதிர்காலத்தைப் பற்றிய கனவும் கற்பனையும் இல்லை? இப்பொழுது கிடைக்காதவை எல்லாமே எதிர்காலத்தில் அடையப்போகும் கனவுகள்தாமே! அந்தச் சின்னஞ்சிறு கரடிக்கு என்னென்ன கனவுகளோ!

## 2 அகஸ்தியனுக்கு அண்ணன்

'கேம்ப்'புக்கு வெளியே வளர்ந்திருந்த கனகாம்பரச் செடிகள் நிறையப் பூத்திருந்தன. தினமும் கரடி அந்தப் பூக்களையெல்லாம் பறித்து எடுத்துச் சென்றுவிடுவான். மாமன் மகளுக்காகத்தான் அவன் பூக்களைக் கொண்டு போகிறான் என்பது எங்களுக்கெல்லாம் தெரியும். சிலர் அவனை வெளிப்படையாகவே கேலி செய்தார்கள். அதையெல்லாம் லட்சியம் செய்யாமல் அவன் தினமும் பூக்களைப் பறித்துச் சென்றுவிடுவான். அவள் மீது அவனுக்கு அவ்வளவு ஆசை!

அப்படி இருந்தவன் திடீரென்று பூப்பறிப்பதையே நிறுத்திவிட்டான் என்றால் அதற்கு ஏதோ முக்கிய காரணம் இருக்கத்தானே வேண்டும்? அவனை அழைத்து விசாரித்தேன்.

''ஏண்டா ஒருமாதிரி இருக்கே? என்ன சங்கதி?'' என்று கேட்டேன்.

''ஒண்ணுமில்லே சார்!''

''சும்மா சொல்லுடா! நீ ஏன் இப்போ பூப்பறிக்கிறதில்லே?''

''என் மாமனோடு கொஞ்சம் தகராறுங்க. அவ்வளவுதான்!''

''ஏண்டா அப்படி? நாளைக்கு மருமகனாகப் போறே. இந்தமாதிரி சண்டை போட்டுக் கொள்ளலாமா?''

''இனிமே ஏதுங்க! மாமனாவது மருமகனாவது...!''

''என்னதாண்டா நடந்துச்சு?''

''சார்! விஷயம் என்னன்னு, என் மாமன் மககிட்டே நேரடியாகவே, என்னைக் கட்டிக்கிறியான்னு கேட்டுட்டேன்! இஷ்டமில்லேன்னு இல்லேன்னு ஒரே வார்த்தையிலே சொல்லலாமில்லே? அவ என்னென்னமோ சொல்லிக் கேலி செய்யறா சார்! பின்னேயாருக்கு கலியாணமாகும்போதுதான் எனக்கும் ஆகுமாம்! பெண்ணாகப் பிறந்த யாரும் என்னைக் கட்டிக்க மாட்டாங்களாம். இப்படியெல்லாம் சொல்றா சார்! இன்னும், நான் அகஸ்தியர்மாதிரி இருக்கேனும். அதனாலே கரடின்னு சொல்றதை விட அகஸ்தியருன்னு சொல்றதுதான் பொருத்தமாம்! நான் குள்ளமா, விகாரமா இருந்தா இருந்துட்டுப் போறேன். எனக்குக் கலியாணமே ஆகாமப் போகட்டும். அதைப்பத்தி இவளுக்கு என்ன சார்? இவ ஏன் சார் என்னை இப்படியெல்லாம் குத்திக் காட்டணும்?''

ஆத்திரத்தில் அவனுக்குக் கண் கலங்கிவிட்டது. பிறகு நிதானப்படுத்திக் கொண்டு பேசினான்.

''இப்படியெல்லாம் அவ பேசினதை மாமன் கிட்டே சொன்னதுக்கு, அவன் என்ன சொன்னான் தெரியுங்களா? 'அகஸ்தியன் உன்னை விடக் குள்ளம். அதனாலே நீ அகஸ்தியனுக்கு அண்ணன்!' அப்படின்னு சொல்றான் சார்! என்ன திமிர் பார்த்தீங்களா? இதுக்கெல்லாம் காரணம் இருக்குதுங்க. புதுசா சுருட்டை முடிக்காரன் ஒருவன் வந்திருக்கான். தூரத்து உறவாம். ஒட்டுமீசை வச்சுக்கிட்டு, வெள்ளைச் சட்டை மாட்டிக்கிட்டு என் மாமன் வீட்டைச் சுத்தி வந்துக்கிட்டு இருக்கான். அவன் வந்தப்புறம் தான் எல்லாரும் இப்படி மாறியிருக்காங்க. நான் விடப்போறதில்லீங்க. எப்படி இன்னொருத்தன் தாலி கட்டுறான்னு பார்க்குறேன்.''

''அது சரி! இப்போ நீ மாமன் வீட்டிலே இல்லையா?''

''அதெப்படிசார்? எனக்கு ரோசமில்லையா, என்ன? ஒரு வாரமா சத்திரத்திலேதான் தங்கியிருக்கேன்!''

''சாப்பாட்டுக்கு என்னடா செய்யறே?''

''தினமும் கூலிவேலைக்குப் போறேனுங்க!''

அதற்குமேல் நான் எதையும் கேட்கவில்லை. ஆனால் சில நாட்களுக்குள்ளேயே கரடி ஒரேயடியாக இளைத்துப் போய் முகம் வாடிச் சோர்ந்து காணப்பட்டான். வெயிலில் அலைந்து ஏதோ கடினமான வேலையைச் செய்வதால் அப்படி ஆகிவிட்டான் என்று எண்ணினேன். ஆனால் உண்மை அதுவல்ல என்பது விரைவிலேயே தெரிந்தது.

அன்று ஏதோ வேலையாக வெளியே செல்லும்போது ஊர் மத்தியிலிருந்த சிவன் கோயிலின் வெளி மண்டபத்தில் அவன் உட்கார்ந்திருந்ததைக் கண்டேன். சிற்பத் தூண் ஒன்றில் சாய்ந்தவாறு காலை நீட்டிக்கொண்டு பழுத்த வேதாந்தி போல அமர்ந்திருந்தான். நாய் ஒன்றும் அவன் பக்கத்தில் படுத்திருந்தது. வியப்புடன் அவனை நெருங்கினேன்.

''காதல் தோல்வியாடா இது? சாமியாராவே போயிட்டியா?''

அவன் சிரித்துக்கொண்டே வெட்கத்துடன் எழுந்து நின்றான்.

''வேலை எதுவும் கிடைக்கலே சார்! எங்கேயும் கூலியாளுங்க நெறைஞ்சு கிடக்குறாங்க. அதனால்தான் இப்படி உட்கார்ந்தேன்.''

''ஏண்டா, தினமும் இப்படித்தான் பட்டினி கிடக்கிறியா? சுத்த மடையனாக இருக்கியே! நாங்க அத்தனை பேர்கள் இருக்கோமே,



விஷயத்தைச் சொல்லக்கூடாது? எங்களுக்காக நாய் மாதிரி வேலை செய்றியே, நாங்க உனக்கு உதவிசெய்ய மாட்டோமா, என்ன? வாடா, கழுதை!''

''வேண்டாம் சார்! நான் சாயங்காலம் வர்றேன், ஸார்!''

நான் எவ்வளவோ வற்புறுத்திக் கூப்பிட்டும் அவன் வரவில்லை. பணம் கொடுத்ததையும் கண்டிப்பாக வாங்க மறுத்து விட்டான். வேறு வழியின்றி அவனை அங்கேயே விட்டுச் செல்ல வேண்டியதாயிற்று. அவனுடைய பிடிவாதம் கோபத்தை மூட்டினாலும் என் உள்ளத்தளவில் அவன் மதிப்பு உயரத்தான் செய்தது. அந்தக் கல்வியறிவற்ற கரடித் தோற்றத்துக்குள்தான் எத்தகைய உறுதியும் பண்பும் நிறைந்த உள்ளம் இருக்கது!

நிலைமையை நண்பர்களிடம் கூறினேன். எல்லோருக்குமே அவனுக்கு உதவுவதில் ஆர்வமிருந்தது. அன்று மாலைக்குள் ஒரு முடிவையும் செய்து வைத்தோம். எங்களில் நாலு ஐந்து பேர்களுக்கு, மத்தியான நேரத்தில் எங்கள் வீடுகளிலிருந்து கரடி சாப்பாடு கொண்டுவர வேண்டியது. ஒரு வீட்டுக்கு இரண்டு ரூபாய் வீதம் அவனுக்குக் கூலி கொடுப்பது. இதற்காக எங்கள் காரியாலய சைக்கிளையே அவன் உபயோகித்துக் கொள்ள வேண்டியது.

கரடிக்கு ஒரே உற்சாகம். உடனே இதற்கு ஒப்புக் கொண்டான். நாங்கள் கொடுத்த முன் பணத்தையும் மகிழ்ச்சியோடு பெற்றுக் கொண்டான். மறுநாளிலிருந்தே வேலை ஆரம்பமாயிற்று. சைக்கிளின் முன் பக்கத்தில் வாழைப் பழச் சீப்பைப் போல் சாப்பாட்டுப் பைகளைத் தொங்க வைத்துக் கொண்டு தினமும் பகல் ஒரு மணியாவதற்குள் எங்கள் காரியாலயத்தை வந்தடைவான் கரடி. பழைய உற்சாகமும், சுறுசுறுப்பும், வேகமும் விரைவிலேயே அவனை வந்தடைந்தன. அவன் பழைய கரடியானான்!

## 3. ராஜயோகம்

மறு மாதம் முதல் தேதி மாலை ஒரு மிட்டாய்ப் பொட்டலத்துடன் ஓடி வந்தான் கரடி. முகத்தில் மகிழ்ச்சி கூத்தாட பெருமிதத்தோடு எங்கள் எல்லாருக்கும் மிட்டாய் வழங்கினான்.

''எதற்கடா இது?''

''சும்மாத்தான் சார்! முதல் சம்பளம் வாங்கியிருக்கேனே!''

''சுத்தப் பைத்தியக்காரனா இருக்கியே! எவ்வளவு பணம் உனக்குக் கிடைக்குது?''

''பதினைந்து ரூபா சார்! கிளப்' பணம் ஐந்து, சாப்பாட்டுப் பணம் பத்து.''

''அந்தப் பதினைந்து ரூபாயையும் இன்னைக்கே தீர்த்துடுவே போலிருக்கே! மாசம் முழுவதும் செலவுக்கு என்னடா செய்வே?''

''அதெல்லாம் எப்படியோ சமாளிச்சுக்குவேன் சார்!''

''இந்த மாசத்திலேயிருந்து இன்னும் ஐந்து பேர் சாப்பாடு எடுக்கச் சொல்றாங்க. அவங்களுக்கும் சேர்த்து எடு. தெரியுதா?''

''ரைட்டு சார்! எடுக்கிறேன் சார்! இனிமே எனக்கு நல்ல காலம்தான் சார்!''

''இது ஒரு நல்ல காலமாடா?''

''ஆமாம் சார்! நல்ல காலம்தான் சார்! என் மாமன்கூட என்னோட சமாதானம் ஆயிட்டாருங்க. வலுக் கட்டாயமாக வீட்டுக்குக் கூட்டிப் போய்ச் சாப்பிட வச்சுட்டாருங்க.'' அவன் முகத்தில் மகிழ்ச்சி இழைந்து அற்புதக் கலை வீசியது. ''மாமன் மகள்கூட என்னைக் கண்டு பயந்து மரியாதையா எழுந்து நின்னுக்கிட்டாளுங்க...''

''எப்படிடா அவங்க மனசு அதற்குள்ளே மாறிப் போச்சு?''

''அந்தக் கருப்பட்டை முடிக்காரன் சைக்கிளிருந்த காக திரிந்தவுடனே ஓட்டம் பிடிச்சுட்டானுங்க. அதனாலே எனக்கும் இப்போ கொஞ்சம் வருமானம் வருதில்லே?''

''போடா பெரிய வருமானம்! வேறு ஏதாச்சும் காரணம் இருக்கும். அதனாலே தான் வலிய உறவு கொண்டாடுறாங்க.''

கரடியின் மாமனை நான் பார்த்திருக்கிறேன். தடித்த மீசையும் சிவந்த கண்களுமாகத் தடியில் மூண்டாசுடன் கையில் அரிவாள் ஒன்றை வைத்துக் கொண்டு பக்கத்துப் பங்களாவில் தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருப்பான். குடிப் பழக்கம் உண்டு. அற்ப குணமும் திருட்டுத்தனமும் உள்ளவன். எனவே ஏதோ காரணமின்றி அவன் கரடியிடம் உறவாட மாட்டான் என்றே எனக்குத் தோன்றியது.

''அதெல்லாம் ஒன்றுமில்லே சார்! எனக்கு அதிருஷ்டம் ஆரம்பமாயிடுச்சு. அதான் காரணம்'' என்றான் கரடி புன்சிரிப்புடன்.

''உனக்கு அதிருஷ்டம் வரப் போறதுன்னு ஜோசியக்காரன் சொன்னானாடா?''

''நான் சொல்ல மாட்டேன் சார்! நீங்க கேலி செய்வீங்க!''

அவன் கொஞ்சம் தயங்கினான். பிறகு பெரிய ரகசியத்தை வெளியிடுபவன் போல, ''நீங்க கேட்கிறதாலே சொல்றேன். வேறு யார்கிட்டேயும் சொல்லாதீங்க சார்! கேலி செய்வாங்க! எனக்குப் பெரிய அதிருஷ்டம் அடிக்கப் போகுதாம், சார்! ஜோசியத்திலே அப்படிப் போட்டிருக்குதாம். நான் ஆனைகட்டி அரசாள்வேனாம்! ஆனால் அதெல்லாம் இப்ப இல்லே ஸார்...''

''பின்னே எப்போவாம்?'' சிரிப்பை அடக்கி வைத்தேன்.

''எனக்குக் கலியாணம் ஆனப்புறம். கலியாணத்துக்கு அப்புறம்தான் எனக்கு ராஜயோகம் ஆரம்பமாகுது!''

''அடப் பாவி! இதையெல்லாம் நம்பிக்கிட்டா கல்யாணம் செய்துக்கப் போறே! அப்புறம் ரொம்பவும் கஷ்டப்படணும். முதலில் ஏதாவது நல்ல வேலை தேடிக்க.''

அவன் முகம் சட்டென்று வாடிப் போயிற்று. எனக்கும் ஏன் அவன் ஆர்வத்தைக் குறைத்தோம் என்றாகி விட்டது. உற்சாகத்தை யெல்லாம் இழந்து அவன் மௌனமாக நகர்ந்து சென்று விட்டான்.

எங்கள் காரியாலயம் மட்டுமின்றி வேறு பல இடங்களுக்கும் கரடி சாப்பாடு எடுக்க ஆரம்பித்தான். எங்களுடைய

# காலையில் உற்சாகம் அளிக்கும் பானம்

# காட்பரீஸ்

## டிரிங்கிங் சாக்லேட்

காலையிலும், மாலையிலும், எவ்வேளையிலும்
அதிருசிகரமான காட்பரீஸ் டிரிங்கிங் சாக்லேட்
தவறாமல் அருந்துங்கள். சீக்கிரமாகவும்
சுலபமாகவும் தயாரிக்கலாம்.

## தரத்தில் உயர்ந்தது காட்பரீஸ்



# கோபால் பல்பொடி



பல் வலி, பல் அரணை, வாய் நாற்றம்
பல்லில் இரத்தம் வடிதல், முதலிய
பல் வியாதிகளை குணப்படுத்தி
பல்களுக்கு வெண்மையும்
பலத்தையும் தருகிறது.




தயாரிப்பவர்கள்:— எஸ்.பி.எஸ்.ஜெயம் அன் கோ,
25, கீழ நாப்பாளையத் தெரு....... மதுரை.

MINERVA

## நல்ல பென்ஸில்களால்

எழுதுவதற்கு
எவ்வளவு
ஆனந்தமாயிருக்கிறது!



## மெர்குரி பென்ஸில்கள்

நல்லவை என்று
எல்லா சோதனைகளிலும்
ருசுவாகியுள்ளது

கருப்பு, இதர கலர் மற்றும் காபிங்
கிடைக்கும்

தயாரிப்பாளர்
மதராஸ் பென்ஸில் பாக்டரி



MERCURY
*The name for good Pencils*

3, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, மதராஸ்.1.

"ARUNA"

வாயினில் முழுப்
பரிசுத்தமும்
உடலில்
பொலிவும்
ஆட்சி புரிய!




## இன்டர்ப்ரான்

பற் பசை

பளிச்சிடும் பற்களுக்கும் பாங்கான ஈறுகளுக்கும்.

**அப்ஸரா பேஸ் க்ரீம்**
குளுமைதந்து, சுத்தமிட்டு, எழிலூட்டும்.

**அப்ஸரா டால்கம் பவுடர்**
இனிய மணமுள்ளது. புத்துணர்ச்சி தருவது.



IF/S

இன்டர்நேஷனல் ப்ரான்சைலேஸ் ப்ரை. லிட்., பம்பாய்

தென் பகுதி வியாபார விசாரணைகளுக்குக் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்

TTK கார்ப்பொரேஷன் ப்ரைவேட் லிட்., சென்னை-கட்டாக்-செகுந்தராபாத்-விஜயவாடா

காரியாலய சைக்கிளையும் எடுப்பதில்லை. வாடகை சைக்கிளையே உபயோகித்து வந்தான். எங்கள் காரியாலயம் ஊர்க் கோடியில் இருந்ததால் எல்லா இடங்களிலும் சாப்பாடு கொடுத்து விட்டுக் கடைசியாகத்தான் அங்கு வந்து சேர்வான். வந்தவுடன் வேர்வையைத் துடைத்துக் கொண்டு சலித்துப் போய் ஒருமூலையில் உட்கார்ந்துகொண்டு ஏதேதோ முணுமுணுக்க ஆரம்பித்து விடுவான்.

"என்னடா, ரொம்ப என்னவோ பேசிக்கிட்டிருக்கே?" என்று கேட்டேன் ஒரு நாள் அவனிடம்.

"என்னத்தை சார். சொல்றது? எல்லாரும் எனக்கு எதிராளியா இருக்காங்க!"

"என்னடா நடந்தது?"

"ஒவ்வொருத்தர் வீட்டிலேயும் 'லேட்' பண்றாங்க சார்! இதுலே சைக்கிள் வாடகை வேறு அதிகமாயிடுது."

"மொத்தம் எத்தனை சாப்பாடு எடுக்கறே?"

"இருபத்தஞ்சு சார்! மாசம் மூணூசா ஐம்பது ரூபா கெடைக்குது. அதிலே சைக்கிள் வாடகை பத்து ரூபா போயிடுது." களைப்பின் இடையே பெருமை மிளிர்ந்தது.

"தாமதமாகும் இடத்திலே நீ ஏன்டா காத்திருக்கே? தயாராக இருந்தால் எடு. இல்லாட்டி அடுத்த இடத்துக்குப் போயிடு."

"அதெப்படி சார் எடுக்காமல் வர முடியும்? நான் சாப்பாடு கொண்டு வருவேன்னு பசியோட காத்திருப்பாங்க. அவங்களைப் பட்டினி போடலாமா சார்?"

"அது சரி, உன்னுடைய ராஜயோகம் என்ன ஆச்சு?"

அவனுக்கு உற்சாகம் வந்து விட்டது. "போன வாரந்தான் மாமா கல்யாணப் பேச்சை எடுத்தாருங்க. இந்த வாரம் அந்த புதுச் சாப்பாடு சேர்ந்து போச்சு! ஜோசியம் பொய்யாகுங்களா? அதிலேதான் போட்டிருக்கே. கல்யாணமானப்புறம் நான் வாலே கட்டி அரசாள்வேன்னு!"

"கல்யாணம் ஆயிட்டா நிச்சயமா நீ ஒரு வாலையைக் கட்டித் தினி போட்டுத்தான் ஆகணும். எந்த வாலே தெரியுமோ? உன் பெண்டாட்டி வாலே!"

"போங்க சார்!"

"இந்தப் பிடரி மயிரைப் பார்த்தால் உன்னே எவன்டா கட்டிக்குவா? அதை வெட்டி எறிஞ்சுடேன்!"

"கல்யாணம் நிச்சயமானால்தான் அதை எடுக்கப் போறேன் சார்!"

"எதுக்கெடுத்தாலும் கல்யாணந்தானா? முதல்லே ஒரு வேலையைத் தேடிக்கடா, மண்டு!" என்றேன்.

"கல்யாணமானாத்தான் வேலையும் கெடைக்குமாம். இல்லாவிட்டால் கெடைக்காதுங்க!"

"அப்படியானாலும் கூடிய சீக்கிரம் வாலே கட்டி அரசாளப் போறே!" என்று மட்டும் கூறி வைத்தேன். அவன் பதில் கூறாமல் பல்லெல்லாம் தெரிய முகம் நிறைந்து வெட்கத்தோடு நகைத்தான்.

அநேகமாக அடுத்த வாரமே கரடியின் கல்யாண லட்சியம் கைகூடி, அவனுக்கு ராஜ யோகமும் ஆரம்பித்திருக்க வேண்டும். ஏனெனில் அவன் மழுங்க மொட்டை அடித்துக் கொண்டு வந்து நின்றான்!

## 4. மாரப்பட்டி மைனர்

'தூதன'வென்னும் 'சில்க்' சட்டையை அணிந்து என்றுமில்லாத விநோதமாய் வேட்டி கட்டிக் கொண்டிருந்தான் கரடி. எப்போதும் விளிம்பெல்லாம் பிய்ந்து தொங்கும் அரைக் கால்சட்டை அணிந்த பார்த்துப் பழகிப் போயிருந்ததால் அவன் தோற்றம் புதுமையாக இருந்தது. எல்லாவற்றுக்கும் மேலாக, அவன் மொட்டையடித்திருந்தது அவன் முகத்தை விகாரமாகவும், விசித்திரமாகவும் ஆக்கியிருந்தது.

"என்னடா, கல்யாணம் நிச்சயமாயிடுச்சா?"

"நிச்சயம் ஆனமாதிரித்தான் சார்! மாமாரு ஒத்துக்கிட்டாரு!"

"எப்போ கல்யாணம்?"

"இன்னும் ரெண்டு மாசத்திலே முடிக்கலாம்னு இருக்கேன் சார்! முடி வளர்ந்து ஜோரா கிராப்பு வச்சுக்கணும். இன்னும் கொஞ்சம் பணமும் சேர்க்கணும். அப்புறம் தான் கல்யாணம்!"

"அப்போ, வாலே கட்டி அரசாள நேரம் வந்துடுச்சு!"

"போங்க சார்!"

அவன் அசட்டுச் சிரிப்பு சிரித்து, எண்ணெய் வழியும் முகத்தைத் தன் கைக்குட்டையால் துடைத்து விட்டு, 'சில்க்' சட்டையை அடிக்கடி குனிந்து பார்த்தவாறு, ஓரக்கு ஒரு முறை வேட்டி காலைத் தடுக்கக் கூச்சத்துடன் இயல்பின்றி நடந்து சென்றான். அவன் உள்ளத்தை நிறைத்த மகிழ்ச்சியும், புது நினைவுகளும், இன்பக் கனவுகளும் சேர்ந்து அவனைத் தத்தளிக்க வைப்பது போல் தோன்றியது. எனக்குக் கூட மகிழ்ச்சியாகத்தான் இருந்தது. ஆனால் ஏனோ அந்த மகிழ்ச்சி முழுமையானதாக இல்லை. அவனைக் காணும்போதெல்லாம் ஏதோ ஒருவகையான [illegible] என் மனத்தில் மெல்ல எழுவதை உணர்ந்தேன்.

அவன் வழக்கம்போலவே சாப்பாடு எடுத்து வந்தான். மொட்டைத் தலையில் ஒரு கைக்குட்டையைக் கட்டிக் கொண்டு நன்றாகச் சலவை செய்த காக்கிச் சட்டையும், காக்கிக் கால் சட்டையும் அணிந்து மிடுக்குடன் சைக்கிளில் வந்து இறங்குவான். வாழ்க்கையில் வெற்றி கண்டுவிட்டாற் போன்ற நிறைவு அவன் போக்கில் ஒரு நிதானத்தைக் தந்திருந்தது. ஏன்? அந்தக் கரடியின் இருண்ட முகத்துக்கு ஒரு புதுத் தெளிவே கூட வந்துவிட்டது!

அவன் மொட்டையடித்துக் கொண்டு ஒரு வாரம்தான் ஆகியிருக்கும். ஒரு நாள் காலை என்னைத் தேடிக்கொண்டு என் வீட்டுக்கே வந்து விட்டான் கரடி. பச்சை நிற 'பேண்ட்'டை அணிந்து அதில் வெள்ளை நிறச் சட்டையைத் துருத்தி விட்டு ஒரு 'பெல்ட்'டைப் போட்டுக் கட்டியிருந்தான். 'பேண்ட்'டின் நீளம் குறைவாக இருந்ததால் அது அவனுடைய கணுக்காலுக்கு மேல் தூக்கிக் கொண்டிருந்தது. மொட்டைத் தலையுடன் குள்ளமாக இந்த உடைக் கோலத்தில் அவ

ஸேக் கண்ட யார்தான் பொங்கி வந்த சிரிப்பை அடக்க முடியும்?

நான் சிரிப்பதைக் கண்டதும் அவன் வெட்கத்துடன், "நமஸ்காரம் சார்!" என்றான்.

"என்னடா இதெல்லாம்?"

"எங்க மாமாரு எடுத்துக் கொடுத்தார் சார்! இந்தப் 'பூட்ஸ்'ம் 'பெல்ட்'டும் நான் வாங்கினேன்!" என்று கூறிவிட்டுப் பையிலிருந்து ஒரு பூப் பொட்டலத்தையும் எடுத்துக் கொண்டு வந்து என் அருகில் வைத்தான். நான் அவன் உடையையே பார்த்தது அவனுக்குப் பெருமையாகவும் மகிழ்ச்சியாகவும் இருந்திருக்க வேண்டும். அடிக்கடி தன் காலரை இழுத்து விட்டு, பேண்ட்டையும் விரல்களால் தட்டி விட்டுக் கொண்டான்.

"ஏது உங்க மாமன் உன்மேல் ரொம்பப் பிரியமா காண்பிக்கிறார் போலிருக்கே?"

"சும்மாவா சார்? நான் மாப்பிள்ளை இல்லையா? தேதி கூட குறிச்சாச்சுங்க! இரண்டு மாசம் போகணுமனு சொன்னேன். ஆனால் மாமாரு கேட்கலே. உடனே நடத்தணும்னு சொல்லிட்டாரு."

"என்னடா அப்படி அவருக்கு அவசரம்?"

"என்னமோ சார். அப்படிப் பறக்கிறாரு! 'பணத்துக்கு என்ன மாப்பிள்ளை கவலே? நான் கொடுக்கிறேன்!' அப்படின்னுட்டாரு. என்னை அகஸ்தியனுக்கு அண்ணன்னு சொல்லி முன்னாலே கேலி செய்தாரில்லே. இப்போ என்ன சொன்னாரு தெரியுங்களா? நான்தான் எங்க மாரப்பட்டியிலேயே நாகரிகமா இருக்கிறேனாம்! அதனாலே நான் மாரப்பட்டி மைனராம். இன்னும் என்னென்னமோ சொன்னாருங்க. அவருக்கு ஒரே சந்தோஷம்!"

"இமாங்கு அவருக்கு ஏன்டா இப்படி சந்தோஷம் வந்துச்சு?"

"எல்லாம் என்னுடைய நல்ல காலம் தானுங்க காரணம். கலியாணத்துக்கு நீங்க அம்மாவையும் அழைச்சுக்கிட்டு, கண்டிப்பா வரணும். எனக்கு வேறு யார் இருக்கா?"

"அதுக்கென்ன, கண்டிப்பா வரேன்!"

"நமஸ்காரம் சார்!" என்று சொல்லிவிட்டு, 'டக்கு, டக்கு' என்று அவன் 'பூட்ஸ்' காலோடு தாறுமாறாக அடி வைத்து நடந்து சென்றான். அவனும் மணந்து மகிழ்ந்து வாழவேண்டியவன்தானே. பின் ஏன் நான் வீணாக அச்சப்பட வேண்டும்? என்னவோ அவன் வாழ்க்கை ஒரு பள்ளத்தை நோக்கி வேகமாக ஓடுவது போன்ற பிரமையை என்னால் அகற்றவே முடியவில்லை.

வெளியே சென்ற கரடி உடனே திரும்பி வந்தான். 'சார்! முக்கியமானதை மறந்து விட்டேன். எனக்கு ஒரு 'டை' வேணும் சார்! எனக்கு வாங்கத் தெரியாது. நீங்க வந்துதான் வாங்கித் தரணும்!"

பொங்கிய சிரிப்பு என்னையும் மீறியது:

"போங்க சார்! நீங்கதான் சிரிக்கிறீங்களே! எனக்கு நல்லா இருக்காதுன்னு வேண்டாம்!"

"நல்லா இருக்கும்டா, கரடி, நல்லா இருக்கும். கடைக்குப் போய் ஏன் வாங்கணும்? என்னிடம் இருப்பதைக் கொடுக்கிறேன், கட்டிக்கோ. நான்தான் இப்போ டை கட்டுவதில்லையே!"

நான் கொண்டுவந்து கொடுத்த 'டை'யைக் கால் சட்டைப் பைக்குள் போட்டுக்கொண்டு, "சார், இன்னொரு விஷயம்..." என்றான்.

"என்ன, சொல்லு!"

"இன்னையிலிருந்து மூணு நாளைக்கு லீவு: சாப்பாடும் எடுக்கமுடியாது. 'ஸ்கூல்'க்கும் வர முடியாது; நீங்க ஏதாவது டிபன் சாப்பிட்டுக்குங்க!"

"சரி, ஆகட்டும்! எதுக்காக உனக்கு லீவு?"

"என்ன சார் இப்படிக் கேட்கறீங்க? கலியாணத்துக்கு லீவு வேண்டாமா, பின்னே? ஓ—ஹோ! நான் அதைச் சொல்லலியா? கலியாணம் நாளைக்குத்தான் சார்! நாளைக்குக் காலையிலே! கண்டிப்பா வந்துடுங்கோ!" என்று சொல்லிவிட்டு, ஓட்டமும் நடையுமாக அவன் போய்ச் சேர்ந்தான்.

## 5 பொம்மைக் கலியாணம்

பனி தூங்கிய காலை இருட்டோடேயே நான் மாரப்பட்டி கிராமத்தை அடைந்தேன். கிராமம் ஆழ்ந்த உறக்கத்தில் மூழ்கிக் கிடந்தது. எப்படியும் கலியாணச் சந்தடியைக் கொண்டே கரடியின் வீட்டைக் கண்டுபிடித்து விடலாம் என்ற தைரியம் எனக்கிருந்தது. ஆனால் அந்தக் கிராமத்தை இரண்டு முறை சுற்றிவந்தபின் தவறிப் போய் நான் வேறு கிராமத்துக்குச் சென்றுவிட்டேனோ என்ற ஐயம் என்னைப் பலமாகப் பற்றிக்கொண்டது. அந்தச் சமயத்தில் பல் துலக்கியவாறு அங்கு தோன்றிய ஓர் ஆளை விசாரித்த பின்னர்தான் என் ஐயம் நீங்கி நிம்மதி பிறந்தது. அவனையே மேலும் விசாரித்தேன்

"இன்னைக்கு இந்த ஊரிலே ஒரு கல்யாணம்; இடம் தெரியாமல்தான் சுற்றி வந்துகிட்டு இருக்கேன். எந்த இடம்னு உங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டேன்.

"யாருக்குக் கலியாணம்?"

நான் சற்று யோசித்தேன். யாருக்கென்று சொல்வது?

"ஒரு கறுத்த பையன். குள்ளமாயிருப்பான். கரடின்னு கூப்பிடுவாங்க."

"கரடியா?"

"ஆமாங்க. வேடிக்கையா கூப்பிட்டது, நிலைச்சுப் போச்சு. அவன் நிஜப் பேரு மறைஞ்சு போச்சு!"



# ஸ்பென்ஸர்ஸ் கிரைப் ஸிரப்

குழந்தைகளுக்கு சிறந்தது






*Sole Distributors For*
*Spencer's* GRIPE SYRUP
*for Madras State :*
THE DRUG HOUSE, SALEM - 1
*Branch:* MADRAS

---

சிட்டிகைப் பொடி



சிறந்த நண்பர்க
ளாகச் செய்கிறது

ஸ்ரீ
## அம்பாள்
ஆ பீ ஸ ர் பொ டி



சிறந்த மூலப்
பொருள்களைக்
கொண்டு விஞ்
ஞான முறையில்
தயாரிக்கப்பட்டது.

**ஸ்ரீ அம்பாள் & கோ.,**
த. பெ. நெ. 3, சென்னை -1

"என்ன சாதிக்காரங்கன்னு தெரியுங் களா? கவுண்டமாரா, நாய்க்கமாரா, பிள்ளைமாரா?"

நான் பதில் எதுவும் கூறுமுன்பே, "சார், வாங்க சார், வாங்க!" என்று கரடியின் குரலே கேட்டது. ஒரு துண்டைத் தலையில் முண்டாசாகக் கட்டிக் கொண்டு, கம்பளிப் போர்வையோடு கரடி ஓடி வந்தான். "இன்னும் மாமாரு எழுந்திருக்கலே சார்! கொஞ்ச நேரத்திலே எல்லாம் 'ரெடி'யாகி விடும் சார்!"

அவனுடைய குடிசை வீட்டின் திண்ணையில் உட்கார்ந்தேன். அரவம் கேட்டு எழுந்த கரடியின் மாமனும் என்னை வரவேற்றான். அவன் முகத்திலோ, பேச்சிலோ, செய்கை யிலோ உண்மையின் இயல்பு தென்பட வில்லை. ஏதோ என்னைப் பார்த்து விட்டு எனக்காக அவன் எல்லா ஏற்பாடுகளையும் செய்வது போல் தோன்றியது. ஏழு மணிக் குத்தான் வாழை மரங்கள் வந்து சேர்ந்தன. அதன் பிறகுதான் மேளக்காரன் வந்து சேர்ந் தான். நான்கைந்து கிராமியப் பெண்கள், 'பளிச்'சென்று பச்சை, சிவப்பு வண்ணங் களில் பட்டுத் துகிலணிந்து சுறுசுறுப்பாக மற்ற ஏற்பாடுகளைக் கவனித்தார்கள். இடை யிடையே ஏதேனும் சச்சரவுகள் எழுந்து கல கலப்பை உண்டாக்கின. எப்படியோ ஆண் களும் பெண்களுமாக அங்கு கூடியிருந்த சுமார் முப்பது பேர்கள் முன்னிலையில் கரடி அவன் மாமன் மகள் கழுத்தில் தாலியைக் கட்டும்போது மணி ஒன்பதரை! குழந்தைகள் நடத்தும் பொம்மைக் கல்யாணம்தான் அப் போது என் நினைவுக்கு வந்தது.

'கேமரா'வைக் கொண்டு போயிருந்ததால் கரடியையும் பெண்ணையும் நிற்க வைத்துப் படமெடுத்தேன். பட்டுச் சட்டையும், சரிகை வேட்டியும், தலைப்பாகையும் அணிந்து மலர் மாலையோடு சிரித்தவாறு நின்றான் கரடி. அந்தப் பெண்ணைப் பார்த்தபோது எனக்குக் கொஞ்சம் அதிர்ச்சியாகத்தான் இருந்தது அவள் கரடியைவிட ஒரு பிடி அதிகமாக வளர்ந்திருந்தாள். கழுத்து ஒல்லியாக நீண் டிருந்தது. மிரள, மிரள விழித்துக் கொண்டு நின்றாள். உள்ளத்தின் ஒரு பக்கத்தில் இன்ப மும் மறுபக்கத்தில் துன்பமும் அலையிட, கரடி யிடம் விடைபெற்றேன்.

மூன்றாம் நாள் காலை கரடி காரியாலயத் துக்கு வந்து விட்டான். காக்கிச் சட்டையும், காக்கிப் 'பேண்ட்'டும், காக்கித் தொப்பியும் அணிந்து கொண்டு 'டக், டக்' கென்று பூட் சின் சத்தம் எழ நடந்து வந்து விறைப்பாக நின்று ஒரு 'சல்யூட்' அடித்து விட்டு, "சலாம் சார்!" என்றான்.

"என்னடா, கல்யாண விவகாரமெல்லாம் முடிஞ்சுதா?"

"ஆச்சு சார்!"

"யானையைக் கட்டிப் போட்டாச்சு. இனி அரசாள வேண்டியதுதான். இல்லையா?"

"சார்! போங்க சார்! ஜோசியக்காரன் சொன்னான். அதுக்கோசு நான் யானை வாங்கியா கட்டி வைக்கப் போறேன்? ஆனால் இனிமே எனக்கு அதிருஷ்டம்தானுங்க!"

திருமணப் புகைப்படத்தை எடுத்து அவ னிடம் கொடுத்தேன். அவனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. "ஹை...ஹை..." என்று குழந்தையைப் போல் குதித்தான். "இதுக்குப் பிரேம் போட்டு, ஜோரா வீட்டிலே மாட்டி வைக்கப் போறேன். ரொம்ப தாங்க்ஸ் சார்!" என்று சொல்லிவிட்டு அவசரமாகச் சென்றுவிட்டான்.

ஒரு வாரம் கழித்து மீண்டும் அவனைச் சந்தித்தபோது கேட்டேன். "என்ன கரடி யாரே! பெண்டாட்டி எப்படி இருக்கா?"

"அந்தக் கூத்தை ஏன் சார் கேட்கறீங்க? ஒரே தொல்லையாகப் போச்சு. எப்பப் பார்த் தாலும் அழுதுகிட்டே யிருக்கு. என்ன சமாதானம் சொன்னாலும் அழுகைதான். சுத்த அழுமூஞ்சி!"

"எல்லாம் சரியாயிடும், கவலைப்படாதே! புதிசுதானே!"

"மனசு ரொம்பவும் சங்கடப்படுது சார்! அவளுக்கு என்னைப் பிடிக்கலை போலிருக்கு!" அவனுடைய கண்கள் இலேசாகக் கலங்கின. என் உள்ளம் கசிந்தது.

"பிடிக்கலேன்னு சொன்னாளாடா?"

"சேச்சே, நான் கேட்டுட்டேனே! என்னை ரொம்பவும் பிடிச்சிருக்குதாம். பின்னே ஏன் அழறேன்னு கேட்டா பதிலே இல்லே."

"இன்னும் கொஞ்ச நாட்கள் போனால் சரி யாகிப் போகும். பொறுமையாக இருடா, கரடி!" என்று அவனுக்குச் சமாதானம் சொன்னேன். ஆனால் அவன் வாழ்க்கையில் பெரிய தவறு நேர்ந்து விட்டதாகத்தான் என் உள்ளம் ஓலமிட்டது.

பத்து நாட்களுக்குப்பின் மீண்டும் அவனைக் கேட்டேன். "என்னடா, இப்ப எல்லாம் சரியாயிடுச்சா? சந்தோஷமா இருக்கியா?"

"சந்தோஷத்துக்கு என்ன குறைச்சலுங்க; சந்தோஷமாத்தான் இருக்கோம். நேற்றுக் கூட வசமாக நாலு அடி வச்சேன்!"

"என்னடா, அதற்குள்ளே இப்படி?"

"பின்னை என்னங்க? கலியாணம் ஆன நாளா எப்பப் பார்த்தாலும் அழுதுகிட்டே இருந்தா எப்படி?"

எனக்கும் என்னவோ போலிருந்தது. கரடியின் தோற்றம் பரிதாபமாக இருந்தது. திருமணமாகி ஒரு மாதத்துக்குள்ளேயே அவன் முகத்தில் சோகமும் ஏக்கமும் கலந்த முதிர்ச்சி படிந்திருந்தது.

"அது கிடக்கு சார். கழுதை! விட்டுத் தள்ள வேண்டியதுதான். இந்தக் கூப்பனைக் கொஞ்சம் எழுதிக் கொடுங்க."

"ஓஹோ! யானை கட்டி அரசாள்றதுக்கு 'பிரைஸ்' விழப் போகுதுன்னு கூப்பன் அனுப்ப ஆரம்பிச்சுட்டியா?"

"சும்மா போட்டு வைக்கலாம் சார்! விழுந்தா விழுது. போனாப் போகுது. எழு துங்க சார்; கனகாம்புஜம், நெம்பர் 13, சின்னத் தெரு, மாரப்பட்டி பி. ஓ!"—

"ஏண்டா, உன் பேருக்குப் போடக் கூடாதா?" என்று கேட்டேன்.

"ஹூம்......இந்தக் கரடிப் பயலுக்கு அதி ருஷ்டம் ஏதுங்க? எல்லாக் கட்டத்திலேயே யும் ஒன்னு, ரெண்டு, ஒன்னு ரெண்

இன்று நீங்களே எதையாச்சும் எழுதிக் கொடுங்க. அனுப்பி வைக்கிறேன்.''

எல்லாவற்றையும் எழுதிக் கொடுத்தேன். வாரா வாரம் அவனுக்கு அதே வேலையாகத் தானிருந்தது. ஒவ்வொரு முறையும் விடை தெரிந்த பின்னர் இடிந்துபோய் உட்கார்ந்து விடுவான். ராஜயோகம் பிறக்கவேண்டுமென்று ஒரு பொம்மைக் கலியாணம் செய்து கொண்டு, போட்டிக் கூப்பனோடு சுற்றித் திரியும் வெகுளியை என்ன செய்வது? அந்தப் பைத்தியத்தை விட்டுவிடும்படி நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். ஆனால் அதிருஷ்டத்திலும், ஜோசியத்திலும் அவனுக்கு இருந்த நம்பிக்கை அவ்வளவு எளிதில் விலகக் கூடியதாக இல்லை.

ஒருநாள் கரடி மூச்சுத் திணற ஓடி வந்து, ''சார்.....இதைப் படிங்க சார்!.....இப்பத் தான் வந்துச்சுங்க...'' என்று கூறித் தந்தியைக் கொடுத்தான். அது அவன் மனைவியின் பெயருக்கு வந்திருந்தது. அதைப் பிரித்துப் படித்துக் கூறினேன்:

''முதற் பரிசு இரண்டாயிரம் ரூபாய் நால்வருக்குப் பகிர்ந்து அளிக்கப் படுகிறது. உங்கள் பங்குக்கு 'செக்' அனுப்பப்பட்டிருக்கிறது - பாராட்டுகள்!''

## 6 'கரடிக் குட்டி'

மனித யத்தனத்தின் ஆற்றலையும் மீறிக் கொண்டு, எதிர்பாராத எத்தனையோ விஷயங்கள் நடைபெறுவதில்லையா? அப்படித் தான் கரடியின் வாழ்க்கையிலும் பல திருப்பங்கள் நிகழ்ந்தன. முயல் போல் புதர் மறைவில் ஒளிந்து எட்டி, எட்டி எங்கள் காரியாலயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தவன், எங்கள் காரியாலயத்துக்கு எதிரிலேயே ஒரு சிறு கொட்டகையில் மேஜை நாற்காலி போட்டு உட்கார்ந்திருந்தான். வெளியே ஒரு 'போர்டு' தொங்கியது. அதில் 'கனகாம்புஜம் டீ ஸ்டால்' என்றும் எழுதியிருந்தது.

டீக்கடை வைப்பதற்கு முன் பரிசு கிடைத்த ஐந்நூறு ரூபாயை வைத்துக்கொண்டு நாளுக்கொரு யோசனை செய்து கொண்டிருந்தான் கரடி. கடைசியில் ஒரு டீக்கடைக்கு வேண்டிய சாமான்களை ஒரே 'செட்'டாக மலிவான விலையில் வாங்கித் தர ஒரு நண்பர் ஒப்புக் கொண்டார். எனவே டீக்கடை வைத்து நடத்துவதென்றே தீர்மானமாயிற்று.

இப்படியாகக் கலியாணமாகி மூன்றே மாதத்தில் கரடி ஒரு சிறிய முதலாளியாகி விட்டான். முதலாளி மிடுக்கும், செல்வ மினுக்கும் அவன் தோற்றத்துக்கு ஓர் எடுப்பைத் தந்திருந்தன. 'கரு, கரு' வென்று முளைத்த முடியை 'கிராப்பு' வெட்டி அழகு படுத்திக் கொண்டு 'கட்' மீசை வேறு வைத்திருந்தான். காதில் ஒற்றைக் கல் கடுக்கன் மின்னியது. 'மைனர் சங்கிலி' ஒன்று அவன் 'சில்க்' ஜிப்பாவில் மறைந்து ஒளிகாட்டும். அநேகமாகச் சரிகை வேட்டி கட்டி, கறுப்பு 'ஸ்லிப்பர்' அணிந்திருப்பான். அவன் வாங்கிக் கட்டியிருந்த பழைய 'வாட்ச்' சரியாக ஓடாததால் வலது கை அதைத் திருகிவிட்டுக் கொண்டிருக்கும். ஆனால் என்னதான் மாறியிருந்தாலும், தன் நீண்ட கைகளை வீசிக் கொண்டு, வளைந்த கால்களால் 'விசுக் 'விசுக்' கென்று அவன் நடக்கும்போது, 'நம் கரடி தான் இவன்' என்ற எண்ணம் யாருக்கும் எழவே செய்யும்!

''என்ன முதலாளி! கையிலே எவ்வளவு பணம் வைச்சிருக்கே? போட்ட முதலை எடுத்துட்டியா?'' என்று ஒரு நாள் அவனைக் கேட்டேன்.

அவன் உதட்டைப் பிதுக்கினான். ''எங்கே சார்! பணமெல்லாம் வெளியே நிக்குது. உங்க ஆபீசிலேயே முந்நூறு ரூபாய் நிக்குது. இப்போ சரக்கு எடுக்கக்கூடக் கையிலே பணமில்லே! ஏழாம் தேதி 'மில்'லுக்காரங்களுக்குச் சம்பளம். அதைத்தான் எதிர்பார்த்துக்கிட்டு இருக்கேன். முந்தாநாளு மாமாரு வேறே இருநூறு ரூபா அவசரமா வேணும்னு வாங்கிக்கிட்டுப் போனாரு. இல்லேன்னு சொல்ல முடியுங்களா?........''

அவன் மாமனைப் பற்றிக் கூறியவுடன் எனக்குச் 'சுருக்'கென்றது. ஆரம்பத்திலிருந்து அவன்மீது ஏற்பட்டிருந்த ஒருவித ஐயம் இன்னும் என் உள்ளத்தைப் பின்னிக் கொண்டுதானிருந்தது. அவன் பணம் வேறு வாங்க ஆரம்பித்திருந்தது என் குழப்பத்தை அதிகமாக்கிவிட்டது.

''முன்னாலேயே உன்னிடம் தனியாகச் சொல்லணும்னு நெனைச்சேன். இப்பத்தான் சமயம் கெடைச்சது. ஏண்டா, இதெல்லாம் உனக்கு நல்லாயிருக்கா? இந்த மாதிரி நீ பணத்தைச் செலவு செய்யலாமா? இப்படிச் செய்தால் கடை எத்தனை நாளைக்குடா ஓடும்? சரக்கு எடுக்கப் பணமில்லேன்னு சொல்றே! ஆனால் இப்படி ஊதாரித்தனமா செலவு செய்யலாமா? நேற்று இருந்த நிலையை நினைச்சுப் பார்க்க வேண்டாமாடா கழுதை! சாப்பாட்டுக்கு வழியில்லாமே சிவன் கோயில் சத்திரத்திலே உட்கார்ந்திருந்ததை அதுக்குள்ளாகவா மறந்து போவது?''

''சார்...சார்...'' என்று பரபரப்புடனும் அளவற்ற வேதனையுடனும் அவன் இடைமறித்தான். என்றுமே நான் கண்டிராத முறையில் அவன் முகம் மாறிப் போயிற்று. உணர்ச்சியின் பொங்கி அவன் முகம் கன்றிப் போனது போல் ஆகிவிட்டது.

''சார்...'' என்று அழைத்து அவன் என்னவோ கூற ஆரம்பித்தான். நாத் தழுதழுக்க வார்த்தைகள் வெளி வராது சில விநாடிகள் தத்தளித்தான். பிறகு மெதுவாகப் பேசினான்.





# தேவைகள் கோடி



# அவற்றுக்கேற்ற 'பாடி'

JWT-TVS-89 1059

1930 ஆம் ஆண்டிலிருந்து, 'சேஸிஸ் பாடி' (பஸ், லாரி, 'வான்') கட்டுவது சம்பந்தமான தனிப்பட்டவர்களின் தேவைகளை டி.வி.எஸ் ஆராய்ந்து வந்திருக்கிறது. அனுபவத்தாலும், சொந்த உபயோகத்தாலும், 'பாடிகள்' அமைப்பதற்கு வேண்டிய நல்ல சாமான்களைத் தேர்ந்தெடுத்து, தேவைகளுக்கு ஏற்றபடி, தக்க முறையில் தயாரிக்கிறது.

முழு அலுமினியத்தகடு 'எக்ஸ்பிரஸ் வான்', முழு அலுமினியப் பஸ், பெரும்பாலும் அலுமினியத்தகடு மூடிய லாரிகள், 'பிக்கப் வான்', 'காமர்ஷியல் வான்' 'ஆம்புலன்ஸ்' வண்டி, ஸ்கூல் பஸ், 'கோச்' மற்றும் 'காம்போசிட் டைப் பாடி'களை டி.வி.எஸ் கட்டுகிறது.







**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் பிரைவேட் லிமிடெட்**
(டி. வி. எஸ். ஸ்தாபனம்)
மதுரை புதுக்கோட்டை

# இன்பப் பொங்கல்

தென்மண்டல யாத்திரை முடித்து
வடதிசை நோக்கிச் சூரியன்
திரும்பும் நாளே மகர சங்கராந்தி நாள்—
இன்பப் பொங்கற் திருநாள்!

ஆனந்தமயமான அறுவடைக் காலமும்
அதுதான். புத்தாடை புனைந்து, புதுப்பானை,
செங்கரும்பு, தீங்கனிகள், காய்கறிகள்
கொண்ட கூடை ஏந்தி, ஒயிலாக
நடந்து வரும் இப் பெண்—இந்த
இன்பத் திருநாளுக்கு ஏற்ற வகையில்—
எதிர்காலம் பற்றிய உறுதியான
நன்னம்பிக்கை உடையவளாகத்
திகழ்கிறாள்.

ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் மூலம்
நீங்களும் இன்பமயமான எதிர்காலத்திற்கு
வகை செய்ய இயலும்.

**ஆயுள் இன்ஷ்யூரன்ஸ்**
நீங்கள் இன்ஷ்யூர் செய்யும் நன்னாளே
நீங்கள் பாதுகாப்புப் பெறும் பொன்னாளாம்



EP/LIC/52/13

"சார்...நான் அதையெல்லாம் மறந்து போயிடலே, சார்! என்னமோ இந்த சில்க் சட்டை, கடுக்கன், வாட்ச், இதிலெல்லாம் எனக்கு ஆசையா, என்ன? அந்தக் குடிகார மாமனுக்குப் பணம் கொடுத்தது தப்புன்னு எனக்குத் தெரியாதா, என்ன? எல்லாம் ஏன் செய்யறேன்? எல்லாம் அவளுக்காகத்தான் சார்! அவளைச் சந்தோஷப்படுத்தத்தான் சார்! அவ ஏதோ மண் பொம்மை மாதிரி இருக்காளே தவிர கொஞ்சமாச்சும் சந்தோஷமா இல்லையே! எதையோ மனசிலே வச்சுக்கிட்டு நாளைக்கு நூறுதடவை அழுகிறாள். சார்...சொல்லுங்க சார்! அவளுக்கு என்னைப் பிடிக்கலே பிடிக்காதா? நீங்கள்ளாம் கரடின்னு கூப்பிடறதுபோல் நான் நெசமாகவே பிறந்தானு? நான் மனுசன் இல்லையா? நான் அவ்வளவு கோரமாகவா இருக்கேன்? சொல்லுங்க சார்...என் அண்ணன் மாதிரி நீங்க... சொல்லுங்க சார்!..."

அவன் கண்களிலிருந்து மாலை மாலையாக நீர் வழிந்தது. வாயடைத்துப் போய் உட்கார்ந்து விட்டேன். அவ்வளவு சீக்கிரம் அவன் உணர்ச்சி வசப்பட்டுப் போவான் என்று நான் எதிர்பார்க்கவில்லை. எங்கோ வெளியே சென்று விட்டு அப்போதுதான் திரும்பி வந்த கடைப் பையன் கரடியை விசித்திரமாகப் பார்த்துவிட்டு உள்ளே சென்றான்.

"அவ என்னதாண்டா கரடி, சொல்றா?"

"ஏதாவது சொன்னாத்தான் பரவாயில்லையே! ஒண்ணுமே சொல்றதில்லையே, சார்! ரொம்ப மரியாதையா, பணிவா இருக்கா. ஆனால் அவ சந்தோஷமா இல்லையே சார்! ஒரு வேளை...சார்..."

"என்னடா, சொல்லு!"

"ஒரு வேளை நான் அவளைவிடக் குள்ளமா யிருக்கேன்னு..." அவன் நாத்தழுதழுத்தது.

தன் கணவன் தன்னைவிடக் குள்ளமாயிருப்பதை எந்தப் பெண்தான் விரும்புவாள்? பின் ஏன் அவள் அவனை மணக்கச் சம்மதிக்க வேண்டும்?...

எனக்குத் தெரிந்ததைச் சொல்லி அவனைச் சமாதானப்படுத்த முயன்றேன். "எந்த விஷயத்திலேயும் கரடி பொறுமையை மட்டும் கைவிடக் கூடாது. அவசரப்பட்டுத் 'தட தட'ன்னு ஒரு முடிவுக்கு வர்றதும் புத்திசாலித்தனமில்லே. குள்ளமா இருந்தால் அதனாலே என்னடா? எத்தனையோ பேர் அந்த மாதிரி இல்லே? ஒருவேளை அவளுக்கு உன்னைப் பிடிக்காமல் இருந்தாலும் இருக்கலாம். இன்னும் கொஞ்ச நாளு உன்னோடு பழகி, உன் தங்கமான மனசை அவ தெரிஞ்சுகிட்டா, பிறகு உன்னைப் பிடிச்சுப் போகுது. நீ வேணுமானால் பாரு. இன்னும் கொஞ்ச நாளிலே எல்லாமே சரியாயிடும்."

"அது சரிங்க!" என்று ஒப்புக்காக அவன் தலையை ஆட்டினான்.

பேச்சை மாற்றுவதற்காக, "உன் பரிசுக் கூப்பன் எல்லாம் என்னவாச்சு? இப்போதெல்லாம் போடுறதில்லையா?" என்றேன்.

"நமக்குக் கிடைக்க வேண்டியது கிடைச்சுப் போச்சு. இனிமே எதுக்குங்க அந்தச் சனியன். இந்தக் கடை நல்லா ஓடுனா அதுவே போதுமே!"

"ஜோசியக்காரன் சொன்னது நிஜமாப் போச்சு! கலியாணம் ஆன உடனேயே உனக்கு அதிர்ஷ்டம் ஆரம்பமாகி, நீயும் ஒரு முதலாளி ஆயிட்டே!" என்று அவனை உற்சாகப்படுத்தியவாறு புறப்பட்டேன்.

"இதெல்லாம் யாருடைய அதிருஷ்டம் தெரியுங்களா?"

"யாருடையது? உன்னுடையதுதான்!"

"அதுதான் இல்லீங்க!"

"ஓஹோ! கனகாம்புஜம் அம்மாளுடைய அதிருஷ்டமா?"

"அதுவும் இல்லே!"

எனக்குத் திகைப்பாகப் போயிற்று. ஒரு வேளை, பரிசுக் கூப்பனை என் கையால் எழுதியதால் என்னுடைய அதிருஷ்டம்தான் என்று பழி சுமத்துகிறானோ என்று எண்ணியபடியே, "நீங்கள் ரெண்டுபேரும் இல்லேன்னு, வேறு யாருடா அப்படி அதிருஷ்டக்கார ஆளு?" என்று கேட்டேன். அவன் பொங்கும் களிப்புடன் பதில் கூறினான்.

"வேறு ஆள்தான் சார், வேறு ஆள்தான்! எங்களுக்கு இன்னும் கொஞ்சநாட்கள் கழிச்சுப் பிறக்கப் போறான் பாருங்க! அந்தக் கரடிக் குட்டியின் அதிருஷ்டம்தான் இதுக்கெல்லாம் காரணமுங்க!"

## 7. அசலும் நகலும்

**மே**லே உச்சியின் தொடர்ச்சி எது? பயங்கரமான சரிவுதானே! கரடியைப் பொறுத்த வரையில் அவனுடைய அப்போதைய நிலைதான் அவனுடைய வாழ்வின் சிகரம் என்று எண்ண வேண்டியிருந்தது. ஏனெனில் அதன் தொடர்ச்சி பெரியதொரு சரிவாகத்தான் தென்பட்டது.

குழந்தை பிறக்கப் போவதால் அவர்களிடையே ஓர் ஒட்டுதல் உதயமாகிக் கரடியின் மனத் துயர் மறைந்து போகும் என்று எண்ணினேன். ஆனால் அத்தகையதொரு மாற்றம் நிகழாமலேயே போயிற்று. கரடியை நிரந்தரமான ஒரு சோர்வு பற்றிக் கொண்டது. எந்நேரமும் அவனுடைய உள்ளத்தில் பெரும் போராட்டம் நிகழ்வது போல் தோன்றியது. எப்போ பார்த்தாலும் அழுக்கான துணிகளை அணிந்து கொண்டு, கலைந்த கிராப்புத் தலையுடன் கன்னத்தில் கையூன்றி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து, தன்னை மறந்து அவன் உட்கார்ந்திருப்பான். அகம் நிறைந்து அவன் வாய்விட்டுச் சிரிப்பதே



அபூர்வமாகி விட்டது. எப்போதாவது அவன் நகைத்தாலும் அது அவன் வலிய வரவழைத்துக் கொள்ளும் போலி நகையாகத் தான் இருக்கும்.

நாளடைவில் அவனுடைய கடையிலும் வியாபாரம் குறைய ஆரம்பித்தது. பக்கத்திலேயே மலையாளி ஒருவர் புதிதாக ஒரு டீக் கடை வைத்து எறும்பைப் போல் சுறுசுறுப்பாக உழைத்து வியாபாரத்தைக் கைப்பற்றிக் கொண்டிருந்தார். கரடி எதைப் பற்றியும் கவலைப்பட்டதாகத் தோன்றவில்லை. முகத்தில் இலேசாக அரும்பியிருந்த மீசையையும் தாடியையும் வருடி விட்டவாறு வேதாந்தி போல் உட்கார்ந்திருப்பான். நாட்கள் சுவாரஸ்யமற்று நகர்ந்துகொண்டே போயின.

ஒரு நாள் கரடியின் கடை மூடியிருந்தது. ஏதாவது வேலையாக இருப்பான் என்றே எண்ணினேன். ஆனால் மறுநாளும் கடை திறக்கவில்லை. ஒரு வாரமாகியும் மூடியே கிடந்தது. எனவே மார்க்கெட்டுக்குச் சென்று விசாரித்தேன். கரடியின் மாமன் மூன்று மாதங்களுக்கு முன்னரே பம்பாய்க்குப் போய் விட்டானாம். கரடியும் அவன் மனைவியும் எங்கே போனார்கள் என்றே அவர்களுக்குத் தெரியவில்லை. ஒரு மாதத்துக்குப் பிறகு ஒரு நாள் தற்செயலாக அவனைக் கடைத் தெருவில் சந்தித்தேன்.

"வணக்கம் சார்!" என்று கூறிக் கொண்டே அருகில் வந்தான். "மன்னிக்கணும், சார். உங்களை வந்து பார்க்கவே முடியவில்லே!"

அவன் தோற்றத்தைக் கவனித்தேன். முகத்தில் மீசையும் தாடியும் அடர்ந்திருந்தன. அவனுடைய 'வாட்ச்' கடுக்கன் மைனர் செயின் எதையுமே காணவில்லை. முகத்தில் துயரத்தின் முதுமை படர்ந்திருந்தது.

"கடையை ஏன்டா மூடிப் போட்டிருக்கே?" என்று கேட்டேன்.

"கடை கிடை யெல்லாம் எவனுக்கு வேணும்? ரெண்டு கல் சுமந்து கூலி வாங்கினா ரெண்டு நாளைக்குக் கஞ்சியாச்சு!" தன் நிதானமின்றி, கையை அசைத்தவாறு வாய் குழறி அவன் பேசினான். உற்றுக் கவனித்து நான் திடுக்கிட்டுத் திகைத்தேன்.

அவன் மது அருந்தியிருந்தான்!

"சரி, ஆபீசுக்கு வாடா! ஒரு விஷயம் பேசணும், முக்கியம்!"

"எனக்கு என்ன சார்? எனக்கு எதுவுமே முக்கியமில்லே சார்!"

"நீ வர்றியா இல்லையடா?"

"ஐய்யோ, கோபிக்காதீங்க, சார்! அப்புறம் எனக்கு வேறு யார் இருக்கா? வரேன் சார்! அப்புறமா வரேன்!"

துவண்ட உள்ளத்தோடு நான் காரியாலயத்தை அடைந்தேன். அவனுடைய சீர்கேட்டை எண்ணி, நெஞ்சு நைந்தது. மிகக் குறுகிய காலத்தில் அவன் வாழ்க்கையில் என்னென்ன மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன!

அன்று மாலை கரடி வந்தான். காடாக மண்டியிருந்த தலைமயிரை எண்ணெய் தீவி வாரிவிட்டுக் கொண்டிருந்தான். ஜிப்பாவும் வேட்டியும் அணிந்து ஒரு ஜரிகைத் துண்டைத் தோளில் போட்டிருந்தான்.

"ஏன்டா இப்படிக் கெட்டுப்போயிட்டே?"

அவன் பதில் கூறவில்லை. துண்டால் வாயை மூடிக் கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதான். நானும் பதறிப் போனேன்.

"என்னடா கரடி? என்னடா நடந்தது?"

விசும்பலுக்கிடையே அவன் பேசினான்.

"அவ போயிட்டா சார்...... போய்ச் சேர்ந்துட்டா, சார்... அழுமூஞ்சிக் குழந்தை அழுது விட்டே உயிரை விட்டுட்டா சார்......!"

நான் அதிர்ந்து போனேன். இந்தச் சிறு வயதில் அவனுக்கு என்னென்ன துன்பங்கள்!

அவனுக்கு என்ன ஆறுதல் கூறுவது? நிலை கலங்கியிருக்கும் அந்த உள்ளத்தை எதைச் சொல்லி, எப்படிச் சொல்லிச் செப்பனிட முடியும்?...

நீண்ட நேரத்துக்குப் பின், "கரடி! உனக்கு மனவுறுதி அதிகந்தாண்டா!" என்றேன். "நீயானதால் இந்தத் துன்பத்தை யெல்லாம் தாங்கிக்கிட்டு மன உறுதியோடு இருக்கே! இன்னொருத்தராய் முடியாதுடா!"

நான் கூறியது அவனுக்குத் திருப்தியாக இருந்திருக்க வேண்டும். "ஆமாம் சார்! நானுங்கறதாலே எல்லாத்தையும் தாங்கிக்கிறேன்!" என்று கூறிவிட்டு, முகத்தைத் துடைத்துக் கொண்டான்.

அவள் எப்படி இறந்தாள் என்று கேட்க எண்ணினேன். ஆனால் வீணே துயர நினைவுகளைக் கிளறுவானேன் என்று அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். அவன் புறப்பட்டான்.

"நான் வரேன் சார்! குழந்தையைப் பார்க்கணும். நேரமாச்சு" என்று சொல்லி விட்டு மெள்ள நடந்து சென்றான்.

எந்தக் குழந்தையை அவன் பார்க்க வேண்டும்? அவனுக்கு ஏது குழந்தை? மணமாகி ஆறே மாதங்களில் அவள் இறந்து போனாளே. வேறு எந்த குழந்தையை அவன் பார்க்கவேண்டுமென்று கூறினான். தள்ளாடியவாறு நடந்து சென்ற அவன் என் குழப்பத்தைப் புரிந்து கொள்ளும் நிலையிலோ, அதைத் தெளிவிக்கும் நிலையிலோ இல்லை.

கரடியின் வாழ்க்கையை முழுமையாக அறிந்திருந்ததால் அவன்மீது எழுந்து நின்ற அனுதாபம் ஒரு பக்கமிருக்க, நான் அறியாத வொன்றும் ஓர் இன்பமோ, துன்பமோ அவனுக்கு நேர்ந்திருக்க வேண்டும் என்பதையும் நான் கண்டு கொண்டேன். இரண்டு விஷயங்கள் என் உள்ளத்தில் எழுந்தன. அவனுடைய மனைவிக்குப் பெருங் குறை இருந்திருக்க வேண்டும். அதனால்தான் அவன்



# நார்டனும் அட்மிரலும்

மிருதுவான ஓட்டமுடைய … சைக்கிள்கள்...



அவைகளின் உயர்ந்த ரக ஹப்புக்கு நன்றி



ஹிந்த் சைக்கிள்ஸ் லிமிடெட், 250 ஒர்லி,
பம்பாய்-18

ஹிந்த் சைகிள்களை மாதத் தவணை முறையில் பெறுவதற்குக் கீழ்க்காணும் விலாசதாரரை அணுகவும்

மெஸர்ஸ் ஓரியண்ட் கிரிடிட் கார்ப்பொரேஷன்
26, எர்ரபாலு செட்டித் தெரு, சென்னை-1 போன்: 4744

ஆறே மாதங்களில் இறந்து போனான். இது தவிர கரடி வேறு யாருடனோ — எந்த ஒரு பெண்ணுடனோ தொடர்பு கொண்டிருக்கலாம் என்றும் தோன்றியது. துன்பங்களின் சுமைதாங்காமல்தானே அவன் குடிக்கும் பழக்கத்தைக் கைக் கொண்டிருக்கிறான்? குடிப் பழக்கத்தைத் தொடர்ந்து வேறு என்னென்ன பழக்கங்கள்தாம் அவனுக்கு ஏற்பட்டிருக்கக் கூடாது?

அவன்மீதிருந்த அக்கறையினால் மட்டுமின்றி, இந்த விஷயங்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தினாலும் அவன் எங்கே தங்கியிருக்கிறான், என்ன செய்கிறான் என்பதைத் தெரிந்து கொள்ள முயன்றேன். என்ன முயன்றும் பல நாட்கள் வரை அவன் என் கண்ணில் படவேயில்லை.

அன்று கரடியைப் பற்றித்தான் ஏதோ சிந்தித்தவாறு நடந்து சென்று கொண்டிருந்தேன். சிவன் கோயில் குளத்துக்கருகில் ஒரே கூட்டமாக இருந்தது. அதைப் பொருட்படுத்தாமல் மேலே நடந்தேன். ஆனால் சிறுவன் ஒருவன் கூவிய சொற்கள் என் நெஞ்சைத் துளைத்து, என்னை அந்தக் கூட்டத்தருகே இழுத்துச் சென்றது.

“குளத்திலே கரடி......”

கூட்டம் அதிகமாக இருந்தது. விலக்கிக் கொண்டு உள் நுழைவது அவ்வளவு எளிதாக இல்லை. உண்மையிலேயே கரடி குளத்தில் விழுந்துவிட்டானோ என்ற திகிலுடன் குளத்தை எட்டிப் பார்த்தேன்.

குளத்தில் ஒரு கரடி குளித்துக் கொண்டிருந்தது — நிஜக்கரடி!

ஊரில் கொஞ்ச நாட்களாக ஒரு 'சர்க்கஸ்' நடைபெற்று வந்தது. 'சர்க்கஸ்' கொட்டகையைச் சேர்ந்த ஒரு சிறுவனும் கிழவனும் அந்தக் கரடியைக்குளிக்க வைத்துக் கொண்டிருந்தார்கள். கரடியைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்த போதே நிஜக் கரடியைக் கண்டதை எண்ணி நகைத்துக் கொண்டே அங்கிருந்து நகர முயன்றேன். ஆனால் அடுத்த கணமே அங்கு ஒரே கலவரமாகிவிட்டது. இமைக்கும் நேரத்தில் அந்தக் கரடி கிழவனைக் குளத்தில் தள்ளி விட்டுக் கட்டவிழ்த்துக் கொண்டு ஓடிவந்தது. மக்கள் மருண்டு போய்ப் பாய்ந்து ஓட்டமெடுத்தார்கள். கூச்சலும் கூப்பாடுமாக ஒரே ரகளையாகப் போய் விட்டது.

ஆனால் கரடி யாரையும் ஒன்றும் செய்யவில்லை. சற்றுத் தூரத்தில் இருந்த மைதானத்தின் நடுவில் போய் உட்கார்ந்து கொண்டது. அதற்குக் குளிக்க விருப்பமில்லை. அவ்வளவுதான்!

கரடி அமைதியாக இருந்ததைக் கண்ட மக்கள் அதைச் சுற்றிப் பெரிய வட்டமாகக் கூடி நின்றார்கள். ஆயினும் கிழவன் வந்து சங்கிலியைக் கையில் பிடித்துக் கொண்டு அதை ஆட்டிப் படைக்கும் வரையில் ஆபத்துத்தானே! அச்சம்தானே!

அப்போது யாருமே எதிர்பாராத வகையில் கூட்டத்தின் ஒரு மூலையிலிருந்து கரடி ஓடி வந்தான். வேகமாகப் பாய்ந்து சென்று கரடியைக் கட்டியிருந்த சங்கிலியைப் பிடித்துக் கொண்டான். கூட்டத்தினர் அச்சத்துடன் 'ஆய், ஊய்' என்று கூச்சலிட்டார்கள். ஆனால் அசல் நகலை ஒன்றும் செய்யவில்லை. சர்க்கஸ்காரர்கள் அதை நாய் போல் பழக்கியிருப்பார்கள். அது அமைதியாகக் கரடியின் பின்னால் சென்றது எல்லாருக்குமே ஆச்சரியமாக இருந்தது. அவன் அருகிலிருந்த விளக்குக் கம்பத்தில் அதைக் கட்டப்போனான். அதற்குள் அது 'டே'லென அவன் மீது பாய்ந்து அவனைக் கீழே தள்ளப் பார்த்தது. அவன் சமாளித்துக் கொண்டாலும் நான் கலங்கிப் போனேன். அவன் விளையாட்டு விபரீதமாகத் தோன்றியது. இரண்டு கால்களில் உட்கார்ந்து கொண்டு இரண்டு கால்களால் சண்டை போடுவது போல் கரடி அவனைத் தள்ளித்தள்ளிவிட்டது: திடீரென்று அவன் கரடியின்பின்னால் பாய்ந்து அதன் கழுத்தைக் கட்டிக் கொண்டு, “ஹை, ஹை...” என்று கூச்சல் போட்டான்: கூட்டத்தில் ஒரே ஆரவாரம். அதற்குள் ஈரத் துணியோடு அங்கு வந்து சேர்ந்த கிழவன் மனிதக் கரடியை விரட்டி விட்டு நிஜக் கரடியை இழுத்துச் சென்றான்.

கரடி எந்த வழியாகச் செல்கிறான் என்பதைக் கவனித்து அவனைப் பின் தொடர்ந்தேன். அவன் குறிப்பின்றி எங்கெங்கோ நடந்து சென்றான். எண்ணற்ற குடிசைகள் நெருக்கமாக இணைந்துக் கிடந்த பிரதேசத்துக்குச் சென்றவன் 'சட்'டென என் பார்வையிலிருந்து தப்பி மறைந்து போனான்.

எனக்கு ஒரே திகைப்பாகவும் ஏமாற்றமாகவும் போயிற்று.

அங்கேயே செய்வதறியாது நின்றேன்.

## 8. மனக் கடல்

சிற்சில சமயங்களில் தன்னையறியாது ஏதோ ஒரு வேகத்துக்கு ஆட்பட்டுச் செயலாற்றி விடுவது மனித இயல்பு. பின்னர் எண்ணிப் பார்க்கையில் நாம் ஏன் இப்படிப் பட்ட காரியத்தைச் செய்தோம் என்ற திகைப்பும் வெட்கமும் எழும். எனக்கும் அப்படித்தான் இருந்தது.

ஏதோ அறிமுகமானவன் என்பதைத் தவிர அந்தக் கரடிக்கும் எனக்கும் வேறு இணைப்பு ஏது? நான் ஏன் அவன் வாழ்க்கையில் அவ்வளவு தூரம் ஆர்வம் காட்ட வேண்டும்? என் நேரத்தை வீணாக்கி அவன் பின்னால் அத்தனை மைல்கள் நடந்து வந்து அங்கு நின்று கொண்டு நான் விழிப்பானேன்?

ஆயினும் உடனே நான் திரும்பி விடவில்லை. ஒரு மெல்லிய நம்பிக்கை என் நெஞ்சில் இழையிட்டது. சமீபத்தில் அவன் எங்கேயாவது



தான் போயிருக்க வேண்டும். திரும்பி வந்தாலும் வரலாமல்லவா?

அவ்வாறே ஆயிற்று. கரடி சிறிது நேரத்துக்கெல்லாம் திரும்பி வந்தான். மீண்டும் அவனைத் தவறவிட்டுவிடக் கூடாது என்ற எண்ணத்தில் "டேய், கரடி! நில்லுடா!" என்று கூவினேன். அவன் திரும்பிப் பார்த்துத் திகைத்து நின்றான்.

இயற்கையாக அவன் கூறும் 'வணக்கம் சார்! சலாம் சார்!' என்ற வார்த்தைகள் ஒன்றும் எழவில்லை. அவன் வேகமாக என் அருகில் வந்து, "சார்! ஒரு ரெண்டணா வேணுமுங்க!" என்றான். உடனே ஒரு ரூபாயை எடுத்துக் கொடுத்தேன்

முன்பு ஒரு முறை அவன் வாங்கி வைத்த காப்பிக்காக இரண்டணாவை அவனிடம் கொடுக்க மூன்று நாட்கள் முயன்று தோற்றதை எண்ணிக் கொண்டேன். வாழ்க்கை எப்படியெல்லாம் மாறிப் போகிறது!

ஒரு கண்ணுடைந்த தம்ளரில் பாலுடன் கரடி திரும்பி வந்தான்.

"சார், மீந்த ரூபாயை அப்புறமா திருப்பித் தர்றேன்!"

"சரிதாண்டா, அதுக்கென்ன?"

"இருங்க சார், இந்தப் பாலைக் கொடுத்துட்டு வந்திடறேன்!" என்று சொல்லிவிட்டு வேகமாக நடந்து சென்றான் அவன்.

நானும் அவனைப் பின்தொடர்ந்து சென்றேன். அவன் ஒரு சின்னஞ்சிறு குடிசையில் நுழைந்தான். நானும் தயங்காமல் அந்தக் குடிசைக்குள் நுழைந்தேன். முதலில் அவன் திடுக்கிட்டு, "நீங்களும் வந்துட்டீங்களா?" என்றான். பிறகு சமாளித்துக் கொண்டு, "வாங்க சார்!" என்று சொல்லி விட்டு, சற்றுத் தயங்கினான். உள்ளே ஒரு கிழவி கைக் குழந்தை ஒன்றைக் கையில் வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள்.

"பாட்டியம்மா யாருடா கரடி?"

"தெரிஞ்சவங்க சார்! குழந்தையை அவங்கதான் சார் பார்த்துக்கிறாங்க!"

"....."

"இவன்தான் சார், மிஸ்டர் கரடிக்குட்டி! இவன் பிறந்ததைப் பற்றி நான் உங்களுக்குச் சொல்லலே. பாட்டி! பால் வாங்கிட்டு வந்திருக்கிறேன். அவனுக்குக் கொடுங்க. நான் வர்றேன்."

கண்ணை சரேலென்று பாட்டியின் கையில் துவண்டிருந்த குழந்தையை ஒரு முறை பார்த்துவிட்டு, நானும் அவனோடு வெளியே வந்தேன்.

"என்னடா, கரடி! புதிர் போடுறே? உன் சம்சாரம்தான் ஆறே மாதத்திலே தவறிப் போயிட்டுதே?"

"ஆமாம், சார்!...ஆமாம்!" என்று பெருமூச்சுடன் அவன் சொல்லும்போதே இரண்டு துளி கண்ணீர் துளித்துத் தெறித்தது.

"அது அப்படித்தான் சார் ஆயிப்போச்சு! என் மாமன் என்னை ஏமாத்திட்டான் சார்!"

"என்னடா சொல்றே?"

"என்னத்தைச் சொல்றது? அவன்தான் சார், அந்தக் கருட்டை முடிக்காரன் இவளை மோசம் செய்துட்டு ஓடிட்டானாம் சார்! இவள் தற்கொலை பண்ணிக்கப் பார்த்தாளாம். எப்படியோ தடுத்து எனக்குக் கட்டி வைச்சுட்டான் சார், என் மாமன்."

எனக்குப் பேரதிர்ச்சியாக இருந்தது. அவன் ஆத்திரத்தைக் கட்டுப்படுத்த முடியாமல் கேவியழுதான்.

"எனக்குக் குழந்தை பிறக்கப்போகுதுன்னு மனசுக்குள்ளே எவ்வளவோ சந்தோஷமா இருந்தேன் சார்! எப்படியோ இந்தமாதிரி ஒரு மானக்கேடு எனக்கு ஏற்பட்டுப் போச்சுங்க! எல்லாத்தையும் அவளே சொன்னா. ஆறும் மாசமே இப்படி சேர்ந்து போச்சேன்னு நான் இடிஞ்சு போய்க் குமுறிப் போய் உட்கார்ந்திருந்தேன். பச்சை உடம்போடு அவள் எழுந்து வந்து என் காலைக் கட்டிகிட்டு அழுதா, சார்! குழந்தையோடு சாகறது பாவமாம்; அதனாலே ஆறு மாசமும் உயிரோடு இருந்தாளாம். கதறிக் கதறி அவ அழுதா, சார்...

"எனக்கு வெறி பிடிக்கப் போகுதுங்க. அவ கழுத்தைப் பிடிச்சு நெறிச்சேன்! ஆனால் ஒரே நிமிஷம்தானுங்க. எப்படியோ 'சட்'னு மனசு மாறிடுச்சு. ஆறு மாசமா அவ அழுது உருகிப் போனது நெனைப்பு வந்துச்சு. 'சரி, ஆனது ஆச்சு. இனிமேல் அதையெல்லாம் மறந்துடு. நானும் மறந்திடுறேன்'னு சொன்னேன்..... அவ 'கோ'ன்னு அழுதாங்க! கொஞ்ச நேரத்துக்கெல்லாம் காரியம் மிஞ்சிப் போச்சு. முதல்லியே அவ அரளிக் கொட்டையைச் சாப்பிட்டிருக்கா.... இல்லாட்டி......"

பேச நா எழாமல் நான் மௌனமாகவே இருந்தேன். கடைசியாக அவனே கூறினான்: "அவ செத்துப் போனதே நல்லதுதான், சார்! என் மனசை நம்ப முடியாதுங்க. நானே அவளைக் கொன்னுப் போட்டாலும் போட்டிருப்பேன். இப்ப கூடச் சில சமயம் ஒரே ஆத்திரமா வரும். சில சமயம் அழுகையா வரும். அதனால்தான் அந்தக் குழந்தைகிட்டே கூட நான் அதிகமா நெருங்கறதில்லே! எப்படியோ என் காலமும் ஓடிக்கிட்டு இருக்குதுங்க......"

இயற்கையாகப் பாய்ந்தோடும் காட்டாற்றின் கோலத்தையும் இனிய அருவியின் அமைதியான தோற்றத்தையும் ஒரே சமயத்தில் காண்பது போலிருந்தது எனக்கு. கரடி கண்ணீரைத் துடைத்து விட்டுக் கொண்டான்.

எங்கள் காரியாலயத்துக்குத் தவறாமல் வரும்படி அவனிடம் உறுதி பெற்றபின் நான் புறப்பட்டேன். ஆனால் அதன்பிறகு கரடியை நான் பார்க்கவே இல்லை. அவன் என்ன ஆனானோ!

பிரம்மாண்டமான மனித சமூகத்தில் அவன் அற்பமானதோர் அணுவைப் போன்று வந்தான். ஆனால் அந்த அணுவின் உள்ளே பிரம்மாண்டமானதொரு கடல் அல்லவா அடங்கி யிருக்கிறது? அந்த மனக் கடல் சில சமயம் அமைதியாகப் புன்னகை பூக்கிறது. சில சமயம் கொந்தளித்து எழுகிறது. அது எழுப்பிய 'ஓல்'லென்ற துயர ஒலிதான் உள்ளத்தில் பரவி நிறைந்தது.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

Crompton






Cromptonco மின்சார விளக்கு சாதனங்களை

உபயோகித்து உங்கள் வீட்டை சோபிக்கச் செய்யுங்கள்

கிராம்டன் இன்ஜினியரிங் கம்பெனி (மதராஸ்) பிரைவேட் லிமிடெட்

தபால் பெட்டி எண்: 205, செகண்ட் லைன் பீச், மதராஸ்-1

கிளைகள்: பெங்களூர் • கோயமுத்தூர் • மதுரை • செகந்திராபாத் • விஜயவாடா

JWT C

REGISTERED No. M. 4392

Registered as a Newspaper in Ceylon

30 ஆண்டுகளாக...
டால்டாவின் மேன்மையிலே
பற்றுள்ள மக்கள் பல்லாயிரம்
அதற்கு இவ்வளவும் குறையலாகுமோ
நம்மவர் மட்டும் ?




டால்டா
வனஸ்பதி
இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

DL. 64-50 TM